# தமிழ்ப் புதையல்





பேராசிரியர்

பாலூர். கண்ணப்ப முதலியார்

M. A., B.O.L.

# தமிழ்ப் புதையல்

2574

எழுதியவர் :
செந்தமிழ்ச்செல்வர்
பேராசிரியர்
**வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார், M.A., B.O.L.**
புதுக்கல்லூரி, சென்னை.

வெளியிடுவோர் :
சி. சுப்பையய செட்டி அண்டு கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை-5.


 1966 [விலை ரூ. 2-75.

# முகவுரை

தமிழ் மொழியில் உள்ள சமய நூல்களிலும் இலக்கியங்களிலும் புராணங்களிலும் அரிய கருத்துகள் புதை பொருள்களைப்போலப் பொதிந்துள்ளன. இந்த உண்மை தமிழ் நூல்களை ஆழ்ந்து அறிந்து காண்கிறபோது வெளிப்படுகிறது. இங்குள்ள கட்டுரைகள் யாவும் அங்ஙனம் ஆழ்ந்து அறிந்து கண்ட புதை பொருள்கள் ஆகும். இப்புதை பொருள்கள் தமிழ்ச்செல்வமாகிய புதை பொருள்கள் ஆதலின், இந்நூலுக்கு "தமிழ்ப் புதையல்" என்னும் பெயர் சூட்டப்பட்டது.

இந்நூலில் அமைந்த கட்டுரைகளை ஒரு முறை பயின்றால், உண்மையில் இவை யாவும் கிடைத்தற்கரிய புதை பொருள்களே என்பது நன்கு புலனாகும்.

இதில் அமைந்துள்ள கட்டுரைகள் ஒரே காலத்தில் எழுதப்பட்டவை அல்ல. அவ்வப்போது அன்பர்களின் வேண்டுகோட்கிணங்கி, நினைவு மலர்களிலும் திங்கள் தாள்களிலும், வார இதழ்களிலும், தினத்தாள்களிலும் எழுதப்பட்டவை.

இந்நூலைத் தமிழ் உலகம் ஏற்று, நல் ஆதரவு அளித்து, இத்தகைய கட்டுரைகளை மேல்மேலும் எழுத எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்குமாறு வேண்டிக்கொள்கின்றேன்.

"அம்மை அப்பர் அகம்"
43, விஜயவிக்னேஸ்வரர்
கோயில் தெரு,
சூளை, சென்னை-7.

பாலூர் கண்ணப்ப முதலியார்.

# உள்ளுறை





# தமிழ்ப் புதையல்



## 1. திருக்கடைக் காப்பு

**தோற்றுவாய்**

திருவளர்ந்தோங்கும் இப்பரதகண்டத்துள் தலை சிறந்து விளங்கும் உயர்தனிச் செம்மொழிகளில் நந்தம் நற்றமிழும் ஒன்றாகும். இம்மொழி தன்னகத்தே கொண்டுள்ள சிறப்புக்களில் ஒன்று, பழமொழிகள் பலவற்றையும் பெற்றிருப்பதாகும். அப்பழமொழி களில் ஒன்று, 'நாலுபேர் போனவழி நாமும் போக வேண்டும்' என்பது. இப்பழ மொழியின் பொருள் வளத்தை நன்குணர்ந்தே திருத்தக்கதேவர் தமது சிந்தாமணியில்,

'யாவ ராயினும் நால்வரைப் பின்னிடில்
தேவர் என்பது தேறும்இவ் வையகம்'

என்று இயைத்துப் பாடியுள்ளார். சைவசமயத்தவர் கள் கருத்துப்படி நாலுபேர் என்பவர்கள் ஒருவேளை சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்று யூகிக்க இடம் இருக்கிறது. இவர்கள் அறிவுறுத்திய மார்க்கம் (வழி) சத்புத்ரமார்க்கம், தாசமார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் என்பன. இத்தொடர்களின் பொருள் முறையே பிள்ளைமை நெறி, தொண்டு நெறி,

நட்பு நெறி, அறிவு நெறி என்பன. இறைவனை அடைய இந்நால்வகை நெறியினையும் பின்பற்றலாம். இம்முறையைச் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகியோர் நடந்து காட்டியுள்ளனர். அவர்கள் இவ் உலகில் வந்திலரேல், நீற்றின் மாண்பையோ, தமிழ் மறையின் தனிச்சிறப்பையோ ஐந்தெழுத்தின் மேன்மையையோ அறிந்திருக்கமாட்டோம். இது குறித்தே,

'சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்நம் சுந்தரனும்
சிற்கோல வாதவூர் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே? மாமறைநூல் தான்எங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே?'

என்ற பாடலும் எழுந்தது.

இத்தகைய பெருமைகட்கு உறைவிடமாகிய இந் நால்வர் திருவாய்மலர்ந்த திருப்பாடல்கள் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் முதல் எட்டுத் திரு முறைகளாக விளங்குகின்றன. அவற்றுள் முதல் ஏழு திருமுறைகள் தேவாரம் என்றும், எட்டாம் திருமுறை திருவாசகம் என்றும் கூறப்படும். இங்குத் தேவாரம் என்று கூறப்படுவது குறித்துச் சில குறிப்புக்கள் தர வேண்டியது இன்றியமையாததாகின்றது.

மூவர் முதலிகள் பாடிய திருப்பாடல்கள் தேவாரம் என்ற திருப்பெயரால் அறியப்பட்டு வருவனவாயினும், சிறிது ஊன்றி ஆய்ந்து பார்க்குங்கால், அவ்வாறு மூவர் பாடல்கட்கும் அப்பெயர் இருப்பதாகப் புலனாகவில்லை. ஒருவேளை இரட்டையர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில் வரும்,

'மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டும்'

என்பதைக்கொண்டு தேவாரம் என்ற பெயர் மூவர் பாடல்கட்கும் வந்திருக்கலாம். இரட்டையர் என்பார் இளஞ்சூரியர், முதுசூரியர் எனப்படும் இரு புலவர்கள். இவர்களுள் ஒருவர் முடவர்; மற்றொருவர் குருடர். இவர்கள் காலம் கி. பி. 15 ஆம் நூற்றுண்டு. இவர் கட்குப் பின்னர்ப் பதினும் நூற்றுண்டில் திகழ்ந்த தத்துவப்பிரகாசர், 'பேசுவது தேவாரமே அலால்' என்று கூறுவதும், மூவர் முதலிகளின் திருப்பாடல் களை உட்கொண்டே ஆகும். இவர்கட்கு முன்னர்த் திகழ்ந்தவர்களும், திருமுறைகளில் நன்கு மூழ்கியவர் களுமான நம்பியாண்டார் நம்பிகளோ, சேக்கிழார் பெருமானுரோ மூவர் பாடல்களைத் தேவாரம் என்று கூறிற்றிலர். இவர்கட்கு முன்னவரான பட்டினத்தடி களும், 'வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்' என்று தான் கூறிப் போந்தனர். அவரும் தேவாரம் எனச் செப்பிலர். ஔவையார் 'மூவர் தமிழ்' எனப் பாடி வைத்தனர். தாயுமானவர், 'மொழிக்கு மொழி தித்திப் பாக மூவர் சொலும் தமிழ்' என்றுதான் கூறினர்.

ஆனல், பதினைந்தாம் நூற்றுண்டினதான சிவப் பிரகாசப் பெருந்திரட்டின் வாயிலாகவும், பதினெட் டாம் நூற்றுண்டில் தோன்றிய சிதம்பர சுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகள் பாடிய நூல்களுக்கு எழுதிய உரைகளின் வாயிலாகவும் மூவர்கள் பாடிய திருப் பாடல்கட்குத் தனித்தனிப் பெயர்கள் இருப்பதை நாம் நன்ருகச் சிந்திக்கவேண்டியவராய் இருக்கின்ருேம். அவர்கள் திருஞானசம்பந்தர் திருப்பாடல்களைத் திருக்

கடைக்காப்பு என்றும், திருநாவுக்கரசரது திருப்பதிகங்களைத் தேவாரம் என்றும், திருநாவலூரரது திருப்பாடல்களைத் திருப்பாட்டு என்றும் சுட்டிச் சென்றுள்ளனர். பானை சோற்றில் ஒரு சோறு பதம் காண்பார்போல் காண விழைவார், அவிரோத உந்தியாரில் வரும் பதினேழாம் பாடலின் உரையில் இவ்வுண்மையினைக் காணலாம். சுந்தரரது பாடல்கள் திருப்பாட்டுத்தான் என்ற குறிப்பை இராமலிங்க வள்ளலாரும், 'தேன் படிக்கும் அமுதாம் உன் திருப்பாட்டை' என்றே குறிப்பிடுகிறார். சிவப்பிரகாச சுவாமிகளும், 'படியிலா நின் பாட்டில்' என்று பாடுகிறார். இதனால் சிதம்பரசுவாமிகளின் உரைகொண்டு திருஞானசம்பந்தர் திருவாக்குகள் திருக்கடைக்காப்பு என்பது தெரியவருகின்றது. ஆனால், தேவாரம் என்பதற்கு உரிய பொருள்தான் என்ன எனில், அது வழிபாடு, போற்றப்படுவது, பூசிக்கப்படுவது என்னும் பொருளதாம்.

இவ்வாறான பொருளை முறையே இராஜராஜன் கல்வெட்டில் 'தேவாரத் தேவராக' என்றும், குலோத்துங்கன் கல்வெட்டில், 'தேவாரம் செய்து' என்றும், திருவாய்மொழி முப்பத்தாறாயிரப்படி ஜீயர் அரும்பத உரை ஈடு ஆறு. எட்டாம் பத்து பத்தாம் பாசுரத்து உரையில் 'திருகார்ச ஸை என்றும் வருவதால் அறியலாம்.

திருக்கடைக்காப்பு எனச் சிரபுரச் செம்மலார் பதிகங்கட்கு ஏன் பெயர் அமையவேண்டும்? காரணம், அன்னார் திருப்பதிகங்களின் ஈற்றில் அவ்வப்பதிகங்களைப் பாடுதலால் பெறக்கூடிய பயனையும், தம் திருப்பெயரையும் அமைத்துப் பாடிக்கொண்டே சென்றுள்ளார் ஆதலின் என்க. மேலும், கடைசிப்பாட்டில்

இவ்வாறான ஒரு முறையினைக் கையாண்டு சென்றிருப்ப தனால் 'திரு' என்னும் அடைமொழியினை இணைத்து அப் பாட்டைத் திருக்கடைக்காப்பு என்றனர் அறிஞர்கள்.

அற்றேல், மணிமொழியாரும், 'பொருளுணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்ப் பல்லோரும் ஏத்தப் பணிந்து' என்று பயன் கூறியிருப்பதாலும், ஆளுடைய அரசரும்,

'நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்கண் இல்லையே'

என்று பாடியிருத்தலாலும், ஆளுடைய நம்பிகளும் தாம் பாடிய திருப்பாட்டுக்களின் இறுதிதோறும் தம் பெய ரையும், பாடுதலால் வரும் பயனையும் சுட்டியிருப்ப தாலும், அவைகளையும் திருக்கடைக்காப்பு எனல் ஒண்ணாதோ எனில், ஒண்ணாது என்க.

ஆளுடைய அடிகளார் திருக்கடைக்காப்புக்கு எனத் தனிப்பாடல் பாடி அமைத்திலர். முதல் பாட்டில் மட்டும் பயனை இறுதியில் இயைத்துப் பாடிச் சென் றனர். ஆளுடைய அரசர் திருக்கடைக்காப்புச் செய்யுள் ஒன்றேதான் பாடினர். பதிகந்தோறும் பாடிற்றிலர். மேலும், இவ்விருவரும் பயனைமட்டும் கூறினரே அன்றித் தம் திருப்பெயர் இலங்கப் பாடிற்றிலர். ஆகவே, அவர்கள் பாடிய பாடல்கள் திருக்கடைக்காப்பு என் னும் பெயர்க்கு உரியன அல்ல. ஆளுடையநம்பிகள் திருஞானசம்பந்தரைப்போலத் தம் பெயரையும், பயனை யும் பாடியுள்ளாரே எனில், நம்பி ஆரூரர் ஆளுடைய பிள்ளையார்க்குப் பிற்பட்டவர் ஆதலின் அவரது அடி யொற்றிப் பாடினமையின், அவர்தம் திருப்பாட்டுக்கள் திருக்கடைக்காப்பு என்னும் பெயரைத் தாங்குதற்கு

இல்லை. திருக்கடைக்காப்புக்கு உரியவர் திருஞானசம்பந்தரே. இதில் ஐயமில்லை. அவர் ஒவ்வொரு பதிகத்து ஈற்றுப் பாடலிலும் தம் பெயரை இயைத்துப் பாடியிருத்தலாலும், இறைவனும். மூவர் பாடல்களைப் பற்றித் தம் கருத்தைக் கூறினார் என வழங்கும் தொடர்களாம் 'சம்பந்தன் தன்னைப் பாடினான், சுந்தரன் பொன்னுக்குப் பாடினான், என் அப்பன் என்னைப் பாடினான்' என்று வருவதாலும் சம்பந்தர் தம் பெயரை ஈற்றுப்பாடலில் இயைத்துப் பாடினார் என்பதைத் தெளியலாம். இவ்வாறு இருக்க, ஒரு சிலரிடை 'சிரபுரக்கோனாரது ஒவ்வொரு திருப்பதிகங்களில் வரும் இறுதிப்பாடல் அவரால் பாடப்பட்டது அன்று. அவர்மாட்டுப் பேரன்பும் பெருமதிப்பும் கொண்ட ஒருவரால் பாடப்பட்டது ஆகும்' என்னும் கருத்து நிலவியுள்ளது. எனவே, அத்தகையவர்கள் உளம் கொள்ளும் முறையில் திருக்கடைக்காப்புச் செய்யுட்களைப் பாடியவர் திருஞானசம்பந்தரே என்பதை நிலைநாட்டவே இக்கட்டுரை எழுந்தது.

### திருக்கடைக்காப்புச் செய்யுள் திருஞானசம்பந்தருடையதே

வெங்குரு வேந்தனார், இறுதி வரையில் திருக்கடைக்காப்புச் செய்யுளைப் பாடவேண்டியது இன்றியமையாததாயிற்று. காரணம், புகலிவேந்தர் பொலிவுற்ற காலத்தில் வேற்றுச் சமயங்கள் ஆங்காங்குச் சென்று தம் மதத்தின் சிறப்பையும், அம்மதத்தில் சேர்வதால் பெறக்கூடிய பயனையும் மக்களிடையே கூறி மக்கள் பலரையும் தம் மதத்தில் ஈர்த்து வந்தன ஆதலின் என்க. வேணுபுர வேந்தனார் மக்கட்குச் சைவசமயத்தின் மாண்பைப் புலப்படுத்தும் முறையில்

சிவபெருமான் பெருமையும், அப்பெருமான்மீது பாடப் பட்ட பாடல்களைப் பாடுவதால் பெறக்கூடிய பயன் களையும் இயைத்துப் பாடி, இவ்வாறு கூறுதற்கு உரிய வன் எல்லாப் படியாலும் தகுதியுடையவனே என்று அறிவிக்கப் படர்க்கையில் தம் பெயரைச் சுட்டிப் பாடினரே அன்றித் தம் பெருமை தோன்றப் பாடினர் அல்லர். அமயம் வரும்போது அறிஞர் தம்மைப் புகழ்ந்துகொள்வது இலக்கண மரபே அன்றி இழுக் கன்று.

'மன்னுடை மன்றத் தோலை தூக்கினும
தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவைஇடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும்புல வோர்க்கே'

என்று கூறும் தமிழ் நூற்பாவைக் காண்க.

இதனால் திருஞானசம்பந்தரே திருக்கடைக்காப்பி னைப் பாடினர் என்பதற்கு இதனை முதற்காரணமாகக் கொள்ளவும்.

சண்பையர் செம்மலார் தாம் பாடியுள்ள திருக் கடைக்காப்புச் செய்யுட்களைத் தாம் எந்த யாப்பில் பதிகத்தினைப் பாடினரோ, அதே யாப்பிலேயே திருக் கடைக்காப்புச் செய்யுளைப் பாடியுள்ளார். பிறர் பாடி யிருப்பின், யாப்பு அமைதி மாறுபட்டிருக்கும். ஆகவே, இஃது இரண்டாவது காரணமாகும்.

காழிப்பதிக் காவலர் தாம் பிறந்தருளிய பதியாகிய சீர்காழியைப்பற்றிப் பாடியுள்ள திருப்பதிகங்களில் அப்பதிக்குரிய பன்னிரண்டு பெயர்களையும் பொருத்தி ஒவ்வொரு பெயர்க்கும் ஒவ்வொரு பாடலைப் பாடியுள்ள

பதிகங்களும் உள்ளன. அச்சந்தர்ப்பங்களில் அப்பதிகங்கள் பன்னிரண்டு திருப்பாடல்களால் அமைக்க வேண்டியது இன்றியமையாததாயிற்று. அங்ஙனம் பாடிய முறையிலும் பன்னிரண்டாவது திருப்பாடலினைத் திருக்கடைக்காப்புச் செய்யுளாக அமைத்துக் கொண்டனர். திருக்கடைக்காப்பினைத் தாம் பாட வேண்டிய முறையினைக் கைக்கொள்ளாமல் இருப்பரேல் பன்னிரண்டாவது திருப்பாடலைப் பிரமபுரத்துக்குரிய பன்னிரண்டு பெயர்களில் ஒன்றற்குரிய பாடலாக அமைத்து வாளாச்சென்றிருப்பர். அவ்வாறு செய்திலர். பன்னிரண்டாம் பாட்டினைத் திருக்கடைக்காப்பும் சீர்காழிப்பதியின் பன்னிரண்டாம் திருப்பெயரும் பொருந்தவே பாடித் தாமே திருக்கடைக்காப்புச் செய்யுட்குரியவர் என்பதை அறிவித்துள்ளார். இது மூன்றுவது காரணம்.

திருஞானசம்பந்தர் பாடியுள்ள பாடல்களில் திருஎழு கூற்றிருக்கை என்பதும் ஒன்று. அது பதிகமுறை போன்று பத்துப் பாடல்களால் அமைந்ததன்று. அஃது ஒரே பாடலாகும். அப்பாடலின் இறுதியில் 'கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை' என்ற அடி காணப்படுகிறது. இவ்வாறு இப்பாடலில் கூறப்பெறுமல் விட்டிருந்தாலும், தனியே ஒரு பாடல் திருக்கடைக்காப்பிற்கென அமைந்திருந்தாலும் திருக்கடைக்காப்புச்செய்யுள் பிறரால் பாடப்பட்டதென்று கருதுதற்கு இடனுண்டு. எனவே, திருக்கடைக்காப்பைப் புகலி வேந்தரே புகன்றனர் என்பது புலனுகிறது. இது நான்காம் காரணம்.

இரண்டாம் திருமுறையில் திருக்கோவலூர் வீரட்டானப் பதிகத்துள் ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'வீரட்டானம் சேர்துமே' என்னும் தொடர் காணப்

படுகிறது. இந்தத் தொடர் திருக்கடைக்காப்புச் செய்யுளின் இறுதியடியிலும் காணப்படுகிறது. பிறர் பாடி இருப்பின் இவ்வாறு கூறத் துணிவு வராது. வாளா பயனும் பெயரும் மட்டும் அமையப் பாடிச் சென்றிருப்பர் அல்லரோ? ஆகவே, இஃது அவராலே பாடப்பட்டதற்குரிய ஐந்தாவது காரணமாகும்.

இரண்டாம் திருமுறையில் திருநனிப்பள்ளிப் பதிகத்தும், கோளறு பதிகத்தும், மூன்றும் திருமுறையில் திருவேதிகுடிப் பதிகத்தும் திருக்கழுமலப் பதிகத்தும் திருக்கடைக்காப்பினை அமைக்கும்போது முறையே, 'வினைகெடுதல் ஆணை நமதே' என்றும், 'வானில் அரசாள்வர் ஆணை நமதே என்றும், 'அந்த உலகெய்தி அரசாளும் அதுவே சரதம் ஆணை நமதே' என்றும், 'வான் இடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற்கு ஆணையும் நமதே' என்றும் ஆணையிட்டு, 'நமதே' எனப் பன்மை மொழியிலும் பாடும் உரம் பிறர்க்கு வர இயலுமோ? மேலும், கோளறு பதிகத்தின் பொருளின் இயைபு திருக்கடைக்காப்புச் செய்யுளில் இயையும் வண்ணமாக 'தானுறு கோளும் நாளும் அடியாரை வந்து நலியாதவண்ணம் உரைசெய் ஆன சொல் மாலை' என்றன்றோ பாடப்பட்டுள்ளது? ஆணை நமதே என்று இத்துணை வலிவுடன் இசைத்ததன் கருத்து, தாம் பாடும் திருப்பாடல்கள் இறைவன் தம் உள்ளத்திலிருந்து உரைக்கத் தாம் உரைக்கின்றார் என்பதை வற்புறுத்தவே ஆகும். இந்த உண்மையினைச் சம்பந்தரே 'எனதுரை தனதுரையாக' என்று குறிப்பிட்டிருப்பதனால் நன்கு உணர்ந்துகொள்ளலாம். ஆகவே, இஃது ஆறுவது காரணம்.

மூன்றும் திருமுறையில் வரும் திருப்பிரமபுரப் பதிகத்தில் பத்தே பாடல்கள் உள்ளன. அப்பத்துப் பாடல்களுள் இறுதிப்பாட்டு, திருக்கடைக்காப்புப் பாடலாகும். இத்திருக்கடைக்காப்புச் செய்யுள் பிறரால் பாடப் பட்டிருக்குமேல், இப்பதிகம் ஒன்பது பாடல்களால் முடிந்திருக்கவேண்டும். அங்ஙனம் முடிந்திருப்பின் பதிகம் என்னும் பெயர்க்கு உரியதாகாது. பதிகம் என்பது பத்து அல்லது பதினொரு பாடல்களால் அமைதல்வேண்டும். ஒரு பாடல் மிகுதிப்பட்டாலும் இழுக்கில்லை. குறைதல்தான் கூடாது. ஆகவே, இவரே திருக்கடைக்காப்பினைச் செப்பினர் என்பதற்கு இஃது ஏழாவது சான்றாகும்.

இரண்டாம் திருமுறையில் காணப்படும் சித்திரக் கவியாகிய 'திருக்கோமூத்திரி' என்னும் திருப்பிரமபுரப் பதிகம் அந்தாதித்தொடை அமையப் பாடப்பட்டுள்ளது. அப்பதிகத்தில் பதினோராம் பாட்டின் இறுதியும் பன்னிரண்டாம் பாடலின் முதலும் இயையும் முறையில் அந்தாதி இலக்கணம் கெடாத நிலையில் அமைந்துள்ளது. திருஞானசம்பந்தரே அப்பன்னிரண்டாவது பாடலாகிய திருக்கடைக்காப்புச் செய்யுளைப் பாடினமையால்தான் அவர் அந்தாதித்தொடை முரணுதவாறு முடித்துக் காட்டினர். பிறர் பாடி இருப்பரேல் இந்த இயைபு இன்றித் தனிப்பாடலாக அஃது அமைந்திருக்கும். எனவே, இஃது எட்டாவது காரணம்.

'இங்ஙனம் எல்லாம் இயைத்து இயைத்துக்கூறிச் செல்வானேன்? திருஞானசம்பந்தர் தமது திருப்பெயரைப் படர்க்கையில் வையாது தன்மையிடத்தில் வைத்து 'நான் பாடிய இப்பதிகத்தைப் பாடின் பயன்

இஃது என்று கூறிச் சென்றிருக்கலாமே' என ஒருசிலர் வினவவும் கூடும். திருஞானசம்பந்தர் இவ்வாறு ஓர் ஐயம் எழுக்கூடும் என்பதற்காகவே ஓர் இடத்தில் மட்டும் தம்மைப் படர்க்கையில் வைத்துப் பாடாது தன்மையில் வைத்தே பாடியும் உள்ளார். இதனை மூன்றும் திருமுறையில் திருவாலவாய் திருவியமகப் பதிகத்துள் வரும் திருக்கடைக்காப்பில் 'நான் உரைத்தன செந்தமிழ்ப் பத்துமே' என்று வரும் தொடரில் காணலாம். இதைவிட வேறு அகச்சான்றும் வேண்டுமோ? ஆதலின், இஃது ஒன்பதாம் காரண மாகும்.

சேக்கிழார் பெருமானுர் திருவாக்குகளைக்கொண்டும் திருக்கடைக்காப்புச் செய்யுளைச் செப்பியவர் திருஞானசம்பந்தரே என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறிவிடலாம். சேக்கிழார் பெருமானுர், 'இன்ன தன்மையில் இன்னிசைப் பதிகமும் திருக்கடைக்காப்பும் ஏத்தி' என்றும், 'பன்னு தமிழ்மறையாம் பதிகம் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்தி' என்றும், 'தூய பதிகத் திருக்கடைக்காப்புத் தொடுத்து அணிய' என்றும், 'ஓங்கு திருக்கடைக்காப்புச் சாத்தி' என்றும் பல்வேறு சந்தர்ப்பங்களில் பாடிக் காட்டுதலின் திருக்கடைக்காப்புச் செய்யுளைப்பாடியவர் ஞானசம்பந்தரே என்பதில் தடையுண்டோ? எனவே, இஃது பத்தாவது காரணமாகும்.

இங்ஙனம் அசைக்க ஒண்ணு அகப்புறச் சான்றுகளால் திருக்கடைக்காப்புப் பாடல் திருஞானசம்பந்தராலேயே பாடப்பட்டது என்னும் உண்மை அறியவந்தும், சிலர் திருஞானசம்பந்தர் தம்மைத்தாமே 'மிகுகலை பயில் புலவர்கள் புகழ்வழி வளர்தரு இசையமர் கழுமல நகர்

இறை' என்றும், 'திறலால் மிக்க ஞானசம்பந்தன்' என்றும், 'தன் ஒளிமிக்கு உயர்ந்த தமிழ் ஞானசம்பந்தன்' என்றும், 'மெய்ஞ்ஞான பூசுரன்' என்றும், 'கைதவம் இல்லாக் கவுணியன்' என்றும், 'பழுதில் ஞானசம்பந்தன்' என்றும், 'நல்லார் பரவப்படுவான்' என்றும், 'இணையில் சம்பந்தன்' என்றும், 'சிலமிக்க சிரபுரக்கோன்' என்றும், 'அழகார் சம்பந்தன்' என்றும், 'இன்சொல் சம்பந்தன்' என்றும், 'நல்வித்தகத்தால் இனிது உணரும் ஞானசம்பந்தன்' என்றும், 'இகலறு ஞானசம்பந்தன்' என்றும், 'செந்தமிழ் வல்லவன்' என்றும், 'முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன்' என்றும், 'பல்கலையான்' என்றும், 'வேதியர் அதிபதி' என்றும், 'கழுமலத்தார் காவலன்' என்றும், 'நண்புடை ஞானசம்பந்தன்' என்றும் பாடி இருத்தலின், 'அவர் இவ்வாறு தம்மைப் புகழ்ந்துரையார் ஆதலின், அத் திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் அவரால் பாடப்பட்டிரா' என்று கூறுகின்றனர்.

## தம்மைப் புகழ்ந்து கொண்டதில் தவறு இல்லை

பிரமபுரத்துப் பெருந்தகையார் தம்மிடத்து மேலே புகழ்ந்துகொண்ட தன்மைகள் அனைத்தும் பொருந்தியிருத்தலினால் அன்றோ, தம்மை அங்ஙனம் புகழ்ந்து கொண்டனர்? 'உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதம்' என்று ஏழு பிறவிகளில் எடுக்கக்கூடிய உயிர்த்தொகை இத்துணை என்று பாடியுள்ளார். 'காவினையிட்டும், குளம் பல தொட்டும் களி மனத்தால் பூவினைக் கொய்து மலரடி போற்றுதும்' என்றும், 'யோசனை போய்ப் பூக்கொணர்ந்து அங்கு ஒருநாளும் ஒழியாமே பூசனை செய்து' என்றும், 'ஊனில்

உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர், ஞானவிளக்கினை ஏற்றி' என்றும், 'அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானப்புகலுடையோர்' என்றும் பாடி, முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். 'ஊமனார்தம் கனவாக்கினான்' 'பாம்பின்வாய்த் தேரை' என்ற பழமொழிகள் அவர்தம் வாக்கில் வந்துள்ளன. நன்மறையவன் தன் மேலடர் வெங்காலன் உயிர் விண்டபின் நமன் தூதர் ஆலமிடற்றான் அடியான் என்று அடர அஞ்சுவரே' என திருவெண்காட்டுத் தலநிகழ்ச்சிகளில் ஒன்றைப் பாடியுள்ளார். 'நன்மறையவன் என்பவன் மார்க்கண்டேயன் அல்லன். ஈண்டு 'வேதராசி' என்பவன். 'ஒன்பதொ டொன்றொ டேழுபதி னெட்டோடாறும் உடனாய் நாள்கள்' என்றும், 'புயல் மறந்து மீன்சனி புக்கு ஊன்சலிக்கும் காலம்' என்றும் பாடிச் சோதிடப் புலமையினை வெளிப்படுத்தியுள்ளார்.

ஒன்பதொ டொன்று' என்ற அடியின் குறிப்பு, பயணத்துக்கு ஆகாத நட்சத்திரங்களைக் குறிப்பதாகும். அந்நட்சத்திரங்கள் இன்ன என்பதையும் அந்நாட்களில் பயணப்பட்டால் என்ன நிகழும் என்பதையும் கீழ்வரும் சோதிடநூல் பாட்டால் தெளிக.

'ஆதிரை பரணி ஆரல்
ஆயில்யம் முப்பூரம் கேட்டை
தீதுறு விசாகம் சோதி
சித்திரை மகம்ஈ ராறும்
மாதனம் கொண்டார் தாரார்
வழிநடைப் பட்டார் மீளார்
பாய்தனில் படுத்தார் தேறார்
பாம்பின்வாய்த் தேரை தானே'

2514



இவ்வாறு இருத்தலின், அன்னார் 'மிகு கலைபயில்' என்றும், 'பலகலை வலான்' என்றும் கூறுவது பொருத்தம் அன்றோ? இவர் காலத்தில் திருநாவுக்கரசரைவிடப் பெரும்புலவர் யார் இருக்கக்கூடும்? அவரால் இவர் புகழப்பட்டதை 'கழுமல ஊரர்க்கு அம்பொன் ஆயிரம் கொடுப்பர்போலும் ஆவடு துறையனாரே' என்ற அடிகளில் காணும்போது, 'புலவர்கள் புகழ் வழிவளர்' என்று பாடிக்கொண்டது பழுதாமோ?

கொச்சைவயக் கோமகனாரைச் சீர்காழிப்பதியில் இருந்தவர்கள் புகழ்ந்து போற்றி வணங்கினர் என்பதைக் குன்றைக் கோமகனார், 'இருக்குமொழி அந்தணரும் ஏனையோரும் நின்று துதிசெய்து அவர்தாள் நீள் முடிக்கண்மேல் ஏந்தி' எனப் பாடியுள்ளமையின், 'கழுமல இறை' என்றும், 'சிரபுரக்கோன்' என்றும் செப்பிக்கொண்டது சிறப்பே ஆகும்.

திருமருகலில் பாம்பு கடித்து இறந்த வணிகனை எழுப்பப் பாடிய பதிகத்தும், முயலகன் நோயைத் தீர்க்க முனைந்தபோது பாடிய பதிகத்தும், சமணர்களிடையே இருந்தபோதும் முறையே 'தகுமோ இவள் உள் மெலிவே' என்றும், 'மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே' என்றும், 'எளியேன் அலேன்' என்றும் பாடியுள்ளமையில் இவர் 'திறலால் மிக்க ஞானசம்பந்தர்தாமே?

திருஞானசம்பந்தர் புகழ் தமிழ்நாடு எங்கும் பரவியிருந்தது என்பதைத் தொண்டர்சீர் பரவுவார், 'ஊனமில் புகழ் அடியவர்பால் கேட்டு' எனச் சிவநேசச் செட்டியார் கேட்டதையும் 'மங்கையர்க்கரசியாரும்,

குலச்சிறையாரும் கேட்டதையும் பாடியுள்ளமையினு லும் 'நனிமிக் குயர்ந்த செந்தமிழ்' ஞானசம்பந்தர் ஆயினர்; 'புகழ்நின்ற தமிழ் ஞானசம்பந்தர்' ஆயினர்.

இறைவியார் கொடுத்த திருமுலைப்பாலினைப் பருகிய தும் சிவஞானம், ஓங்கிய ஞானம், கலைஞானம், மெய்ஞ் ஞானம் ஆகியவற்றை அப்பொழுதே உணர்ந்தார் என் பது அனுபவ ஞானியாம் சேக்கிழார் அற்புதவாக்கு அன்றோ? எனவே, அவர் 'மெய்ஞ்ஞான பூசுரன்' என்பதிலும், 'ஞானத்து உயர் சம்பந்தன்' என்பதிலும் இழுக்குண்டா?

சம்பந்தர் எழுந்தருளியிருந்த திருமடத்தில் சம ணர்கள் தீயினை இட்டபோது, அங்ஙனம் இட்டவர் சமணர்களே என்று அறிந்தும், அத்தீயைச் 'சமணர் இடமே சேர்க' என்னாது, 'பாண்டியனை அடைக' என்ற கருத்தில், 'அமணர் கொளுவும் சுடர் பையவே சென்று பாண்டியர்க் காகவே' என்று பாடியிருப்பது அவர்க்குச் சமணர்மாட்டுப் பகையோ வஞ்சகமோ இல்லை என் பதைக் காட்டுகிறதன்றோ? ஆகவே, அவர் தம்மை 'இகலறு ஞானசம்பந்தன்' என்றும், 'கைதவம் இல்லாக் கவுணியர்' என்றும் கூறிக்கொண்டது கசடாகுமோ?

கூன்பாண்டியனது சுரநோயைத் தீர்க்கச் சமணர் பல்லாற்றானும் முயன்றனர். அந்நிலையில் நந்தம் ஆளுடைய பிள்ளையார் திருநீற்றைப்பூசி அந்நோயினைப் போக்கினர். இவ்வாறு பிறர் செய்ய இயலாததை இவர் செய்து காட்டியதாலும், அவர்களோடு கனல் வாதம், புனல் வாதம் முதலானவற்றைத் தொடங்கி வெற்றி கண்டதாலும் இவர் அடியவர்கட்கு ஆபத்துக் காலத்தில் உதவவல்லது பஞ்சாக்கரமே என்பதை,

'வித்தக நீறணிவார் வினைப்பகைக்கு அத்திரமாவன அஞ்செழுத்துமே' என்று பாடியிருப்பதாலும், இவர் 'இணையில் சம்பந்தன்' என்று இயம்பிக்கொண்டதில் இழுக்கு என்னை?

புகலிவேந்தரது புனிதத் திருவாக்கால் எலும்பு பெண்ணாயது. அப்பெண்ணின் அழகினைச் சேக்கிழார், 'அழகினுக்கு அணியாய் நின்றாள்' என்று கூறியுள்ளார். அத்தகைய பேரழகுடைய பெண்ணினைப் பெற்ற சிவ நேசச் செட்டியார் திருஞானசம்பந்தரை மணந்து கொள்ளுமாறு வேண்டினர். அதுபோது ஆளுடைய பிள்ளையார் புண்ணியப் பதினாறுண்டைப் பொலிவுடன் பெற்றிருந்தும், அவ்வடிவத்தினைக் கண்ணுதல் கருணை வெள்ளமாகக் கண்டு, 'உரை தகாது' என்று மொழிந் திருப்பாராகல் 'சீலமிக்க சிரபுரக்கோன்' என்று தம் மைச் சிறப்பித்துக்கொண்டது சிறப்பே அன்றோ?

மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் சம்பந் தப்பெருமானைக் காண்கிறார்கள். அவர்கள் கண்ட காட்சியினைச் சேவையர் காவலர், 'ஞானத்தின் திரு வுருவை' 'மண்ணில் வளர் மதிக்கொழுந்தைக் கண் களிப்பக் கண்டார்கள்' என்பதனால், கழுமல நகரத்துக் காவலனார் கவின்புலப்படுதலின், 'அழகார் சம்பந்தன்' என்று தம்மை அறிவித்திருப்பது முறையே ஆகும்.

குலச்சிறையாரைச் சந்தித்தபோது அவரைத் 'திருந்திய சிந்தையீர்!' என்று விளித்ததோடின்றிக் குல மகளார்க்கும் உமக்கும் திருவருள் பெருகும் நன்மை தான் வாலிதோ?' என்று வினயமாக வினவுவாராயின், அவர் 'இன்சொல் ஞானசம்பந்தர்'தாமே? இதில் என்ன ஐயம்?

பாண்டியன் அவைக்களத்தில் பருவுடல் கொண்ட சமணரிடையே திருஞானசம்பந்தர் தமது இளமை வடிவுடன் வீற்றிருந்தனர். இந்நிலையினைக் கண்ட மங்கையர்க்கரசியார் மருண்டு மருண்டு சபையினை நோக்குவாராயினர். இதனை உணர்ந்தார் புகலிவேந்தர். அதுபோது அவர்தம் திருவாயினின்று 'மானினேர்விழி மாதராய் வழுதிக்கு மாபெருந் தேவிகேள்.......பானல்வாய் ஒரு பாலன் ஈங்கிவன் என்று நீபரி வெய்திடேல்........ எளியேன் அலேன்' என்று திறலார் சம்பந்தர் செப்புந் திறன், அன்னார் எதையும் தமது வித்தகத்தால் இனிது உணரும் உணர்வைக் காட்டுதலின், அவர் 'வித்தகத் தால் இனிது உணரும் ஞானசம்பந்தன்' என்று பாடிக் கொண்டது பழுதெனப் பகரலாமா?

'வேதம் நான்கினுள் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சி வாயவே' என்றும், 'செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்செழுத் துமே' என்றும் சம்பந்தரே பாடியிருப்பதாலும், தமக்கு உபதேசம் செய்யவந்தவர்க்குப் 'புகலியில் வந்த புண் ணியனார் எண்ணிறந்த வேதம் ஓதினார்' எனவும், 'சுருதி ஆயிரம் ஓதி அங்கமான தொல்கலைகள் எடுத்துஇயம்பும் தோன்றலார்' எனவும், சேக்கிழார் சம்பந்தரது வேத நூற் பயிற்சியினைப் பாராட்டுவதனாலும், வெங்குரு வேந்தர் வேதம் அறிந்த வித்தகர் ஆவர். அவர் தம்மைப் பல்வேறு இடங்களில், 'நான்மறை ஞான சம்பந்தன்' என்றும், 'மறைஞான சம்பந்தன்' என்றும் மாண்புற மொழிந்திருப்பது மாட்சிமையே அன்றி, மாசுடையதாகாது.

திருஞானசம்பந்தர் தம் காலத்து இருந்த முருக நாயனுரை, 'தறிப்பு அறி முருகன்' என்றும், சிறுத் தொண்டரை அவர்தம் திருமகனுர் பெயருடன் இணைத்துச் 'சீராளன் சிறுத்தொண்டர்' என்றும், திரு நீலநக்கரை 'நீலநக்கர் நெடுமாநகர்' என்றும், மங்கை யர்க்கரசியாரை 'பத்தி ஆர்கின்ற பாண்டிமாதேவி' என்றும், குலச்சிறையாரை, 'கோவணப்பூதி சாதனம் கண்டால் தொழுதெழு குலச்சிறை' என்றும் உளம் கலந்த அன்பால்பாடி இருப்பதைக் கண்ணுறும்போது, அவர்க்கு இவர்கள்பால் நண்பும் அன்பும் கலந்திருந்தன என்பது வெள்ளிடைமலை அன்ருே? அவ்வாறு இருக்க அவர் தம்மை 'நண்புடை ஞானசம்பந்தன்' என்று கூறிக்கொண்டதில் குற்றம் என்னே?

'வாழ்க அந்தணர்' என்னும் பாசுரம் தொல்காப்பி யத்துள் வரும் 'அமரர்கண் முடியும் அறுவகையானும்' என்னும் நூற்பாவை ஒட்டியதாகும். அதற்குரிய உரையினேக் காணும்போது இந்த உண்மை புலனுகாது போகாது. சம்பந்தரது திருப்பாடல்களில்,

'உழுது மானிலத் தேன மாகிமால்
தொழுது மாமல ரோனும் காண்கிலார்
கழுதி னுன்கரு வூருள் ஆனிலை
முழுது மாகிய மூர்த்தி பாதமே'

என்பது பூட்டுவில் பொருட்கோட்கு ஓர் எடுத்துக் காட்டாகும். 'மென்மொழியார் பாலகரைப் பாராட்டும் ஓசை கேட்டு, விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத் தோடும் இழியும் மிழலை' என்று அவர் பாடி இருப்பது உயர்வுநவிற்சி அணிக்கு உதாரணமாகும். இவரது பாடல்களில் திருவியமகம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை,

மாலைமாற்று, கூடச்சதுக்கம், கோமூத்திரி முதலிய பல கவிகைகள் வருகின்றன. இவைகள் யாவும் இவரது யாப்பிலக்கண அறிவையும் மிறைக்கவிபாடும் திறனை யும் புலப்படுத்தலின் தம்மை 'இயல்ஞான சம்பந்தன்' என்று கூறிக்கொள்வது பொருத்தம்தானே? ஈண்டு, இயல் என்பது தமிழ்க்குரிய இலக்கண இலக்கியமாகும்.

சேக்கிழார் இவரது இசைப்புலமையினை நன்கு ஓர்ந்து 'கானத்தின் எழுபிறப்பை' என்று போற்று கிறார். திருஞானசம்பந்தரே 'பண்மதியால் சொன்ன பாடல்' என்றும், காந்தாரம் இசை அமைத்துக் காரிகை யார் பண்பாட' என்றும், 'செவ்வழிநற் பண்பாடும் மிழலை' என்றும் பாடி இருத்தலின், இவர்தம் இசைப் புலமையினையும், கொடுகொட்டி, பண்டரங்கம், படுதம் முதலான கூத்து வகைகளைப் பேசியதுடன் இன்றி, 'தேந்தாம் என்றரங்கேறிச் சேயிழையார் நடம் ஆடும்' என்று பாடியிருத்தலைக்கொண்டு இவர்தம் நாடகப் புலமையையும் உணரும்போது இவர் முத்தமிழ் உணர்ந்த மூதறிஞர் ஆதலின் 'முத்தமிழ்வல ......ஞான சம்பந்தன்' எனத் தம்மை மொழிந்துகொள்ளலாம் அல்லவா?

திருஞானசம்பந்தப் பெருமானார் இறைவியின் திரு வருளால் ஞானப்பாலுண்டு ஞானம் கைவரப்பெற்றவ ராயினும், எல்லாவற்றையும் ஓதாது உணர்ந்த உத்த மரே ஆயினும், ஓய்ந்த நேரங்களில் பல கலை நூல்களை யும், தமிழ் நூல்களையும் படித்து இருக்கக்கூடும் என்று கூறுதலில் அவர்க்கு இழுக்கொன்றும் வராது. அவர் பல நூல்களைப் பயின்றவர் என்பதற்குரிய சான்றுகளை முன்னர்க் கண்டனம். மேலும், அவர்தம் தமிழ் இலக்

யைப் பயிற்சியினையும் ஒரு சிறிது காணல் சிறப்புடைத்தாகும்.

தோணிபுரத் தோன்றலார் 'சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவரோடும் தொழுதேத்தி வாழ்த்தி' என்றும், 'கொடியிடை மாதர்கள் மைந்தரொடும் மொழிந்தேத்தும்' என்றும், 'மைஞ்சரொடு மாதர் பலரும் தொழுது' என்றும் பாடிய அடிகள் மதுரைக்காஞ்சியில் வரும்,

'திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவனர்'

என்னும் அடிகளை நினைப்பூட்டுகின்றன. 'தோழம்' என்னும் சொல் அருந்தமிழ்ச் சொல்லாகும். இது பேர் எண்ணைக்குறித்து வரும். இச்சொல் பரிபாடலில், 'ஒரு தோழம் காலம்' என்ற அடியில் வந்துளது. 'ஒரு தோழம் தொண்டர் உளன்' எனத் திருவாசகத்துள் வந்திருப்பினும், முதற்கண் பரிபாடலில்தான் காண்கின்றோம். இந்த அரிய மொழியினை ஆளுடைய பிள்ளையார் 'ஒரு தோழம் தேவர் விண்ணிற் பொலிய' என்று பாடுவரேல், பரிபாடலில் தாம் பார்த்ததை மறவாது அன்றோ தம் பாடலில் பயன்படுத்திக்கொண்டனர். வாதவூரர் வாக்கினைத் தழுவி அமைத்துக்கொண்டனர் எனினும் இழுக்கன்று. திருஞானசம்பந்தர் திருவாசகத்திலும் நல்ல பயிற்சி பெற்றிருந்தனர் என்பதும் பின்னால் காட்டப்பெறும். மணிமொழியார்

மூவர் முதலிகட்கும் முன்னவர் என்ற கருத்துடையேன் அடியேன். இக்கருத்தினை நல்ல முறையில் தெளிவு படுத்திப் 'பொய்யடிமையில்லாத புலவர் யார்?' என்ற எனது நூலில் எழுதியும் உள்ளேன். விழைவார் ஆண்டுக் காண வேண்டுகின்றேன்.

'திருந்திள மென்முலைத் தேவிபாட நடமாடி' என்னும் அடி கலித்தொகையில் வரும்,

'பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
மாணிழை அரிவை காப்ப
ஆணம் இல் பொருள் எமக்கு அமர்ந்தனை யாடி'

என்னும் அடிகளை அடியொட்டியதாகும்.

'ஈந்துவக்கும் தன்மையார் ஆக்கூர்' என்றும், 'தன்னேர் பிறர் இல்லானே' என்றும், 'புலன்கள் வென்றவன்' என்றும், 'வென்றவன் புலன்கள் ஐந்தும்' என்றும், 'சலத்தினால் பொருள்கள் வேண்டுதல் செய்யாத் தன்மையார' என்றும், வெங்குரு வேந்தர் பாடியுள்ள கருத்துக்கள், ஈத்துவக்கும் இன்பம்' எனவும் 'தனக்கு உவமை இல்லாதான் எனவும், 'பொறிவாயில் ஐந் தவித்தான்' எனவும், 'சலத்தினால் பொருள்செய்து ஏமாக்கல்' எனவும் வரும் குறட்பாக்களில் பொதிந்துள்ள கருத்துக்கள் அல்லவோ? திருவள்ளுவப் பெருந் தகையார் 'பகவன்' என்னும் மொழியை முக்கண் மூர்த்தியினைக் குறிக்கும் முறையில் அமைத்துப் பாடியுள்ளார் என்ற குறிப்பினை நம் சம்பந்தரும் உணர்ந்து தம் பதிகங்களில் பற்பல இடங்களில் 'பகவன்' என்ற சொல்லால் பரமனைப் பகர்ந்துள்ளார்.

கவுணியக் குலத்துக் காவலர், 'காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே' எனவும், 'தாரகன் துஞ்ச

வெஞ்சினக் காளியைத் தரும்' எனவும், 'பாடி இருப் பவை 'கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே' என்றும், 'தாருகன் பேருரம் கிழித்த பெண்' என்றும் சிலப்பதிகாரம் செப்பிய முறையினைத் தழுவியதாகும்.

'வேடநெறி நில்லா வேடமும் வேடமே' என்று வரும் அடி திருமூலர் திருவாக்கின் எதிர் ஒலியாகும். இவ்வடியுடன் 'வேடநெறி நில்லார் வேடம்பூண் டென் பயன்' என்னும் திருமூலரது அடியுடன் ஒப்பிட்டுக் காணவும். ஈண்டுத் திருமூலர் சம்பந்தருக்கு முற்பட் டவர் என்பதையும் உணரவும்.

'சோதியே சுடரே' என்றும், 'அன்றாலின் கீழிருந்து அறம்புரிந்த அருளாளன்' என்றும், 'மண்ணவர் விண் ணவர் வணங்க வைகலும், எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் இறை' என்றும் வரும் ஆளுடைய பிள்ளை யாரின் வாக்குகள், திருவாசகத்தில் காணப்பெறும் 'சோதியே சுடரே சூழ்ஒளி விளக்கே' எனவும், 'அன் றாலின் கீழ்இருந்தங் கறமுரைத்தான்' எனவும்,'வாழ்த்து வதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனம் நின்பால் தாழ்த்துவதும் தாம் உணர்ந்து தம்மைஎல்லாம் தொழ வேண்டி' எனவும் வரும் திருவாசக அடிகளின் சாயலே ஆகும். 'திருவளர் தாமரை' என்னும் தொடர், 'திரு வளர் தாமரை சீர்வளர் காவிகள்' என்று தொடங்கப் பெறும் திருக்கோவையாரில் கண்ட தொடரே அன்றி வேறு யாதாக இருக்கமுடியும்? இன்னோரன்ன கார ணங்களால் திருஞானசம்பந்தர் பெருமகிழ்வுடன் தம் மைத் 'தமிழ்கெழு விரகன்' என்றும், 'தமிழ்க்கிழமை ஞானன்' என்றும், 'நற்றமிழ் ஞானசம்பந்தன்' என்றும் பல இடங்களில் பாடிக்கொண்டது பாராட்டற்குரிய

தன்றோ ? இவரது பழுத்த தமிழ்ப்புலமையினை வியந்து அன்றோ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் 'நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்' என்றும், 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்றும் இவரைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார் ?

ஆகவே, இதுவரை காட்டிய காரணங்களால் திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் அவராலேயே பாடப் பட்டன என்பதும், அப்பாடல்களில் தம்மைப்பற்றிச் சீரியமுறையில் புகழ்ந்து பாடிக்கொண்டமையும் தவறில்லை என்பதும் நிலைநிறுத்தப்பட்டன. இனி அன்னார் தாம் திருக்கடைக்காப்பின் மூலம் அறியக்கிடக்கும் குறிப்புக்களையும் சிறிது உணர்வோமாக.

திருக்கடைக்காப்பில் ஒன்றை ஈண்டுக் கண்டு, மேலும், இதுபற்றி நாம் அறியவேண்டுவனவற்றை ஆய்வோமாக.

அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயல்அணி காழியான்
சிட்டநால் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே

என்பது திருக்கடைக்காப்புச் செய்யுள்களில் ஒன்று.

திருக்கடைக்காப்பின் மூலம், ஆளுடைய பிள்ளையாரின் மரபும், அவருக்குள்ள நாட்டுப்பற்றும், தமிழ் அன்பும் அவரது வரலாற்றில் அமைந்துகிடக்கும் அற்புதங்களுக்குரிய அகச்சான்றுகளும், பதிகங்களை ஓதுவதாலும் கேட்பதாலும் வரும் பயன்கள் இன்னின்ன என்பதும், பாடும் முறை இஃது என்பதும் தெரிய வருகின்றன.

### மரபு அறிதல்

வேதியர்கட்கு உரிய மாலை தாமரையாகும். அதனை ஞானசம்பந்தர் 'வண்கமலத் தார்மிகுத்த சம்பந்தன்' என்று பாடிக் காட்டியுள்ளார். வேதியர்க்குரிய மாலை தாமரையே என்பதைச் சுந்தரர் வாக்காகிய 'அல்லியந் தார் ஆரூரன்' என்றும். ஸ்ரீ ஆண்டாள் 'வண்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான்' என்றும் கூறுமாற்றாலும் உணர்கின்றோம். மேலும், சம்பந்தர் தமது மரபின் தொழிலைக் குறிக்கும்போது 'தழங்குஎரி மூன்று ஓம்பும் தொழில்ஞான சம்பந்தன்' 'பூசுரன்ஞான சம்பந்தன்' என்றும் பாடி இருத்தலின், இவர் அந்தணர் மரபினர் என்பது நன்கு புலனாகிறது.

### நாட்டுப்பற்றை அறிதல்

புகலி வேந்தர் தாம் பிறந்த சீர்காழியினை, ஞாலத் துயர் காழி, திருவார் செல்வம் மல்கு சண்பை, ஒப் பரிய பூம்புகலி, குற்றம்இல் புகலி, நலம்கொள் காழி என்பன போன்ற அடைமொழிகளுடன் பாடியிருப்பது கொண்டு அவர்தம் நாட்டுப்பற்றினை அறிகிறோம்.

### தமிழ் அன்பு அறிதல்

திருஞானசம்பந்தர்க்குத் தமிழ்மொழியினிடத்துத் தணியாவேட்கை உண்டு. உண்மையான பெருமதிப்பு உண்டு. அம்மொழியினைப்பற்றிக் கூறும்போது. திரு நெறிய தமிழ்' 'ஞாலம் மிக்க தமிழ்' 'அழகார்த் தண் தமிழ்' 'குன்றாத்தமிழ்' 'செப்பரிய தண்தமிழ்' என்று புகழ்ந்ததோடின்றி,அம்மொழியின் ஒப்புயர்வற்ற சிறப் பினை, விலையுடை அருந்தமிழ்' என்றும், 'சொல்லார்

தமிழ்' என்றும், 'பலமிகு தமிழ்' என்றும், 'மறைஇலங்கு தமிழ்' என்றும் அடைகொடுத்துப்பேசிய உள்பொருளை உணராமல் மேலே போதல் கூடாதன்றோ ?'

பதிற்றுப்பத்து என்னும் நூலின் வாயிலாகப் புலவர்கள் ஆயிரக்கணக்கான பொற்காசுகளைப் பெற்றதை அறிகின்றோம். எடுத்துக்காட்டிற்காகப் பதிற்றுப்பத்தில் நான்காம் பத்தைக் காப்பியாற்றுக் காப்பியனார் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலைப் பாடி நாற்பத்து நூறாயிரம் பொன்னையும், இச்சேரனது ஆட்சியில் பாதியையும் கொண்டார் என்பதைக் காண்க.

திருஞானசம்பந்தரும் ஆவடுதுறை அண்ணலாரிடம் பொற்கிழி பெற்றுள்ளார்; இவற்றையெல்லாம் இவர்கள் எங்ஙனம் பெற்றனர் ? தமிழ் பாடி அன்றோ பெற்றனர் ? ஆகவே, அத்தமிழ்க்கு விலை உண்டு என்பது புலனாகின்றதன்றோ ?

கால்டுவெல் துரைமகனார், திராவிட மொழிகள் பலவற்றையும் நன்கு ஆய்ந்தவர். அவர் தமிழ் மொழியின் ஆற்றலைப் புலப்படுத்தும்போது, "தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகள் வடமொழியின் துணையின்றித் தனித்து இயங்கும் ஆற்றல் உடையன அல்ல. தமிழ்மொழி ஒன்றே வடமொழியின் துணை வேண்டாது தனித்து இயங்கவல்ல ஆற்றல் வாய்ந்தது" எனக் கூறியுள்ளதை ஈண்டு நினைவுகொள்ளுதல் வேண்டும். இங்ஙனம் அவர் கூறியதன் கருத்துத் தமிழ் அத்துணைச் சொல் வளம் பெற்றது என்பதே ஆகும். ஆகவே, இம்மொழி சொல்லார் தமிழ்மொழி என்பது உண்மையன்றோ ?

தமிழ் மொழி பலம் மிகுந்த மொழியே. இதற்குப் பல சான்றுகளைக் காணவேண்டியது இல்லை. நக்கீரர்முன், ஒருவன் ஆரியம் நன்று; தமிழ் தீது என்று கூறியபோது, அவனைத் தமிழ்மொழி கொண்டே இறக்கவும், மீண்டும் பிழைக்கவும் பாடியுள்ள,

'முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணியல்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தம் சேர்க சிவா'

என இறக்கப் பாடினர்.

'ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தால் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்க சிவா'

என்று வாழவும் பாடினர். இஃது ஒன்றே தமிழ் பலம் மிகுந்த மொழி என்று கூறுதற்குப் போதிய சான்று.

திருஞானசம்பந்தரது தமிழ்த் திருப்பாடல்கள் பலம் பொருந்தியதை. 'மணிவளர் கண்ட ரோமங் கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே' என்று பாடி, முயலகன் என்னும் நோயினைத் தீர்த்ததாலும், 'தருமோ இவள்உள் மெலிவே' என்று கூறிப் பாம்பு கடித்தவனை எழுப்பினதாலும், 'வாசி தீரவே காசு நல்குவீர்' என்று கேட்டு வாசி நீங்கிய காசைப் பெற்றதனாலும், எரியில் இடில் இவை பழுதிலை' என்று உறுதியுடன் உரைத்துத் தம் பதிகம் தீயில் எரியாமல் இருக்கச்செய்ததாலும், 'செல்ல உந்துக' என்று பாடி ஓடத்தைக் கோல் இல்லாமல் செலுத்தினமையாலும், 'அத்திரமாவன

ஐந்தெழுத்துமே' என்று பாடிப் புத்தநந்தியின் தலை உருளச் செய்தமையாலும் கண்டு தெளியலாம்.

இச்சான்றுகளினாலே மட்டும் இன்றி, சம்பந்தர், 'குரும்பை ஆண் பனையீன் குலை' என்று திருவாய் மலர்ந்து ஆண் பனையினைப் பெண் பனை ஆக்கினார், 'வேந்தனும் ஓங்குக' என்று பாடிக் கூன்பாண்டியனது கூனையும் நிமிர்த்தினார். இன்னோரன்ன அரும் பெரும் செயல்களைத் தமிழ் மொழியினாலேயே நிகழ்ந்தன. இதுகுறித்தே, வடநூற் பயிற்சியில் வல்லமைபெற்ற பரஞ்சோதியாரும், 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும், முதலை உண்ட பாலனை அழைத்ததும், எலும்பு பெண்ணுருவாக் கண்டதும், மறைக்கதவினைத் திறந்ததும் தமிழ் மொழியே அன்றி, வேறு மொழி யன்று' என்று ஆர்வமுடன் மொழிகின்றார். ஆகவே, தமிழ் மொழி பலமிகு தமிழ்தானே!

'மறைஇலங்கு தமிழ்' என்று மாண்புறச் சம்பந்தப் பெருமான் கூறியது முற்றிலும் உண்மையே. தமிழ் மொழியில் மறை உண்டு என்பது 'நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த மறைமொழி' என்று தொல்காப்பியர் கூறுவதால் அறியலாம். தொல்காப்பியர் இவ்வாறு கூறி இருப்பதனால், தமிழ் நாட்டில் தலைசிறந்து விளங்கிய பேரறிவுடைய பெருமக்கள் நிறைமொழி மாந்தராய் விளங்கினர் என்பது தெரிகிறது. அவர்கள் மொழிந்தவை மறைகள். நச்சினார்க்கினியர் தமிழ் வேதம் இன்ன என்பதை 'தமிழ்ச்செய்யுட்கண்ணும் இறையனாரும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும், வான்மீகனாரும், கவுதமனாரும் போல்வார் செய்தன தலையும், இடைச்சங்கத்தார் செய்தன இடையும்,

கடைச்சங்கத்தார் செய்தன கடையுமாகக் கொள்க' என்று கூறி, முடித்துக்காட்டும்போது 'இங்ஙனம் ஒத்தினை (வேதத்தினை) மூன்றாகப் பகுத்தது' என்றும் மொழிந்துள்ளமையினை உற்று நோக்கும்போது, தமிழில் வேதம் உண்டு என்ற குறிப்பினை அறிய ஏதுவாகின்றதன்றோ?

இவ்வாறு இருக்கத் தமிழ் மொழியின் மூலம் பாராயணமும் வழிபாடும் (அர்ச்சனை) நடத்தவேண்டியது நம் கடமை அன்றோ? வடமொழி தென்மொழி இரண்டிலும் அர்ச்சனைகள் நடத்தலாம் என்ற குறிப்புக்கள் திருஞானசம்பந்தர் வாக்கின் மூலமே அறியலாம். 'செந்தமிழர் தெய்வமறை நாவர் செழுநற் கலைதெரிந்த அவரோடு அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அரன்' என்று பாடியுள்ள இடத்தை நன்கு சிந்திக்கவேண்டும். 'தம் மலரடி ஒன்று அடியவர் பரவத் தமிழ்ச்சொலும் வடசொலும் தாள் நிழல்சேர' என்னும் அடிகளின் வாயிலாக இரு மொழிகளின் மந்திரங்களும் அர்ச்சனை காலங்களில் அரன் திருவடிகளில் பொருந்தப்பெற்றன என்ற உண்மையினை அன்றோ உரைக்கின்றனர் சம்பந்தர்?

இங்ஙனம் எல்லாம் இசைத்தவர் பிராம்மணகுலத்துப் பெருந்தகையாரும், சைவசமய ஆசாரியமூர்த்தியாருமாய் இருக்கத் தமிழிலும் அர்ச்சனைகள் பெருவாரியாக நடக்க இன்னமும் ஏனோ தயக்கம்? 'எல்லா மொழியாலும் இமையோர்கள் தொழுதேத்த' என்றும் பாடியுள்ளார் சம்பந்தர். ஏத்த என்பதன் பொருள், எம்மொழியாலும், அர்ச்சனை செய்து போற்ற என்பது.

## அற்புதம் அறிதல்

சம்பந்தரது திருக்கடைக்காப்பின் வழியே, அவர் தமது வாழ்க்கையில் நடத்திய அற்புதங்கட்குரிய அகச் சான்றுகள் கிடைக்கின்றன.

தோணிபுரத் தோன்றலார் திருவோத்தூரில் ஆண் பனைகளைப் பெண் பனைகள் ஆக்கின குறிப்பு, 'குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்' என்னும் திருக்கடைக் காப்புச் செய்யுளில்தான் கிடைக்கிறது.

கூன்பாண்டியனது வெப்பு நோய் திருநீற்றுப் பதிகம் பாடியபோது நீங்கியது என்பதை, 'தென்னன் உடல் உற்ற தீப்பிணி யாயின தீரச் சாற்றிய பாடல்கள்' என வரும் திருக்கடைக்காப்பு அறிவிக்கிறது.

வைகையில் இட்ட ஏடு எதிர்த்துச் சென்று திருவேடகம் என்ற தலத்து அடைந்தமையினை, 'வைகைநீர் ஏடுசென் றணைதரும் ஏடகம்' என்ற திருக்கடைக் காப்புக்கொண்டே தெளிகின்றோம்.

காழியர் காவலர் கனல் வாதம் புரிந்தபோது, 'போகமார்த்த' என்ற பதிகத்தைக் கனலிடை இட்டு, 'எரி இடில் இவை பழுதில்' என்று பாடியதோடு இன்றித் திருக்கடைக்காப்பில் 'கொற்றவன் எதிர்இடை எரியினில் இட இவை கூறிய' என்று பாடி இந்த நிகழ்ச்சியின் உண்மையினை உரைத்தருளினர்.

## முறையும் பயனும்

பதிகங்களைப் பாடவேண்டிய முறைகள் இன்ன என்ற குறிப்பினை, 'பண்கொளப் பாடவல்லார்' என்றும், 'பண்பயன் கொளப் பாடவல்லார்' என்றும் பல இடங்

களில் குறிப்பிட்டுப் போந்தனர். ஒருவராகிலும் பலராகிலும் உரைசெய்வார்' எனத் தனித்தும், பலரும் கூடிப் பாடலாம் என்று காட்டியுள்ளார். இசை பொருந்திப் பாடுதல் சிறப்பாயினும் தம் விருப்பம்போல் பாடுதலும் கூடும் என்பதை,' வந்தவாறே ஏத்துபவர்' என்றும் கூறியுள்ளார். வந்தவாறே ஏத்துதலுக்கு அவரே விளக்கம் தருவார்போல் 'கோழை மிடறாகக் கவி கோளும் இலராக இசை கூடும் வகையால் ஏழை அடியார் அவர்கள் சொன்ன சொல்' என்றும் இசைத்துள்ளனர்.

பாடுவார் பெறும் பயன்கள் இன்ன என்பனவற்றை 'கருவார் இடுப்பைப் பிறப்பறுத்துக் கலலை கழிவர்' 'இடர்பிணி துயர் அணையிலர்' 'ஞாலம் எல்லாம் புகழே' 'மதியுடையார்' 'நலம் மிகுவார்' 'தவம் ஆம்' 'மூவுலகும் பெறுவார்கள்' 'மிக்க இன்பம் எய்தி' என்றும், 'அருள் சேர்வர், எத்திசையும் ஆள்வர், பார்முழுதும் ஆள்வர், வானோர் வணங்க மன்னி வாழ்வர்' 'விண்ணவர் விமானம் கொடுவர ஏறி வியனுலகாண்டு வீற்றிருப்பர்' என்றும் கூறிய தொடர்களில் காணலாம். இன்னோரன்ன பயன்கள் பாடுவார்கட்குமட்டும் வருவன அல்ல. பாடுவார் சுற்றத்தார்க்கும், கேட்பார்க்கும்கூட வரக் கூடியவை என்ற குறிப்பினை, 'தமர்க்கும் ஊழி ஒரு பெரும் இன்பம்' என்றும், 'கேட்டார் அவரெல்லாம் ஊழின்மலி வினைபோய் உயர் வான் அடைவர், கேட்டார்போய் விண்ணோர் உலகத்து மேவிவாழும் விதி அதுவேயாகும் வினைமாயும்' என்றும் பாடியுள்ளார்.

பாடுவார்க்கு அம்மையில் அடையும்பயனே அன்றி, இம்மையில் அடையும் பயன்களும் உண்டு என்பதை,

'மலர்மகள் கலைமகள் சயமகள் இனமலி புகழ்கள் இசைதர இருநிலனிடை இனிதமர்வர், சீர்மலிந்து அழகார் செல்வமது ஓங்கி, தூமலராள் துணைவராகி முற்றுலகம தாண்டு, பொன்னடைந்தார் போகங்கள் பல அடைந்தார்' என்றெல்லாம் பாடி அமைத்துள்ளார்.

அம்மைப் பயன் இம்மைப்பயன் இரண்டும் உண்டு என்பதை இணைத்துப் பாடிய இடங்களும் திருக்கடைக் காப்பில் உண்டு 'பாரொடுவிண் பரிபாலகர், பண் பொலிய வாழ்ந்து அவர் போய்வான் பொலியப் புகுவர், வேந்தராகி உலகாண்டு வீடுகதி பெறுவர், இம்மைக்கும் மறுமைக்கும் வருத்தம் வந்து அடையாவே' என்னும் தொடர்களைக் காணவும்.

இவ்வாறு பற்பல குறிப்புக்களுக்கு இடமாய் உள்ளவை திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் என்பதை நாம் உணரும்போது, பதிகங்கள் இன்னமும் எத்தனையோ குறிப்புக்களைத் தரவல்லனவாக இருக்கும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? ஆகவே, சிறப்பாகச் சைவப்பெருமக்களும், பொதுவாக ஏனையவர்களும் திருஞானசம்பந்தரது திருப்பாடல்களை ஆழ்ந்து ஆழ்ந்து கற்றுப் பயன் பல பெறுவார்களாக.

---

## 2. மார்க்கண்டேயனுர்

திருவளர்ந்தோங்கும் இந்நாவலந் தீவில் மார்க்கண்டேயர் என்ற பெயரைக் கேட்டதும், அவர் இறைவனுல் இயமனது பிடிப்பினின்றும் நீங்கி, என்றும் பதினுருண்டு பெற்று இன்றும் வாழ்கின்ற சிரஞ்சீவி என்ற பட்டம் பெற்றவர் என்ற நினைவு வருமே அன்றி, அவர் ஒரு தண்டமிழ்ப் புலவரும் ஆவார் என்ற எண்ணத்தை எவரும் கொள்ளார். ஆனுல், ஒரு சிலர் அவர்களுள்ளும் சங்க நூல் பயிற்சியுடையார், மார்க்கண்டேயரும் தமிழ்ப் புலவராய் இருந்தனர்போலும் என்று எண்ணுவர். அங்ஙனம் எண்ணுபவர்களுள்ளும் ஆராய்ச்சி அறிவு படைத்தவர்கள், காலனை வென்ற மார்க்கண்டேயரும், தமிழ்ப் புலவராகிய மார்க்கண்டேயரும் வேறுவேருவர் என்று சாதிக்கவும் முற்படுவர். ஆனுல், எனது கருத்து இருவருமே ஒருவரே என்பது. அதனை ஈண்டு ஒரு சிறிது ஆராய்வோமாக.

இதற்கு அரணுக நச்சினுர்க்கினியர், 'தமிழ்ச்செய்யுட்கண்ணும் இறையனுரும் அகத்தியனுரும் மார்க்கண்டேயனுரும் வான்மீகனுரும் கவுதமனுரும் போல்வார் செய்தன' என்று கூறியதையும் கொள்வோமாக.

முதற்கண் மார்க்கண்டேயரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பைச் சிறிது காண்போமாக. இக்குறிப்பினை அறிந்து கொண்டாலன்றி இவர் தமிழ்ப் புலவரும் ஆவார் என்பதை நிலைநாட்ட முடியாது. இவர் 'மார்க்

கண்டர், மார்க்கண்டேயர், மார்க்கண்டேயனார்' என்று குறிக்கப்பட்டுள்ளனர். 'மார்க்கண்டர்க்காக அன்று காலனை உதைப்பர் போலும் கடவூர், வீரட்ட னாரே' என்று அப்பரும், 'மார்க்கண்டர்க்காக அன்று மறலி பட்டபாடு' என்று தாயுமானாரும் குறிப்பிட்டிருத்தல் காண்க இவருக்கு இவர்தம் தந்தையார் 'மார்க்கண் டன்' என்றே பெயர் இட்டனர் என்பது 'மைந்தனுக்கு உரிய நாமம் மார்க்கண்டன் என்று செய்தான்' என்று கந்தபுராணம் கூறுதலையும் ஈண்டு உணர்தல் நன்று. இம்மார்க்கண்டன் என்னும் பெயர் மரியாதை கருதி மார்க்கண்டேயர், மார்க்கண்டேயனார் எனக் குறிக்கப் பட்டது. கந்தபுராணத்தில் வரும் தலைப்பில் மார்க் கண்டேயனார் படலம் என்று இருப்பதையும், புற நானூற்றில் மார்க்கண்டேயனார் என்று காணப்படு தலையும் அறியவும்.

மார்க்கண்டேயர் அந்தண மரபினர். இவரது பாட்டனார் குச்சகன் என்பவர். இக்குச்சகன் மகன் கௌசிகன். இவ்விருவர்களைப்பற்றிக் கூறுமிடத்துக் கந்தபுராணம் 'இச்சகம் புகழுகின்ற இருபிறப் பாளர் கோமான் குச்சகன் என்னும் பெயரோன்' என்றும், 'அவற்கொரு புதல்வன் உண்டால் அருமறை பயின்ற நாவான் கௌசிகன் என்னும் பேரோன்' என்றும் அறிவித்தல் காண்க. மார்க்கண்டேயருக்கு அந்தணர் புரபுபடி பூணூல் அணியும் சடங்கு செய்யப்பட்டது என்பதை அப்புராணம், 'ஏதம் இல் ஐந்தின் முந்நூல் இலக்கண விதியும் செய்தே' என்றும் கூறுகிறது.

மார்க்கண்டேயர் தமது பதினாறுவது ஆண்டில் இறக்கும் நிலையினைத் தம் இருமுதுகுரவர் மூலம் அறிந்

தமையினல் அதனின்று தப்பி உய்ய, அவர் இறைவ ஊப் பூசிக்க மணிகன்றிகை என்னும் ஆலயத்திற்குச் சென்ருர். இதனைக் கந்தபுராணம்,

'இருமூது குரவர் தத்தம்
ஏவலின் ஈசன் என்னும்
ஒருவன தருளும் அன்பும்
உடனுறு துணையாய்ச் செல்லப்
பொருவரு மகிழ்ச்சி பொங்கப்
பொள்ளெனப் பெயர்ந்து போகித்
திருமணி கன்றி கைப்பேர்ச்
செம்பொன்ஆ லயத்தில் புக்கான்.

என்புநெக் குருகக் கண்ணீர்
இழிதர வலம்செய் தீசன்
முன்புற வணக்கம் செய்து
முடிமிசை அடிகள் சூடித்
தென்புலத் தொருசார் எய்திச்
சிவன்உருச் செய்து பல்நாள்
அன்புடன் அருச்சித் தேத்தி
அருந்தவம் இயற்றி யிட்டான்

என்று எடுத்து இயம்புதல் காண்க.

இனி, மார்க்கண்டேயர் பூசை பற்றித் தமிழகச் சார்பில் அறியக்கிடப்பனவற்றை ஆய்வோமாக.

இறைவர் புரிந்த எட்டுவீரச்செயல்கள் இன்னின்ன இடங்களில் நிகழ்ந்துள்ளன என்பது.

பூமன் சிரம்கண்டி அந்தகன் கோவல் புரம்அதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழூர்
காமன் குறுக்கை யமன்கட வூர்இந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே

என்னும் பழைய பாட்டால் அறியவருகிறது. இதன் பொருள்: இறைவர் திருக்கண்டியூரில் நான்முகன் தலையில் ஒன்றை அறுத்தனர்; திருக்கோவலூரில் அந்தகாசுரனைக் கொன்றனர்; திருவதிகையில் முப் புரங்களை எரித்தனர்; திருப்பறியலூரில் தக்கன் தலையைக் கொய்தனர்; திருவிற்குடியில் சலந்தராசுரனைக் கொன்றனர்; திருவழுவூரில் கயமுகாசுரனுன யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்துக்கொண்டனர்; திருக்குறுக்கையில் காமனை எரித்தனர்; திருக்கடவூரில் யமனை உதைத்தனர் என்பது. இவ்வட்ட வீரட்டம் நிகழ்ந்த இடங்கள் பற்றி ஒரு திருத்தம் அப்பர் பெருமானுர் வாக்கில் காணப்படுகிறது. அதனையும் ஈண்டு நினைவுகூர்தல் சாலப்பொருத்தம் ஆகும். அப்பரும் அட்ட வீரட்டானங்களைக் குறிப்பிடுகிறுர். அப்பாடல்,

'காவிரியின் கரைக்கண்டி வீரட் டானம்
கடவூர்வீ ரட்டானம் காமருசீர் அதிகை
மேவியவீ ரட்டானம் வழுவைவீ ரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டம் குறுக்கைவீ ரட்டம்
கோத்திட்டைக் குடிவீரட் டானம்இவை கூறி
நாவில்நவின் றுரைப்பார்க்கு நணுகச் சென்ருல்
நமன்தமரும் சிவன்தமர்என் றகல்வர் சென்றே'

என்பது. இப்பாடலில் விற்குடி வீரட்டானம் குறிப்பிடப்படவில்லை. இதற்கு ஈடாகக் கோத்திட்டைக்குடி வீரட்டம் குறிக்கப்பட்டுள்ளது. இந்தக் குறிப்பினுல் விற்குடி, கோத்திட்டைக்குடி என்ற பெயராலும் வழங்கப்பட்டிருக்கவேண்டும் என்பது புலனுகிறது.

இவ்வட்ட வீரச்செயல்களைத் திருமூலரும் தம் திருமந்திரத்தில் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர். அவை பின் வருவன :

கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை எல்லாம்
வருத்தம்செய் தான்என்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே.

கொலையில் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தான்அங் கிட்டு
நிலைஉல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையை அரிந்திட்டுச் சந்திசெய் தானே.

எங்கும் பரந்தும் இருநிலம் தாங்கியும்
தங்கும் படித்தவன் தாள்உணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்அற
அங்கச் சுதனை உதிரம்கொண் டானே.

எங்கும் கலந்தும்என் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை ஓதிபால்
பொங்கும் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரல்குறித் தாழிசெய் தானே.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரம் செற்றனன் என்பார்கள் மூடர்கள்
முப்புரம் ஆவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை ஆர்அறி வாரே.

முத்திக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி உரிஅரன் ஆவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தியின் உள்ளமுக் தன்று கொலையே.

மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுன்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே.

இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்தி இலிங்க வழியது போக்கித்
திருந்திய காமன் செயல்அழித் தங்கண்
அருந்தவ யோகம் கொறுக்கை அமர்ந்ததே.

இறைவனது அட்ட வீரட்டானங்களைக் குறிப்பிடும் பழம் பாடலுக்கும் திருமூலர் குறிப்பிடும் வீரட்டானங்களுக்கும் வேறுபாடு காணப்படுவதைப் பாடல்களைப் படித்த அளவில் அறிந்துகொள்ளலாம். பழம் பாடலில் இறைவனால் ஒறுக்கப்பட்டவர்கள் இன்னின்னார் என்று குறிப்பிடப்பட்டதோடு, இன்னின்ன இடத்தில் இது இது நிகழ்ந்தது என்ற விளக்கமும் காணப்படுகிறது. ஆனால், திருமூலர் திருமந்திரத்தின் வழி. பழம் பாடல் குறித்திருப்பதுபோல இவ்விவர்கள் அழிவுற்றனர் என்பதை நன்கு விளக்கி, இயமன் திருக்கடவூரிலும், மன்மதன் திருக்குறுக்கையிலும் தண்டிக்கப்பட்டனர் என்று இடங்களின் குறிப்பைக்காட்டி, ஏனைய அறுவர் அழிந்த இடங்களை அறிவித்திலர். ஆகவே, இயமன் திருக்கடவூரில் இறைவனால் உதை உண்ணப்பட்டான் என்ற குறிப்பு, நம் ஆய்வுக்கு ஓர் அரணாக அமைந்துள்ளது. இதனால், இயமன் உதை உண்ட திருத்தலம் திருக்கடவூர் என்பது அறுதியிட்டு உறுதியாக நிறுவப்பட்டது என்பதை நாம் நன்கு உணர்தல் வேண்டும். திருக்கடவூர் என்பது, மாயூரம்—தரங்கம்பாடிப் புதிய இருப்புப் பாதைத் தொடரில் ஓர் இரயில் நிலையமாக விளங்குகிறது. அங்கிருந்து அரைக்கல் நடந்

தால் இத்தலத்திற்குச் செல்லலாம். இஃது திருக்கடையூர் என்று வழங்கப்படுகிறது. பேருந்தி (Bus) மூலமும் இத்தலத்தை அடையலாம். இந்தத் தலம் மார்க்கண்டேயருக்கு அருள் செய்த இடம் என்பதை மூவர் முதலிகளின் திருவாக்கைக்கொண்டு நிலைநிறுத்துதல் இன்றி அமையாததாகும். மூவர் முதலிகள் ஆவார் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரர் (சுந்தரர்). இம்மூவர்களும் திருக்கடவூர் திருத்தலத்தின் மீது பதிகங்களைப் பாடியுள்ளனர். சம்பந்தர் பதிகம் ஒன்று; அப்பர் பதிகங்கள் மூன்று; சுந்தரர் பதிகம் ஒன்று. ஆக ஐந்து பதிகங்கள் இத்தலத்துக்கு இருக்கின்றன.

இம்மூவரும் இத்தலத்திற்குச் சென்று திருப்பதிகங்களைப் பாடுங்காலத்து, இத்தலத்துப்பெருமான் இயமனை மார்க்கண்டர்க்காக உதைத்து உருட்டினர் என்பதை மறவாது பாடி மகிழ்ந்துள்ளனர்.

ஆளுடைய பிள்ளையார் 'கரிதரு காலனைச் சாடினானும் கடவூர்தனுள், விரிதரு தொல்புகழ் வீரட்டானத்தரன் அல்லனே?' என்று பாடி இருப்பதையும், ஆளுடைய அரசுகள், 'மார்க்கண்டற்காக அன்று காலனை உதைப்பர் போலும் கடவூர் வீரட்டனரே' என்று பாடியுள்ளதையும் ஆளுடை நம்பிகள்,

'அன்றுலின் நிழல்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் காலன்உயிர் கொடுத்தாய்மறை யோனுக்கு
கன்றாரும் கரவாகட வூர்திருவீ ரட்டத்துள் [மான்
என் தாதை பெருமான்எனக் கார்துணை நீயலதே'

என இசைத்திருப்பதையும் உற்று நோக்குதல் வேண்டும். திருக்கடவூரில்தான் இறைவர் மார்க்கண்

டர்க்காக இயமனை உதைத்தார் என்பதை நம்மனோர் நன்கு உணரவேண்டித் தாண்டகவேந்தர், இத்தலத்தைப்பற்றிப் பாடிய ஒரு பதிகம் முற்றிலும் காலனைக் கடிந்த வரலாற்றையே குறித்துப் பாடி அமைத்தார்.

'மருள்துயர் தீரஅன் றர்ச்சித்த
 மாணிமார்க் கண்டேயற்காய்
இருட்டிய மேனி வளைவா ளெயிற்றெரி போலும்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம்
 பதைப்ப உதைத்துங்கனே
உருட்டிய சேவடி யான்கட
 வூர்உறை உத்தமனே'

'பதத்தெழு மந்திரம் அஞ்செழுத்
 தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்உயிர்
 உண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குரு
 திப்புனல் ஆறுஒழுக
உதைத்தெழு சேவடி யான்கட
 வூர்உறை உத்தமனே'

'காலனைப் பண்டொருகால்,
 உரப்பிய சேவடி யான்கட வூர்உறை உத்தமனே'

'மறித்திகழ் கையினன் வானவர்
 கோனை மனம்மகிழ்ந்து
குறித்தெழு மாணிதன் ஆருயிர்
 கொள்வான் கொதித்தசிந்தைக்
கறுத்தெழு மூவிலை வேலுடைக்
 காலனைத் தான்அலற
உறுக்கிய சேவடி யான்கட
 வூர்உறை உத்தமனே'

'குழைநிகழ் காதினன் வானவர்
கோனைக் குளிர்ந்தெழுந்து
பழக்கமொ டர்ச்சித்த மாணிதன்
ஆருயிர் கொள்ளவந்த
தழல்பொதி மூவிலை வேலுடைக்
காலனைத் தான்அலற
உழக்கிய சேவடி யான்கட
வூர்உறை உத்தமனே'

'சூலமும் பாசமும் கொண்டு
தொடர்ந்தடந் தோடிவந்த
காலனைக் காய்ந்தபிரான் திருக்கட
வூருறை உத்தமனே'
சுடர்பொதி மூவிலை வேலுடைக்
காலனைத் துண்டமதா
உடறிய சேவடி யான்கட
வூர்உறை உத்தமனே

'காலனைக் காய்ந்து கடலின்விடம்
உண்டருள் செய்தபி ரான்கட
வூர்உறை உத்தமனே'

அடுதிறல் காலனை அன்றடர்த்து
ஊழியும் ஆயபி ரான்கட வூர்உறை உத்தமனே'

என்று பாடி இருத்தலைக் காணவும்.

திருக்கடவூர் மயானம் என்னும் தலம் திருக்கட வூருக்குக் கிழக்கே ஒரு கல் தொலைவில் உள்ளது. அத் தலத்தின்மீதும் சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடிய பதிகங்கள் உண்டு. திருக்கடவூருக்கு அண்மையில் இத்தலம் இருந்தும், இத்தலத்துப் பதிகங்களில் இயம னைத் தடிந்த குறிப்பை நாம் காண்கின்றோம் இல்லை.

ஆனால், அப்பர் இத்தலத்தில் பாடிய பதிகத்தின் ஒரு பாடலில் 'காலகாலர்' என்று வருகின்றதே என்று ஒருசிலர் வினவில், இஃது இறைவனது எட்டுக் குணங்களில் 'முடிவில் ஆற்றல் உடைமை' என்பதைக் குறித்ததே அன்றி வேறன்று. ஆகவே, திருக்கடவூரில் மட்டும் இயமனை இறைவன் சாடிய வீரத்தை எடுத்து இயம்பி இருத்தலின், இந்நிகழ்ச்சி திருக்கடவூரில் நிகழ்ந்தது என்பதை நாம் மறத்தல் கூடாது. பரஞ்சோதியாரும் தமது நூலாம் திருவிளையாடற் புராணத்துள் அர்ச்சனைப் படலத்தில்,

'கறுவிவீழ் காலன் மார்பில் சேவடிக் கமலம் சாத்திச்
சிறுவனுக் காயுள் ஈந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனல் பழன மூதூர்'

என்று இறைவன் மார்க்கண்டர்க்காகக் காலனை உதைத்த ஊர் திருக்கடவூர் என்று பாடி அறிவித்துள்ளனர். ஈண்டுப் பழனமூதூர் என்றது திருக்கடவூரே ஆகும். வெளிப்படையாகத் திருக்கடவூர் எனக் கூறாது, 'பழனமுதூர்' என்றதனால் எங்ஙனம் திருக்கடவூர் ஆகும் எனில், அவ்வருச்சனைப் படலத்தில் தென்னாட்டுத் தலங்களைக் குறிப்பிட்டுக் கூறிவரும் முறைபற்றியும், வீரட்டானங்களைப்பற்றி அறிவித்துக் கொண்டுவரும் இடத்தும் இது குறிப்பிடப்பட்டிருக்கும் அமைவுபற்றியும் 'பழனமூதூர் திருக்கடவூரே ஆகும்'.

திருக்கடவூரில் எத்தலத்திலும் இல்லாத காலசம்மாரமூர்த்தி தனியே இருந்துகொண்டு காட்சி அளிக்கிறார். இவ்வுருவின் மார்க்கண்டேயர் இலிங்கத்தினைத் தழுவி இருத்தலையும், இலிங்கத்தினின்று இறைவன்

தோன்றிக் காலனைக் காலால் உதைத்தருளுவதையும், இயமன் தொழுத கையினனாய்க் உடல் சாயும் தோற்றத்தினனாய் இருத்தலையும் நேரில் கண்டு இன்புறலாம். இப்பெருமானுக்கு நடத்தும் பெருவிழா மிகச் சிறப்புடையது. இத்தலத்தில் மார்க்கண்டேயருக்கு ஆயுள் வளர்ச்சியை இறைவர் தந்தமையின் தமக்கும் ஆயுள் நீடிக்கவேண்டுமென்ற குறிக்கோளுடன் இன்றும் மக்கள் தமது அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவை (சஷ்டியப்த பூர்த்தியை)யும் ஆயுள் ஹோமத்தையும் நிறைவேற்றிக்கொள்வர். இவ்வாறு மார்க்கண்டேயர் பூசித்ததாகக் கூறப்படும் மணிகர்ணிகைத் தலத்தில் செய்துகொள்வதாக யாரும் கூறக் கேட்டதில்லை.

மார்க்கண்டேயனார் இறைவரது திருவருளால் இயமவாதனையினின்றும் நீங்கி ஆயுள் நீடிக்கப்பெற்று, தவவேடம் பூண்டு முனிவராக விளங்கினர். ஆகவே, அவர் முனிவர் இனத்தில் சேர்க்கப்பட்டனர். அருந்தமிழ் அறிந்த அகத்தியர் வான்மீகியார் போன்று இவரும் தமிழ் அறிந்த தமிழ் முனிவர் ஆயினர். இவரது அருந்தமிழ்ப் பாடல்கள் தலையாய ஓத்து எனக் கருதப்பட்டன. இதனை நன்கு தெளிவிக்கவே உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர், ‘இனித் தமிழ் செய்யுட்கண்ணும் இறையனாரும், அகத்தியனாரும், மார்க்கண்டேயனாரும், வான்மீகனாரும், கவுதமனாரும் போல்வார் செய்தவை தலை’ என்று தொல்காப்பியப் புறத்திணை இயல் இருபதாவது நூற்பாவிற்கு எழுதிய விளக்கத்தில் குறிப்பிட்டனர் என்பது தொடக்கத்திலும் கூறப்பட்டது. இதனால் மேலே குறிப்பிடப்பட்டவர்கள் பாடிய பாடல்கள் தமிழ்ப் பாடல்கள்

என்பது தெளிவாகப் புலனாகிறது. மார்க்கண்டேயர் முனிவர் வகுப்பைச் சார்ந்தவரே என்பதை அப்பர் பெருமானார், ‘அருமுனிவர்க்காய்ச் சூலமும் பாசமும் கொண்டு தொடர்ந்தடர்ந் தோடிவந்த காலனைக் காய்ந்தபிரான் கடவூர் உறை உத்தமனே’ என்று எடுத்து மொழிந்திருப்பதனால் அறியவும்.

இவர் தம் பெயரால் காஞ்சி என்னும் நூலைப் பாடினார் என்பது யாப்பருங்கலவிருத்தி உரை வழியும், காரிகை உரைவழியும் அறிகின்றோம். ஆகவே, இவரே புறநானூற்றில் காணப்படும் பாடலைப் பாடிய தண்டமிழ்ச் சான்றோர் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை.

மார்க்கண்டேயனார் மாக்கடையனார் என்று வழங்கப்பட்டார் எனச் சிலர் கருதுவர். அது மாக்கடையனார் அன்று. ஏட்டில் மார்க்கண்டேயனார் என்றே இருந்ததாக டாக்டர் சுவாமிநாத ஐயர் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இவ்வாறு பொருள் நன்கு புலப்படாத முறையில் எழுத்துக்கள் இருப்பினும் அது மார்க்கண்டேயனார் என்ற பெயரையே குறிக்கும், என்பதை உற்று நோக்கினால் அறிந்துகொள்ளலாம். கடையனார் என்பது திருக்கடவூரில் இருந்தவர் என்னும் பொருளில், இடத்தின் அடியாகப்பிறந்த பெயராகக் கொள்ளலாம். இதுபோதும் திருக்கடவூர், திருக்கடையூர் என்று வழங்கப்படுதலையும் அறிக.

இத்தலத்துக் கல்வெட்டுக்களால் நாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கு அரண் செய்யும் முறையில் அமைந்த குறிப்புக்களும் காணப்படுகின்றன. இங்கு எழுந்தருளியுள்ள காலசம்மாரமூர்த்தி காலகாலதேவர்

என்ற பெயரால் குறிக்கப்பெற்றனர் என்பது கல் வெட்டுக் குறிப்பு.

இத்தலத்தில் மார்க்கண்டேயர் பெயரில் ஒரு மடம் இருந்தது என்ற குறிப்பும், அம்மடத்தில் வேதம் வல்ல சிவயோகிகள் பதின்மருக்கு உணவு அளிக்கப்பெற்றிருந்தது என்ற குறிப்பும் முதற்குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டால் அறியவருகின்றன. இவ்வாறு ஒரு மடம் வடநாட்டில் இருந்ததாக, இருப்பதாக அறிகிறோம் இல்லை.

இன்னோரன்ன காரணங்களால் மார்க்கண்டேயர் வடநாட்டிலே பிறந்து தென்னாட்டிற்குப்போந்து தமது ஆயுட்குறைவைப் போக்கத் திருக்கடவூரை அடைந்து இறைவனைப் பூசித்து, நீடிய ஆயுளையும், பெயர் அழியா நிலையினையும் பெற்றார் என்பது தெரிகிறது. இவர் தங்கி இருந்த இடமே மார்க்கண்டேயர் மடம் என்ற பெயராக இருக்கவேண்டும். இவர் வைதிகவேதியர் ஆதலின், இவர் தங்கியிருந்த மடத்தில், தம்மை ஒத்த வைதிக வேதம் வல்ல சிவயோகியர்கட்கே உணவு அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது போலும்!

‘மணிகர்ணிகையில் மார்க்கண்டேயர் இறைவனைப் பூசிக்கவில்லை என்ற முடிவுக்கு வரலாமா?’ என்று எண்ணக்கூடும். மார்க்கண்டேயர் ஆண்டுப் பூசிக்கவில்லை என்று கூறமுடியாது. ஆண்டுப் பூசித்தபின்பு தென்னாடு சென்றால், தமது குறிக்கோளை முற்றுவித்துக் கொள்ளலாம் என்ற கருத்துக்கொண்டு தென்னகம் வந்து திருக்கடவூரில் இறைவனைப் பூசித்துப் பேறு பெற்றார் என்று கொள்ளுதல் வேண்டும்.

மார்க்கண்டேயர் தென்திசைக்கே வருவானேன் எனில், இதற்கு விடையாக உபமன்ய முனிவர், ஏனைய முனிவர்கட்குக் கூறியவற்றைத்தான் காட்ட முடியும். இதுபற்றிய வினவையும், விடையையும் கீழ்க்காணும் செய்யுட்களில் காண்க.

அந்த ணாளரும் ஆங்கது கேட்டவர்
பந்த மானுடப் பால்படு தென்திசை
இந்த வான்திசை எட்டினும் மேற்பட
வந்த புண்ணியம் யாதென மாதவன்.

பொருவ ரும்தவத் தான்புலிக் காலனும்
அருமுனி எந்தை அர்ச்சித்தும் உள்ளது
பெருமை சேர்பெரும் பற்றப் புலியூர்என்
றொருமை யாளர்வைப் பாம்பதி ஓங்குமால்.

அத்தி ருப்பதி யின்நமை யாளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புடன்
அத்தன் நீடிய அம்பலத் தாடும்மற்
றித்தி றம்பெற லாம்திசை எத்திசை.

பூதம் யாவையும் உள்அலர் போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதல் கங்கை இதய கமலமாம்
மாதொர் பாகனர் ஆரூர் மலர்ந்ததால்.

எம்பி ராட்டிஇங் கேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தால்எய்திக்
கம்பை ஆற்றில் வழிபடு காஞ்சிஎன்
றும்பர் போற்றும் பதியும் உடையது.

நங்கள் நாதனும் நந்தி தவம்செய்து
பொங்கு நீடருள் எய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனல்மலர்
செங்கை யாளர் ஐயாறும் திகழ்வது.

தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை
ஈசர் தோணி புரத்துடன் எங்கனும்
பூசனைக்குப் பொருந்தும் இடம்பல
பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை.

இவை பெரியபுராணப் பாடல்கள்.

இத்தகைய சிறப்புத் தென்னகத்துக்கு இருத்தலின், மார்க்கண்டேயர், மணிகர்ணிகையில் பூசித்தது போலத் தென்னகத்தில் வழிபாடாற்ற இங்கு வந்தனர் என்க.

மார்க்கண்டேயர் தமது பதினாறாண்டிற்குள் எல்லாக் கலைகளையும் அறிந்தார் என்பதைக் கந்தபுராணம்,

வேதமும் பிறவும் கொண்ட
வியன்பொருள் தெரிந்து மேலாம்
ஆதியே சிவன்என் றெண்ணி
அவன்அடி அரணென் றுற்றான்

என்று கூறுகின்றது.

'பிறவும்' என்பது தமிழ்க்கலைகளே ஆகும் என்று கருதுதல் வேண்டும். மேலும், இவர் இறைவனை 'வடதொன்னூல் சந்தப்பாவில் போற்றுதல் செய்தே தனிநின்ற மைந்தன்' என்று கந்தபுராணம் கூறுகின்றது. ஈண்டுத் தொன்னூல் என்பது தென்னூலாக இருக்கவேண்டும். ஏடு எழுதுவோரால் தென்னூல் என்பது தொன்னூலாக எழுதப்பட்டிருக்கவேண்டும். கச்சியப்ப சிவாசாரியார் கருத்துத் தென்னூல் என்பதே ஆகும். வடதொன்னூல் என எப்படிக் கூறியிருப்பார்? வடநூலில்தான் மார்க்கண்டேயர் போற்றுதல் செய்திருப்பார் என்று கூற எண்ணியிருந்தால் 'வடநூலின்'

என்றே பாடி இருப்பார். பாட்டின் சீர் அமைப்பும் கெட்டிராது. ஆகவே, கந்தபுராண ஆசிரியர் வடதென் னூல் என்றுதான் பாடி அமைத்திருத்தல் வேண்டும். இதனுல் மார்க்கண்டேயர் இரு மொழிகளையும் அறிந் தவர் என்பது உண்மையே.

மார்க்கண்டேயர் தமிழ் மொழியினை நன்கு அறிந் திருந்தனர் என்பதோடின்றித் தம் பெயரால் மார்க்கண் டேயர் காஞ்சி என்னும் நூலைத் தமிழில் பாடியும் இருக்கின்றுர் என்பதை முன்பே கூறியுள்ளோம்.

ஆகவே, மார்க்கண்டேய முனிவர் பாடியுள்ள ஒரு தமிழ்ப்பாடல் புறநானூற்றில் காணப்படுதலின், இவர் தமிழ்ப்பெரும் புலவரும் ஆவார் என்பது மேலே காட் டப்பட்ட கருத்துக்களுக்கு அசைக்க ஒண்ணுச் சான்று அன்ருே? இனி அப்புறநானூற்றுச் செய்யுள் புகலும் கருத்தையும் பொருளையும் சிறிது ஆய்வோமாக.

முதற்கண் அப்பாடலை முற்றிலும் காண்பது நல்லது.

மயங்கிருங் கருவிய விசும்பு முகன் ஆக
இயங்கிய இருசுடர் கண் எனப் பெயரிய
வளிஇடை வழங்கா வழக்கரு நீத்தம்
வயிரக் குறட்டின் வயங்குமணி ஆரத்துப்
பொன்னம் திகிரி முன்சமத் துருட்டிப்
பொருநர்க் காணுச் செருமிகு முன்பின்
முன்னேர் செல்லவும் செல்லா தின்னும்
விலைநலப் பெண்டிரில் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யான்எனப் பல்மாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னேரே

என்பது. இதற்குரிய திணை காஞ்சி; துறை பெருங் காஞ்சி.

மார்க்கண்டேய முனிவர்க்கு இறைவன் திருமுன் சென்று அவன் திருவருளை வேண்டுவது அன்றி, வேறு எவரிடமும் சென்று எதையும் விழையும் விருப்பு இல்லை. ஆகவே, இவரது பாடல் ஏனைய பெரும்பாலான புலவர்கள் அரசனை அண்மித் தமக்கு வேண்டுவன கேட்டுப் பெறுதல் போன்று பாடப்பட்டது அன்று இப்பாடல் என்பது புலப்படுத்துதல் காண்க. மேலும், இவர் பெருமுனிவர் ஆதலின், காஞ்சித்திணையும் காஞ்சித்துறையுமே அமையப் பாடியுள்ளனர்.

இனிக் காஞ்சித்திணை இன்னது, காஞ்சித்துறை யாவது யாது என்பனவற்றை அறிந்துகொள்வோமாக. காஞ்சி இன்னது என்பதை.

'பாங்கரும் சிறப்பில் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே'

என்று தொல்காப்பியம் கூறுகிறது. இதற்குப் பொருள் தரும்போது நச்சினார்க்கினியர், 'தனக்குத் துணையில்லாத வீட்டின்பம் ஏதுவாக, அறம், பொருள், இன்பமாகிய பொருட்பகுதியானும், அவற்றுப் பகுதியாகிய உயிரும் யாக்கையும் செல்வமும் இளமையும் முதலியவற்றானும், நிலைபேறில்லாத உலக இயற்கையைப் பொருந்திய நன்னெறியினை உடைத்துக் காஞ்சி என்றவாறு' என்று எழுதினர். மேலும், இதனை விளக்கும் போது,

"எனவே, வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் சாற்றும் குறிப்பினது காஞ்சி ஆயிற்று. பாங்கு, துணை" என்று விளக்கி, மேலும்,

"உலகிற்கு நிலையாமை கூறுங்கால். அறமுதலாகிய பொருட்பகுதி ஏதுவாகக் கூறின் அன்றி, உலகு என்பதற்கு வடிவு வேறு இன்மையின் பல்லாற்றானும் என்று, ஆன் உருபு கொடுத்தார். கெடுங்கால் கணந்தோறும் கெடுவனவும், கற்பந்தோறும் கெடுவனவுமாம் என்றதற்கு ஆறு என்றார். நிலைபெற்ற வீட்டினான் இவற்றின் நிலையாமை உணர்தலின் வீடு ஏதுவாயிற்று. பல்லாற்றானும் என்றதனால் சில்லாற்றானும் வீடு ஏதுவாகலின் நிலையாமை குறிப்பு ஏதுவாகலும் கொள்க. இஃது அறிவன் தேயமும், தாபதபக்கமும்பற்றி, நிலைஇன்மைக் குறிப்புப் பெற்றாம்' என்று விளக்கம் தந்தனர். தந்ததோடின்றி மார்க்கண்டேயனார் பாட்டையே இக் காஞ்சித்திணைக்கு உதாரணம் ஆக்கினார். ஆகவே, காஞ்சி என்னும் சொல் நிலையின்மை என்னும் பொருள் தருதலைக் காண்க.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் காஞ்சித் திணையினை விளக்கும்போது,

'வேஞ்சின மாற்றான் விடுதர வேந்தன்
காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று'

என்று கூறினர். இதற்குப் பொருள் "வெவ்விய சினத்தையுடைய வேற்றுமன்னன் வந்துவிட, அரசன் காஞ்சி என்னும் பூவை மலைந்து காவலிடத்தைக் காக்க நினைந்தது" என்பது. இதற்கு எடுத்துக்காட்டாக,

அருவரை பாய்ந்திறுதும் என்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச்—செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில்'

என்ற வெண்பா காட்டப்பட்டது. ஆகவே, மார்க்கண்டேயனுர் பாடல் புறப்பொருள் வெண்பா நூலின் காஞ்சிக்கு உரியது ஆகாது. தொல்காப்பியம் கூறும் காஞ்சிக்கே உரியதாகும்.

அடுத்தாற்போல் பெருங்காஞ்சித் துறையைப்பற்றிச் சிறிது காண்போம். தொல்காப்பியத்துள் காஞ்சித்திணையின் விரிவைப்பற்றிக் கூறுகையில் பெருங்காஞ்சி என்ற பகுப்டைக் கூறிற்றிலர். ஆனுல் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் ஐயனுரிதனுர் தாம் கூறிய காஞ்சித்திணையில் பெருங்காஞ்சியைக் கூறியதோடு, மீண்டும் பொது இயல் படலத்தில் காஞ்சிப் பொதுவியல்பால என்னும் தலைப்பின்கீழ் ஒரு பெருங் காஞ்சித் துறையைக் குறிப்பிடுகின்ருர்.

காஞ்சித்திணையில் கூறும் பெருங்காஞ்சிக்கு இலக்கணம் தரும்போது,

தாங்கு திறல்மறவர் தத்தம் ஆற்றல்
வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று

என்று கூறுகிருர். இதற்குப் பொருள் "எதிர்வரும் படையினைத் தடுக்கும் வலியினையுடைய கொடுவினையாளர் தத்தம் வலியை மிக்க பெருஞ்சேனை இடத்துத் தோற்றுவித்தது" என்பது. இதற்கு உதாரணமாக,

வில்லார் குறும்பிடை வேறுவே ருர்த்தெழுந்த
கல்லா மறவர் கணைமாரி—ஒல்லா
வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லாம்
இருவி வரைபோன்ற இன்று

என்ற வெண்பா காட்டப்பட்டது. இந்த இலக்கணமும் மார்க்கண்டேயர் பாட்டிற்கு ஒவ்வாது. ஆனுல்,

காஞ்சிப் பொது இயல் படலத்தில் கூறப்பட்ட பெருங் காஞ்சிக்குரிய இலக்கணம் மார்க்கண்டேயனுர் பாட லுக்கு முற்றிலும் பொருத்தம் உடையதே. அவ்விதி,

மலையோங்கிய மாநிலத்து
நிலையாமை நெறிஉரைத்தன்று' என்பது.

இதன் பொருள்: "வரை உயர்ந்த பெரிய குவல யத்து நிலையில்லா நெறியைச் சொல்லியது" என்பது. இதற்குரிய எடுத்துக்காட்டு வெண்பா,

ஆயா தறிவயர்ந் தல்லாந் தகல்இடத்து
மாயா நிதியம் மனைச்செறீஇ—ஈயா
திறுகப் பொதியன்மின் இன்றொடு நாளைக்
குறுக வருமரோ கூற்று

என்பது.

இனி மார்க்கண்டேயனுர் பாடல் தொல்காப்பியர் கூறும் காஞ்சித்திணைக்கு ஏற்ற பொருள் தருதலை ஆய்வோமாக. இப்பாடல் முனிவர் பாடல் ஆதலின் மக்கட்கு உரிய உபதேசமொழிகளாக அமைந்துள்ளது. அதே நேரத்தில் முனிவரது தமிழ்ப்புலமையும் இப் பாடலில் தழைத்து இனிது காணப்படுகிறது.

முதல் இரண்டடிகளில் அழகிய வர்ணனை காணப் படுகிறது. அவ்வர்ணனையும் உவமை அணிபொதுளத் துலங்குகின்றது. நிலமகளைத் தம் கருத்தில் எண்ணு கிருர் புலவர். பூமியை மகளாக உருவகப்படுத்திய முனிவர், அவளுக்கு ஏற்ற முகத்தையும், கண்களையும் நன்கு தேடித் தம் பாவில் இயைத்துக் காட்டுகின்ருர். அந்நிலமகள் முகம் யாது? கண்கள் யா? அவை தாம் முறையே விண்ணும், விண்ணில் இயங்கும் சந்திர

சூரியர்களும் ஆவார். பெரிய நிலமகளுக்குப் பரந்த ஆகாயமாம் முகமும், இரு கண்களுக்கு ஒளியுடைய சுடர்களாம். கண்களுக்கு எத்துணை பொருத்தமான உவமை பாருங்கள்! இதனை அவரது வாக்காகிய,

'மயங்கிருங் கருவிய விசும்பு முகன்ஆக
இயங்கிய இருசுடர் கண்என'

என்ற அடிகளில் காண்க. இடி மின்னலோடு கூடிய ஆகாயம் ஆதலின், 'மயங்கு இரும் கருவிய விசும்பு' என்றனர். பொருள் விளக்கம் காணும்போது இவ்விரு அடிகளைப் பத்தாவது வரியில் வரும் நிலமகள் என்னும் தொடருடன் இயைத்துக் காண்க.

அடுத்தாற்போல் மன்னர்களின் வீரச்சிறப்பையும், செல்வச்சிறப்பையுமுணர்த்த முற்படுகின்ருர் முனிவர். முதற்கண் புரவலர்களின் பெரும்பொருட் சிறப்பினைக் காண்போமாக.

பொருள் மிகப் படைத்தவர்களே பொன்னாலும், வயிர மணிகளாலும் அணிகலன்களை அணிய இயலும். அரசர்கள் தமது சக்கரப்படையினையும் வயிரமணிகளால் அமைத்துக்கொள்வர். ஏன்? சிலம்பி என்பவள் தனது அரவிந்தத் தாளில் செம்பொற் சிலம்பு அணிய வேண்டும் என ஔவையார் வாழ்த்தவில்லையா? 'செம்பொற்சிலம்பி அரவிந்தத் தாள் அணியும் அப்பொற் சிலம்பே சிலம்பு' என்பது அவ்வம்மையார் வாக்கு அல்ருே? கண்ணகி தனது காற்சிலம்பின் தன்மையினைப் பாண்டியனிடம் கூறியபோது, 'என் கால் பொற் சிலம்பு மணியுடை அரியே' என்று கூறியதை அறியும் போது, செல்வர்கள் பொன்னாலும் மணியாலும் அணிகலன்களை அணிந்தனர் என்பது பெறப்படுகிறது.

முனிவரால் குறிப்பிடப்பட்ட சக்கரப்படை பொன்னால் இயன்றது என்பதில் வியப்பு இல்லை. பொன்னால்மட்டும் இயைந்தது அன்று; அதன் குறடு (நடுப்பகுதி) வைரத்தால் அமைந்தது. அதன் ஆரைகள் வயிரமணியால் ஆனவை. இவ்வாறான நிலையில் அரசர்கள் துலங்கினர் என்பதையே ஆசிரியர்,

'வயிரக் குறட்டின் வயங்குமணி ஆரத்துப்
பொன்னம் திகிரி..........முன்னோர்'

என்றனர்.

அடுத்து, ஆசிரியர் நிலையாமையினை உணர்த்த முன் வருகின்றனர்.

இம்மண்ணுலகில் யாவரும் இறப்பினை உடையவாகளே. 'எப்போ தாயினும் கூற்றுவன் வருவான்' என்பது கபிலர் வாக்கு. இவ்விதி, அரசர்க்காயினும் ஆண்டிக்காயினும் ஒன்றே. அரசர்கள் மாண்டு ஒழிந்ததைப் பட்டினத்தடிகள், 'முடிசார்ந்த மன்னரும், மற்றும் உள்ளோரும் முடிவில்ஒரு, பிடிசாம்பராய் வெந்து மண்ணாவது கண்டு' என்பர். இந்தக் கருத்தைத்தான் மார்க்கண்டேயனார் அக்காலத்திலேயே 'முன்னோர் செல்லவும்'என்றனர். ஈண்டு,முன்னோர் என்போர் அரசர்கள் ஆவர். அரசர்கள் தாம் என்பதைப் புலவர், 'செருமிகு முன்பின் முன்னோர்' என்று குறிப்பிடுதல் மூலம் உணரலாம். அதாவது, போரில் விளங்கும் வலியுடைய மன்னர் என்பது பொருள். இம்மன்னர்களின் வீரத்தைப் புலவர் கூறவந்தபோது, அரசர் பல பகைவர்களை வென்றும், மேலும், தம்முடன் பொருதற்கு ஒன்னார் இல்லையே என்று காணாது அயர்வராம். இதனையே 'பொருநர்க்காணாச் செருமிகு மொய்ம்பு' என்பர். இத்

தகைய அரசர்கள் பொன்மயமான சக்கராயுதத்தைப் போரில் உருட்டி வெற்றி காண்பர். இந்தக் கருத்து 'பொன்னம் திகிரிமுன் சமத்து உருட்டி' என்னும் தொடரில் துலங்குகிறது.

மார்க்கண்டேயனார் நிலமகள் வருந்துவதை நமக்கு உணர்த்த வருகின்றார். அவள் 'அரசர் பலர் இறக்கவும் நான் மட்டும் இறவாது இருக்கின்றேனே!' என்று வருந்தினளாம். 'முன்னோர் செல்லவும் செல்லாது, இன்னும் உள்ளேன்' என்னும் வரியைக் காணவும். இவர்கள் காற்று வழங்கா விசும்பினூடே மேலுலகம் சென்றனர் என்பதையும், 'வளியும் வழங்கா வழக்கறு நீத்தம் செல்லவும்' என்று பாடினர். நீத்தம் என்பது ஈண்டு விசும்பு.

இப்படித் தன் வாழ்வை வெறுத்த நிலமகள், உடனே, 'வாழியர் யான்' என்று கூறினாள் எனவும் மார்க்கண்டேயனார் உணர்த்துகின்றார். வாழியர்என்பது வஞ்சப்புகழ்ச்சியாக அவளால் கூறப்பட்டதே அன்றி வேறன்று. ஈண்டு வாழியர் என்பது குறிப்பெச்சமாக ஒழிக என்னும் பொருளை உணர்த்தி நிற்கிறது.

நிலம் ஒருவர்க்கே உரியது அன்று. பரத்தையரும் ஒருவனுக்கே உரியவர் அல்லர். யார் யார் உலகில் வாழ வருகின்றனரோ, அவர்கள் யாவரும் நிலமகளைப் புகழ்ந்து போற்றுவர். அவ்வாறே விலைமகளது இன்பம் துய்க்க வருபவர்கள் யாவரும் வேசி என்றும் கருதாது அவளைப் போற்றிப் புகழ்வர். இதனை நன்குணர்ந்தே, நிலமகளும் பரத்தையரைப் புகழ்வதுபோல் தன்னைப் பலரும் புகழ்ந்து பேசுகின்றனர் என்பதை 'விலைநலப்

பெண்டிரில் பலர் மீக்கூற' என்றனள் எனப் புலவர் புகல்கின்றார்.

மேலே குறிப்பிட்ட விளக்கங்களையும், 'நிலமகள் அரசர் முதல் யாவரும் இறந்தும் நான் மட்டும் இருக் கின்றேன்' என்று கூறிய கருத்தையும் எண்ணும்போது, ஒல்காப் பெருமைவாய்ந்த தொல்காப்பியர், 'மலர்தலை உலகத்து மரபுநன் கறியப் பலர் செலச் செல்லாக் காடு' என்று யாத்த நூற்பா நினைவிற்கு வருகிறது. ஈண்டுக் காடு புறங்காடாயினும், புறங்காடும் நிலத்தில் ஒரு கூறுதானே ? இதுநிற்க.

பூமகள் தன் வாழ்வை வெறுத்து அழுதனள் என் பதையும், மார்க்கண்டேயனார் நிலமகள் அழுத காஞ்சி என்னும் வரியில் உணர்த்தினர்.

நிலமகட்குக் குறைவில்லை. அவள் பலவித மாட் சிமையுடையவள். இதனைப் புலவரே 'பல்மாண் நில மகள்' என்று உணர்த்துவதால் உணரலாம். அப்படி இருந்தும் அழுதனளாம் !

மார்க்கண்டேயனார் நிலையாமையைக் குறித்து நல னுற எடுத்து மொழிந்தனர். அப்படி மொழிந்தவை அவருடைய கருத்துமட்டும் அன்று. தமக்கு முன்னே இருந்தவர்களின் கருத்தும் ஆகும். இதனையும் முனிவர் 'காஞ்சியும் உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னோரே' என்று அறிவுறுத்தியுள்ளனர். இங்ஙனம் காஞ்சியை உணர்த்தியவர்கள் தம் மனம் போனவாறு உரைத் திலர்; உணர்ந்தே உணர்த்தினர் என்பதைத் தெரிவித் திருப்பதையும் கண்டு தெளியவும்.

இதனினும் காஞ்சியைப்பற்றித் தெளிவுற எங்ஙனம் கூற இயலும்? அவர் கூறிய அக்காஞ்சியைத் தொகுத்துக் காணவிழைவார்,

'முன்னோர் செல்லவும் செல்லா தின்னும்
விலைநலப் பெண்டிரில் பலர்மீக் கூற
உள்ளேன் வாழியர் யான்எனப் பலமாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டென உரைப்பரால் உணர்ந்திசி னோரே'

என்னும் வரிகளில் காண்க.

ஆகவே, நாமும் நிலையாமையை உணர்ந்து, உள நாள் வரைப் பிறர்க்குத் தீமை புரியாது நல்வாழ்வு வாழ முயல்வோமாக.

---

# 3. பெரியபுராணம்

இக்கட்டுரையில் இருபெருங் கருத்துக்கள் காட்டப்பெறும். ஒன்று, பெரியபுராணம் காவியமா? என்பது. மற்றொன்று, கம்பருக்குப் பெரியபுராணத்தில் இருந்த ஈடுபாடு.

அமிழ்தினும் இனிய செந்தமிழ் நூல்களில் ஆன்றோர்களால் பெரிதும் பாராட்டிப் பேசப்படும் நூல்கள் பல. அவற்றுள் தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் பாடியருளிய பெரியபுராணமும் ஒன்று. தண்டமிழில் மேலாந்தரமாயுள்ள நூல்கள் இன்னின்ன என உமாபதி சிவாசாரியார் பாடிய பாட்டில், இந்நூலை அழகுறச் சுட்டிக் காட்டியுள்ளார்,

'வள்ளுவர்நூல் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாந் தரம்'

என்பது அப்பாட்டு. தொண்டர் புராணம் என்பது பெரியபுராணம்.

இந்நூல் தலைசிறந்த நூல் என்பதை, இது சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்றாகத் திகழ்வதினின்றும் நன்கு உணர்ந்துகொள்ளலாம். புற இருளைச் சூரியன் போக்குவதுபோல, அக இருளை இப் பெரிய புராணம் அகற்றவல்லது என்பதைப்

'பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர்
புராணம் என்பாம்'

என்னும் செய்யுளால் அறியலாம்.

இத்தகைய சிறப்புடைய நூலை யாத்த சிரியர் புகழ் செப்புந்தரமன்று. அச்சிரியர் யார்? அவரே தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமானுவார். சேக்கிழார் பெருமானுர் திருவள்ளுவரோடு ஒப்பவைத்துப் பேசப்படும் பெருமை சான்றவர். திருவள்ளுவர் பெருமான் தெய்வப்புலவர் என்னும் பட்டம் பெற்றவர். அவரைப்போலவே சேக்கிழார் பெருமானும் தெய்வப் புலவர் சேக்கிழார் எனச் சிறப்பிக்கப்பட்டவர். திருவள்ளுவரையும் அவர் யாத்த திருக்குறளையும் சிறப்பித்து ஓதும் தனிநூல் திருவள்ளுவமாலை எனப்படும். அதுபோலவே சேக்கிழார் சுவாமிகளையும், அவர் செய்த நூலையும் புகழ்ந்து பேசும் தனிப்பெரு நூல் 'சேக்கிழார் பிள்ளைத்தமிழ்' என்பது. இப்புலவர்பெருமான் வரலாறு தனி நூலாகச் சேக்கிழார் புராணம் என்றே கூறப் பட்டு நடைமுறையில் இருந்து வருவதையும் நினைவு கொள்ளுவோமாக. இதைச் செய்தவர் சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பதினுன்கனுள், எட்டு நூல்களைச் செய்த செம்மல் உமாபதி சிவாசாரியார் ஆவர். இவ்வாறு தனிப்பட்ட நூலால் சிறப்பிக்கப்பட்ட பெருமை சான்றவர்கள் திருவள்ளுவரையும் சேக்கிழாரையும் தவிர வேறு புலவர்கள் எவரும் இலர். ஏனைய புலவர்களின் புகழ் தனியன்கள் என்னும் தனிப் பாடல்களால் மட்டும் சிறப்பிக்கப்பட்ட அளவில் நின்றுவிட்டது ஏனைய புலவர்கள் தனித்தனி நூல்களின் வாயிலாகச் சிறப்பிக்கப்பட்டிலர்.

சேக்கிழார் பெருமான் புலவர்களால் பெரிதும் பாராட்டப்பட்டவர். தில்லைவாழ் அந்தணர் மரபினரான உமாபதி சிவாசாரியார், 'செல்வமலி குன்றத்தூர்ச்

சேக்கிழார் அடிபோற்றி' என்று அவர் திருவடிகளைப் போற்றி நின்றதோடு அமையாமல் 'திருத்தொண்டர் புராணத்தை அளவிட நம் சேக்கிழார்க் கெளிதல்லது தேவர்க்கு அரிதே' என்றும்,

மதுரஇ ராமா யணகதை உரைசெய்த
வான்மிக பகவனும் ஒப்பல்லன்
விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த
வேதவி யாதனும் ஒப்பல்லன்
சிதைவற ஆயிர நாவுடன் அறிவுள
சேட விசேடனும் ஒப்பல்லன்
பொதிய மலைக்குறு முனிவனும் ஒப்பலன்
புகழ்புனை குன்றை முனிக்கென்பர்'

என்றும் பாராட்டிப் புகழ்ந்துள்ளார். வடநூற் கடலும் தென்னூல் கடலும் நிலைகண்டுணர்ந்த சிவஞான யோகிகள், சேக்கிழார் பெருமானைப் புகழ்ந்து பேசுகையில்,

'வாக்கி னுல்சொல்ல வல்லபிரான் எங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சிந்தை இருத்துவாம்'

என்றும்,

'திருத்தொண்டை நன்னுட்டு நானிலத்தைத்
திணைவளனும் தெரித்துக் காட்ட
மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்
குலக்கவியே வல்லான் அல்லால்
கருத்தொண்டர் எம்போல்வார் எவ்வாறு
தெரிந்துரைப்பார்?

என்றும் தெரிந்து பேசினுர். இங்ஙனம் அறிவுசான்ற அறிஞர் பெருமக்களால் போற்றப்படுவதற்குக் காரணம், சேக்கிழார் பெருமானிடத்து அமைந்து கிடந்த

புலமைப் பெருக்கே என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம். இஃது உண்மை என்பதை, ஒருகால் அனபாயச் சோழமன்னன் எழுப்பிய வினாக்களாகிய 'மலையைவிடப் பெரியது எது? கடலைவிடப் பெரியது எது? உலகைவிடப் பெரியது எது?' என்பனவற்றிற்கு அவனது அவைக்களப் புலவர் பலரும் விடை இறுக்க இயலாது விழித்தபோது, 'சான்றோருடைத்து தொண்டை நன்னாடு' என்பது உண்மையாயின், இவ் வினாக்கட்கு விடை காணட்டும் எனத் தொண்டை நாட்டிற்கு இவ்வினாக்களை ஓலையில் எழுதி அனுப்ப, அதுபோது அவற்றிற்கு நேர்விடைகளாகச் சிறிதும் தட்டுத் தடங்கல் இன்றி,

'நிலையில் திரியா தடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது'

'பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலில் பெரிது'

'காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது'

என்று சேக்கிழார்பெருமான் விடை இறுத்தமையினின்று தெள்ளத் தெளியக் காணலாம். இன்னமும் இவரது பெருமைகளைக்கூறிச் செல்லின் இவ்வேடு இடந் தராது பரக்கும் என்று கருதி, இத்துடன் சுருக்கப் பட்டது. வேண்டுவார், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் நூலுக்கு யான் எழுதிய பெருவிளக்க உரை நூலகத்துப் பரக்கக் கண்டு பரவசமுறுவார்களாக.

இனி, அகன்ற ஞானமும் ஆழ்ந்த புலமையும் உள்ளார்ந்த அன்பும் வாய்ந்த அருண்மொழித் தேவ

ராம் சேக்கிழார் பெருமான் பாடியருளிய நூல், புராணமா? அன்றிக் காவியமா? என்பதை ஈண்டுச் சிறிது ஆராய்வோமாக.

'பெரியபுராணம் என்னும் பெருவழக்குப் புறச் சான்ருக இருக்கவும், தொண்டர் புராணம் என நூலகத்தே அகச் சான்ருக அமையவும், இத்தகைய ஆசங்கை எழக் காரணம் என்னை ?' எனச் சிலர் வினுவலாம். ஆனால், பெரிய புராணப் போக்கையும் ஆசிரியரின் உள்ளக்கிடக்கையையும் சிறிது ஊன்றிப் பார்ப்போமாயின், இந்நூல் காவியமே என்பது தெள்ளத் தெளியப் போதரும். புராணம் ஐந்து விடயங்களைப்பற்றிக் கூறவேண்டும் என்பது விதி. அதாவது, அது பஞ்ச லட்சணம் உணர்த்தவேண்டும் என்பது. அவையே உலக சிருட்டி, பிரதி சிருட்டி. மன்னர், முனிவர் வமிசக் கிரம வர்ணனம், அன்னோர் வமிசக்கிரம வர்ணனம், மநு வந்தரம் என்பன. இவ்வைந்தும் இப்பெரிய புராணத்தில் இடம் பெற்றில, அங்ஙனமிருக்க, இந்நூல் புராணம் என்னும் பெயரை எங்ஙனம் பெற்றது? எனின், அதையும் கூறுதும்: 'புராணம்' என்னும் சொல், 'பழமை' என்னும் பொருளைத் தருவது. இந்தப்பொருள் திருவாசகத்தில் வரும் சிவபுராணம் என்னும் தலைப்புக்குப் பொருள் கூறவந்த அனுபவ ஞானிகள் சிவனது அநாதிமுறைமையான 'பழமை' என்று விளக்கியதனுல் அறியப்படுகிறது. பெரியபுராணத்துள் கூறப்படுபவர்களின் வரலாறுகள் பழமையானவை ஆதலின், 'புராணம்' எனப்பட்டது என்று அறியவும்.

இங்ஙனம் எடுத்துக்காட்டிய காரணங்களால் சேக்கிழார் செய்த நூல் பஞ்சலட்சணம் உணர்த்தும்

புராணம் போன்ற புராணம் அன்று என்பதை அறிந்தனம். இனி இந்நூல் காவியமே என்பதற்குரிய காரணங்களைக் கவனிப்போமாக. இவ்வாறு ஒரு முடிவுக்கு வருவதற்கு முன்னம் காவியம் இன்னது என்பதை அறிதல் மிகமிக இன்றியமையாததாகும்.

தண்டி ஆசிரியர் தம் தண்டியலங்கார நூலில் பெருங் காப்பியத்தின் இலக்கணத்தைப் பேசுகையில்,

'பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்
றேற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிகர் இல்லாத் தலைவனை உடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியில் புலத்தல் கலவியில் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரம் தூது செலவிகல் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப'

என்று கூறிப் போந்தார்.

தண்டமிழ் மொழியில் உள்ள ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்று கொங்குவேண் மாக்கதை என்பது. அது போலப் பெரிய புராணமும் காவியமுமாகிய ஒரு மாக்கதை என்பதை அறிவிக்கவே, பெரிய புராணத்தில்

'எடுக்கு மாக்கதை' என்னும் பாடல் உளது. பெரிய புராணத்தின் முதற்செய்யுள் இறைவனுல் 'உலகெலாம்' என எடுத்துக்கொடுக்கப்பட்டுத் தொடங்கப்பட்ட பாடல்,

'உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்'

என்பது.

இப்பாடலில் வாழ்த்து வணக்கம் வருபொருள் அமையப்பெற்றிருத்தலைக் காணலாம். 'வாழ்த்தி' என்னும் சொல் வாழ்த்தையும், 'வணங்குவாம்' என்னும் மொழி வணக்கத்தையும் உணர்த்துகின்றன. இங்ஙனம் வாழ்த்தி வணங்கியதன் நோக்கம் தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறுதல் வேண்டும் என்பதாம். இக் குறிக்கோளுடன், வாழ்த்தியும் வணங்கியும் இந்நூலைத் தொடங்குகிருர் ஆதலின், செயப்படுபொருளும் கூறப் பட்டுள்ளதை உய்த்து உணர்வோமாக. மேலும், அடி யார் பெருமையைக் குறிக்கோளாகக்கொண்டு பாடினுர் எனினும் செயப்படுபொருள் தோற்றம் அளித்தலை எளிதில் உணரலாம். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இவற்றின் பயனைத் தருவதே நூல். இவற்றிற் குப் போதிய ஆதாரங்கள் இந்நூலகத்துள. இந்நூலில் கூறப்படும் அடியார்கள் பலர் பெறுதற்கரிய பேறு பெற்றமைக்கு அவர்கள் மேற்கொண்ட அறமே என்பது தெள்ளத்தெளிந்த செய்தியாகும். திருஞானசம்பந்தர் திருமயிலைப் பூம்பாவையை என்பாக இருந்த நிலையில் இருந்து எழுப்பிய காலத்தில், அறத்தின்மீது ஆணை யிட்டே எழுப்பினுர்.

'மண்ணி னில்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லார்அடி யார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணி னால்அவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்'

என்று கூறியதும், பூம்பாவை உயிருடன் எழுந்தனள் என்பதை உணரும்போது அறத்தின் பயன் அறிவிக்கப் படுகிறது.

பொருட்பேறு பெறுதலைக்குறித்து இந்நூலில் பல சான்றுகள் பரந்து கிடக்கின்றன. 'என்னப்பன் என்னைப் பாடினன்; சம்பந்தன் தன்னைப் பாடினன்; சுந்தரன் பொன்னுக்குப் பாடினன்' என்னும் வழக்கு மொழிகளில் சுந்தரன் பொன்னுக்குப் பாடிப் பொன்னும் மணியும் பெற்றதை அன்னார் வரலாற்றில் பல்வேறு இடங்களில் நன்கு உணரலாம். 'நிதியின் குவையும் உடன்கொண்டு நிறையும் நதியும் குறைமதியும் பொதியும் சடையார் திருப்பனையூர் புகுவார் புரிநூல் மணி மார்பர்' என்பது வன்றொண்டர் திருப்புகலூரில் பெற்ற பொருட்பேற்றை உணர்த்துவதாகும்.

இன்பச் செய்திகளும் இந்நூலில் ஏற்ற இடங்களில் இடம் பெற்றுள்ளன. சுந்தரர் பரவையாரை மணந்து இன்பத்தில் திளைத்து விளையாடியதைக் கவிஞர் பெருமானர் குறிப்பிடும் பகுதிகள் கழிபேர் இன்பம் தருவனவாகும்.

'பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையென்னும், மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்ருர்' என்னும் அடிகளில் இக்கருத்துக் குறிக்கப்பட்டிருப்பதைக் காண்க.

வீட்டின் சிறப்பினை இப்பெரிய புராணம் இயம்புமோ என்று எண்ணுவதும் ஒரு வியப்பேயாகும். இந்நூலில் காணும் அடியார்கள் தம் வாழ்நாள் இறுதியில் எய்திய பேறு இவ்வீட்டின்பப் பேறேயாகும்.

'வானவர் பூவின் மாரி
பொழியமா மறைகள் ஆர்ப்ப
ஞானமா முனிவர் போற்ற
நலமிகு சிவலோ கத்தில்
ஊனமில் தொண்டர் கும்பிட்
டுடன்உறை பெருமை பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும்
வானிடை இன்பம் பெற்றார்'

என்பது வீடுபேற்றின் நிலையினை இயம்பியதாகும்.

தன்னேரில்லாத் தலைவன் காவியத்திற்கு ஒரு சீரிய உறுப்பினன் ஆவன். 'பெரிய புராணத்தின் தலைவர் யார்?' என வினவலாம். பெரிய புராணத்தில் அறுபான்மும்மை அடியார்களுடைய வரலாறுகள் கூறப்பட்டனவேனும், தம்பிரான் தோழரே இக்காவியத்தின் தம் நேர் இல்லாத் தலைவராவர். அவரே தலைவர் என்பதைத் தம் நுண்ணறிவுத் திறனால் தொண்டர்சீர் பரவுவாராம் சேக்கிழார் பெருமானார் நுட்பமாகக் கூறியுள்ளார்.

சுந்தரரது வரலாற்றை ஆதிகயிலாய மலையில் தொடங்கித் தடுத்தாட்கொண்ட புராணத்தும், ஏயர்கோன் கலிக்காமர் நாயனார் புராணத்தும், கழறிற்றறிவார் நாயனார் புராணத்தும் இணைத்து, இறுதியில் வெள்ளையானைச் சருக்கத்தில் முடித்துக்காட்டியதிலிருந்து சுந்தரரே இக்காவியத்தலைவர் என்பது அவரது உட்கிடை என்பதை ஐயம் திரிபற அறியலாம். இவ்

வாறு கூறியதோடு அமையாமல், சருக்கங்கள் முடியும் தோறும் ஆளுடைய நம்பிகட்கு வணக்கச் செய்யுட்களை வழங்கிச் சென்றதினாலும் நன்கு உணரலாம். இங்ஙனம் வாழ்த்தியும் வணங்கியும் சென்றதன் நோக்கம், ஆளுடைய நம்பிகளது காவியத் தலைமை இந்நூலில் இடையறாது இயைந்து வருதலை உணர்த்தற்கே என்க.

சுந்தரமூர்த்திகள் பிறப்பிடம் வேறு; வளர்ப்பிடம் வேறு. என்றாலும், பரவையாரை மணந்த பின்பு, நிலையாக வாழ்ந்த இடம் திருவாரூரேயாகும். அதனால் தான் தம்பிரான் தோழர், எங்குத் தலயாத்திரை செய்யினும் மீண்டும் திருவாரூரில் வந்தே தங்குவார் ஆயினர். இந்தக் காரணங்களை மனத்தில் கொண்டு தம் நூலின் தம் நேரில்லாத் தலைவர் வாழ்ந்த இடமாகிய திருவாரூரையே சிறப்புக்குரிய நகரமாக அமைத்துக் கொண்டார் கவிவாணர். மேலும், சுந்தரரே இந்நூலுக்குத் தம் நேரில்லாத் தலைவர் என்பது பல்லாற்றாலும் விளங்கும். இவர் பெருமிழலைக் குறும்பரென்றும் பரம யோகியரால் பூசிக்கப்பெற்ற பெரும் பேறு பெற்றவர். இதனை அறிந்தே கற்பனைக் களஞ்சியமாம் சிவப்பிரகாச சுவாமிகள், ‘பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி பெரிதுவந்துன் திருவடித் தாமரை போற்றி விரைமலர் தூய் வந்தனை செய்கின்றான்’ என்று இவரைத் துதிப்பாராயினர். சுந்தரர் இறைவனார்க்குத் தோழர் என்பதாலும், தம்மைத் தம்பிரான் தோழர் என்று தரணி சாற்றுதலாலும் நன்கு உணரலாம். இதனை, ‘தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம்’ என்று புற்றிடங்கொண்ட புராதனனார் புகன்றதினாலும் உணரலாம். மேலும், இறைவரே இவரது பெருமைகளைப்பற்றிச் சங்கிலியாரிடத்தில் பேசுகையில்,

'சாருந் தவத்துச் சங்கிலிகேள் சால
என்பால் அர்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான்
வெண்ணெய் நல்லூரில்
யாரும் அறிய யான்ஆள உரியான்'

என விதந்து கூறுவாராயினர். இங்ஙனம் பல எடுத்துக்காட்டுகளால் சுந்தரர் பெரியபுராணத்திற்குத் தம் நேர் இல்லாத் தனிப்பெருந்தலைவர் என்பதை நிலை நாட்டலாம்.

தம்பிரான் தோழர் இக்காவியத் தலைவராயின். தலைவியார் யார்? என்பதையும் ஈண்டே நிலைநிறுத்த வேண்டியவராகின்றோம். தம்பிரான் தோழர்க்கு வாழ்க்கைத் துணைவியராக அமைந்தவரே காவியத்தலைவியார் ஆதற்கு உரிமையுடையவராவர். அற்றாயின், சுந்தரர் வாழ்க்கைத் துணைவியார் யாவர் என்பதனை ஆராய்ந்து முடிவு கட்டுதல் வேண்டும். நம்பியாரூரர்க்கு வாழ்க்கைப்பட்டவர் மூவர் முதலாக அமைந்தவர் புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் திருமகளார். ஆனால், இவ்வம்மையார் திருமணப் பந்தலில் கேளும் கிளையும் மகிழ்ந்து கண்டுகளிக்கும் நிலையில் சுந்தரர் பக்கலில் அமரும் பேறு பெற்றனரே அன்றி, அவரால் மங்கல நாண் பூட்டப்பட்டுத் திருமணத்தினை முற்றும் முடித்து இன்புறும்இல்லறத்தைநடத்தும்பேறுபெற்றிலர். காரணம் ஆண்டு இறைவர் போந்து அம் மணம் முற்றுருவகையில் தடை செய்ததாகும். ஆகவே, இவ்வம்மையார் சுந்தரர் வாழ்க்கைத் துணைவியார் என்று கூறுதற்கு உரியர் ஆகார். மூன்றாவதாக வாழ்க்கைப்பட்டவர் திருவொற்றியூர்ச் சங்கிலி நாய்ச்சியார். இவரை மணந்

தது உண்டு. ஆனால், முற்ற முடிய அவ்வம்மையாருடன் ஆளுடைய நம்பிகள் வாழ்க்கை நடத்தியவர் அல்லர். அவ்வம்மையாருடன் வாழ்வு நடாத்திய காலம் ஒரு திங்களாக இருக்கலாமோ, அன்றி இரு திங்களாக இருக்கலாமோ என்னும் ஐயம் எழுகின்றது. காரணம் என்னையோ எனில், சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியாருடன் வாழ்ந்தபோது, அன்னார் திருவாரூர்த் தியாகேசப் பெருமானைக் காணாது இருந்தமைகுறித்து வருந்திப் பாடுகையில், 'முந்தினமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன் எத்தனைநாள் பிரிந்திருக்கேன் என்னாரூர் இறைவனையே' என்று உளம் கனிந்து பாடுகிறார். அப்படிப் பாடியவர் ஒற்றியைவிட்டு உடனே திருவாரூர் நோக்கிப் புறப்பட்டும் விடுகிறார். செல்லுங்கால், சங்கிலியாரை உடனே அழைத்துச் சென்றிலர். எனவே, சங்கிலியாரையும் இவரது இல்லறத் துணைவியாராக ஏற்க இசைதற்கு ஏது இல்லை. 'அற்றாயின், இவரது வாழ்க்கைத் துணைவியார்தாம் யாவர்? இல்லறமாதரார்தாம் எவர்?' எனில் கூறுதும். இவரது உள்ளங் கொள்ளைகொண்ட மாதரார், திருவாரூர்ப் பரவை நாய்ச்சியார் ஆவார். இவ்வம்மையாரையே சுந்தரர் தம் வாழ்க்கைத் துணைவியராகக் கொண்டவர். புத்தூர்ச் சடங்கவி சிவாச்சாரியார் திருமகளாரை மணக்கும் வாய்ப்புப்பெறாது தடைப்பட்டபின் பரவையாரையே மணக்கும் பேறு இவர்க்குக் கிடைத்தது. இவரை மணந்தபின்பே, இவரது தலயாத்திரையில் திருவொற்றியூர்ச் சங்கிலியாரை மணக்க நேர்ந்தது. பரவையார் உள்ளமும் நம்பியாரூரர் உள்ளமும் காதலால் ஒன்றுபட்டன. திருவாரூரில் முதல் முதல் பரவையாரைச்

சுந்தரர் பார்க்கின்றனர். அப்படிப்பார்த்தபோதே அவர் அவ்வமையார்மீது காதல் கொண்டு கூறியவை யும், இவரைப்போலவே அவ்வம்மையார் எண்ணியவை யும் இருவர்களது உளம் ஒத்த காதல் உணர்ச்சியினைத் தெள்ளத் தெளியக் காட்டுவனவாகும்.

‘ கற்பகத்தின் பூங்கொம்போ !
காமன் தன் பெருவாழ்வோ !
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ ! புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்த விரைக்கொடியோ ?
அற்புதமோ! சிவனருளோ ?
அறியேன்என் றதிசயித்தார்’

என்பது சுந்தரர் பரவையாரைக் கண்டபோது காதல் உணர்ச்சியால் கூறப்பட்டதாகும்.

‘முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனோ ! பெருகொளியால்
தன்னேரில் மாரனோ ?
தார்மார்பின் விஞ்சையனோ ?
மின்னேர்செஞ் சடைஅண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனோ !
என்னே ! என் மனம்திரித்த
இவன்யாரோ ? எனநினைந்தார்’

என்பது பரவையார் தம் காதல் பெருக்கால் நம்பியாரூர ரைக் கண்டபோது கூறியதாகும். இவ்வாறு மனம் ஒத்த இத் தம்பதிகள் தம் இல்லறத்தை இறையவன் அன்பில் குறையாது நடத்தி வந்தனர். இதனைப் புலவர் பெருமான்,

'தன்னையா ளுடையபிரான் சரணா ரவிந்தமலர்
சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப்
பரவையென்னும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்றார்'

என்று பாடி மகிழ்ந்தார். எனவே, பெரியபுராணமாம் இப்பெருங் காப்பியத்திற்குப் பரவையார் கதாநாயகியாராகவும், நாவலூர்ப் பெருமான் கதாநாயகராகவும் திகழ்கின்றனர்.

தண்டியலங்கார ஆசிரியர் காவியத்தின் இலக்கணம் இன்னது எனக் கூறிய ஏனையபகுதிகட்குரிய அமைப்புக்கள் அத்துணையும் பெரிய புராணத்தினின்று எடுத்து மொழியத்தகுந்த அளவுக்கு உள்ளன. அவற்றை மற்றுமொருமுறை தொடர்ந்து எழுதி இன்புறுவோமாக. இதுகாறும் கூறிய அளவில் பெரியபுராணம் பெருங்காவியமே என்பதில் எள்ளளவும் ஐயம் எழ இடம் இல்லை அன்றோ? அடுத்துக் கம்பருக்குப் பெரிய புராணத்தில் இருந்த ஈடுபாட்டைக் காண்போமாக.

அன்பிற் பெரியார் சேக்கிழார்; கல்வியிற் பெரியார் கம்பர். முன்னவர் இயற்றியது தொண்டர் புராணமெனும் பெரியபுராணம் என்பதை முன்னர்க் கண்டோம். பின்னவர் யாத்தது இராமாவதாரம் எனும் இராமாயணம். இவ்விரு நூற்களும் தமிழ் இலக்கியங்களில் தக்க இடம் பெற்றுள்ளன என்று எவரும் ஒவ்வுவர். கம்பர் எந்த அளவுக்குப் பெரியபுராணத்துள் ஈடுபட்டுள்ளார் என்பதை ஆய்தற்குமுன் ஒரு சிறு சான்றின் மூலம் சேக்கிழார் கம்பருக்கு முற்பட்டவர் என்பதைக் காட்டி மேலே செல்வோமாக.

கம்பர் சேக்கிழாரைச் சிறப்பித்துத் தமது 'திருக்கை வழக்கம்' என்னும் நூலில்,

'காவலன்
மண்ணில் கடலில் மலையில் பெரிதென்? என
எண்ணிஎழு திக்கொடுத்த ஏற்றக் கை'

என்று பாடி இருக்கின்றனர். இந்த வரிகளில் அமைந்த வரலாறு சேக்கிழாரைப்பற்றியதாகும். இது முன்பே விளக்கப்பட்டது. ஆண்டுக் காணவும். இதனால் கம்பர், சேக்கிழார்க்குப் பிற்பட்டவர் என்பது உறுதி ஆயிற்று.

சேக்கிழார் இறைவன் அருளிய 'உலகெலாம்' என்னும் தொடரையே முதலாகக் கொண்டு முதற்பாட்டினைக் கலிவிருத்தத்தில் பாடியுள்ளனர். கம்பரும் இங்ஙனமே தமது முதல் பாடலாகிய கடவுள் வாழ்த்தையும்,

'உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே'

என்று தொடங்கிக் கலி விருத்த யாப்பில் பாடினர்.

ஆசை காரணமாக அடியார் வரலாற்றினைப் பாடுவதாகப் பெரிய புராணத்தில் 'அளவில் ஆசை துரப்ப அறைகுவேன்' என்று கூறி இருப்பதைக் கம்பர் 'ஆசை பற்றி அறையலுற்றேன் மற்றிக் காசில் கொற்றத்து இராமன் கதை' என்று பாடிக்கொண்டனர். அருள்மொழித்தேவர் தமது அடக்கம் தோன்றத் தம்மை ஒரு நாயாகவும், அடியார் பெருமையினைக் கடல்

அருகில் சுரக்கும் ஊற்றாகவும் பாடினர். கம்பர், இராம கதையினைப் பாற்கடலாகக் கூறியிருப்பதை இராமாயணத்தில் பார்க்கலாம். 'பெருகு தண்கடல் ஊற்றுண் பெருநசை ஒரு சுணங்கனை ஒக்கும் தகைமையேன்' என்பது சேக்கிழார் வாக்கு. 'ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு பூசை முற்றவும் நக்குபு புக்கென' என்பது கம்பர் பாடியுள்ள வரிகள். காவிரி ஆற்றிற்கு உவமை காட்டும்போது 'செய்யபூமகட்கு நற்செவிலிபோன்றது, எனச் சேக்கிழார் கூற, அவ்வாறே கம்பர், சரயுநதியைப்பற்றிக் கூறுகையில் 'சரயு என்பது தாய்முலை அன்னது' என்றனர். வளர்த்தல் தொழில் செவிலிக்கே இருப்பதால் அப்பொருத்தம் கருதிச் சேக்கிழார் செவிலியை உவமை காட்டியது மிகவும் பாராட்டற்குரியது. ஒருவேளை கம்பர், திருக்குறிப்புத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் பெருமானுர், பாலாற்றைப் பாடுகையில், 'பிள்ளைதைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்' என்ற பாடல் கருத்தையும் தழுவித் 'தாய்முலை அன்னது' என்று பாடினுர் எனவும் கொள்ளலாம்.

பால் ஆற்றில் சேக்கிழார் காலத்திலும்கூட நீர் அற்று இருந்ததுபோலும்! அங்ஙனம் நீர் அற்று இருந்தாலும், நீர் வேண்டித் தோண்டிய அளவில் நீர் சுரக்கும். அஃது எதுபோன்றது எனில்,'தாயின் வற்றிய கொங்கையும் குழந்தை தன கையால் அத்தனத்தை வருடிய போது. பால் சுரப்பது போன்றது' என்க. இந்த அழகிய உட்பொருளை மேற்காட்டிய உவமையின் மூலம் சேக்கிழார் பெருமான் புகன்றுள்ளார்.

சேக்கிழார் பெருமானுர் சில சொற்களால் பல பொருள்களைச் செப்பிச்செல்லும் ஆற்றல் படைத்தவர்.

சேக்கிழார் அரசனது ஆட்சிச் சிறப்பால் விலங்குகளும் பறவைகளும் நெறியில் ஒழுகின என்பதை, 'நீதிய புள்ளும் மாவும்' என்றனர். இதற்குரிய விளக்கம் போன்று தசரதனது செங்கோல் ஆட்சியின் சிறப்புக் கூறவந்த இடத்தில் கம்பர், 'வெள்ளமும் பறவையும் விலங்கும் ஒருவழி ஓட நின்றவன்' என்று விளக்கம் தந்தனர். சேக்கிழார் 'விருந்தின் ஆர்ப்பும்' என்று பாடிய தொடர்க்குரிய விளக்கத்தினை, 'வருந்தி வந்த வர்க்கு ஈதலும் வைகலும் விருந்தும் அன்றி விளைவன யாவையே' என்று கம்பர் பாடி விளக்கினர்.

சேக்கிழார், இறைவனார் இளையான்குடிமாறர் வறுமையுற்று நலிவுற்று வாடியிருக்கும் நிலையில், மேலும் மழை பொழியும் மாலை இருளில், அவர்தம் இல்லம் நாடிச் சென்ற நிலையினை இயம்பும்போது, 'பேதையா ளுடன் இன்றியே நண்ணினார்' என்றனர். இங்ஙனம் கூறியதின் நயம், இறைவி அன்பு வடிவினள் ஆதலின் அவள் உடனிருப்பின், 'இதுபோது நாயனார் வீட்டிற்கு நண்ணுதல் அடாது' என்று கூறி இறைவரைப் போக விடாது இரக்கத்தால் தடுத்திருப்பள்என்பதாம். இந்தக் கருத்தைக் கம்பர் நன்கு உணர்ந்து வாலிவதைப்படலத் தில் அவன் தன் வாயால் இராமனை நோக்கி என்ன கூறி னான் என்பதை நமக்குக் காட்டும் முகத்தான், 'ஆவி யைச் சனகன்பெற்ற அன்னத்தை அமிழ்தில்வந்ததேவி யைப் பிரிந்தபின்னர்த் திகைத்தனை போலும் செய்கை' என்று பாடியிருப்பதைக் காண்க. இதன் கருத்துச் சீதை இருந்தால் மறைந்துநின்று அம்பு எய்து ஏழைக் குரங்கி னைக் கொல்லுதல் தக்கதன்று என்று கூறித் தடுத்திருப் பாள் என்பதாகும். திண்ணனார் வசத்தில் நாகன் தனது

ஆட்சியினை அமர்த்தும்போது, அத்திண்ணனாரது தோளை ஆரத்தழுவினன் நாகன் என்பதைச் சேக்கிழார் குறிப்பிடும்போது, 'திண்ணனார் சிலைத்தாதை அழைப்ப வந்து காதல்புரி தாதைகழல் வணங்கும்போதில் செவ் வரைபோல் புயம்இரண்டும் செறியப்புல்லி' என்று பாடி யுள்ளனர். 'செறியப்புல்லி' என்பதற்குரிய பொருளை நன்கு விளக்கியுள்ளனர் கம்பர். தயரதனும் தனது அரசப்பொறுப்பை இராமனுக்கு அளிக்க அழைத்தனன். இராமனும் வந்துற்றனன். தயரதனை வணங்கினன். தயரதனும் இராமனைத் தழுவினன். இக்காட்சியினைக் கம்பர், 'வாள் உழவன் பாத பங்கயம் பணிந்தனன்; பணிதலும் அனையான் சீதை கொண்கனைத் திருவுறை மார்பகம்சேர்த்தான்' என்றனர். இத்துடன் பாடி நிறுத் தினார் அல்லர் கம்பர். மேலும்,

'நலர்கொள் மைந்தனைத் தழுவினன்
என்பதென் நளிநீர்
நிலம்கள் தாங்குறும் நிலையினை
நிலையிட நினைந்தான்
விலங்கல் அன்னதிண் தோளையும்
மெய்த்திரு இருக்கும்
அலங்கல் மார்பையும் தனதுதோள்
மார்புகொண் டளந்தான்'

என்று பாடியுள்ளனர். இப்பாடல் சேக்கிழார் கூறிய தொடர்கட்கு விளக்கம் என்பதில் ஐயம் உண்டா?

திருநீலகண்ட நாயனார் தம் மனைவியாரிடத்தில் 'எம்மை என்றதனால் மற்றை மாதரார் தம்மை என்றன் மனத்திலும் தீண்டேன்' என்று கூறியதாகத் தொண் டர்சீர் பரவுவார் சொற்றனர். இந்தக் கருத்தைக் கம்பர்,

'வந்தெ னக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிற விக்கிரு மாதரை
சிந்தை யாலும்தொ டேன்என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்'

என்ற பாட்டைப் பாடி அமைத்துள்ளனர்.

இயற்பகை நாயனுர் புராணத்துள் இறைவர் அடியாரிடம், 'மன்னு காதல் உன் மனைவியை வேண்டி வந்தது' என்று கூறியது வருத்தத்தை உண்டுபண்ணக் கூடியது. ஆனுல், நாயனுர் மிக மிக மகிழ்ந்தனர் என்பதைச் சேக்கிழார், 'எதிரே சொன்ன போதிலும், முன்னையின் மகிழ்ந்து' என்று பாடிக் காட்டியுள்ளனர். இதுபோலவே இராமாயணத்தில் கைகேயி இராமனிடம் 'இராமா! நீ காட்டிற்குச் செல்லவேண்டும்; பரதன் அரசு ஏற்கவேண்டும்' என்று கூறியபோது இராமன் கொண்ட மகிழ்ச்சியினைச் சேக்கிழார் கூறியதுபோன்று இன்னமும் விளக்கமுறக் கூறவேண்டும் என்னும் கருத்தில் 'இராமன் திருமுகச் செவ்வி நோக்கில் ஒப்பதே முன்பு பின்பு வாசகம் உணரக் கேட்ட, அப்பொழுது அலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா!' என்று பாடியதை அறியவும். இவ்வாறு பாடுதற்குக் கம்பர், திருஞானசம்பந்தர் புராணத்துள் வரும்,

'கேட்டஅப் பொழுதே சிந்தைக்
கிளர்ந்தெழு மகிழ்ச்சி பொங்க
நாட்பொழு தலர்ந்த செந்தா
மரைநகை முகத்தர் ஆகி'

என்ற அடிகளைக் கருத்தில் கொண்டு பாடினுர் என்று கூறினும் அமையும்.

இயற்பகையார் தமது மனைவியாரை வந்து கேட்ட அடியவர்க்கு ஈந்தும், அவர் அகலாது தமக்குச் சிறிது தூரம் துணையாக வருதல் வேண்டும் என்று கேட்ட போது, அது செய்யாது அதுவரை நின்றது பெருங் குற்றம் என்றுணர்ந்து பின் சென்றார் என்ற நிலையினைச் சேக்கிழார், 'நின்றது பிழையாம் என்று நினைந்து' என்று பாடியுள்ள 'நின்றது பிழையாம்' என்ற சொற்றொடரின் உட்செறி பொருளை நன்கு தெரிந்து. கம்பர், இதனை இலக்குவன் தாயின் வாய் வழி, அவள் இலக்குவனை நோக்கி, 'நீ உடனே இராமனுடன் செல்; இதுவரை இங்கு நின்றதும் தவறு' என்று கூறும் முகத்தால், 'ஏகாய்! இனி இவ்வயின் நிற்றலும் ஏதம் என்றாள்' என்று அறிவித்திருப்பதை அறிவோமாக.

இவ்வாறே, சேக்கிழார், 'வீழ்ந்தார்' என்ற சொல் லின் பொருளையும் விரைவினையும் திருஞானசம்பந்தர் திண்ணனார் திருவுருமுன் வீழ்ந்தபோது, 'மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்தார்' என்ற இடத்து அமைத் துப் பாடி இருப்பதை ,வீடணன் இராமனைக் கண்ட தும் வணங்கிய நிலையினைக் கூற வந்த கம்பர் சேக் கிழார் பயன் படுத்திய 'வீழ்ந்தார்' என்னும் சொல் லினை 'வரங்களின் வாரிஅன்ன தாள்இணை வந்து வீழ்ந்தான்'' என்று அமைத்துக் கொண்டனர்.

சேக்கிழார் அரியும் கரியும் ஒன்றை ஒன்று தழுவிப் போரிட்ட நிலை, பகலும் இரவும் இணைந்தார்போல் இருந்தது என்பதை, ''இரவொடு பகல் அணைவன என'' என்றனர். இரவு கரிக்கும், பகல் அரிக்கும் உவமை. இந்த உவமை அழகினைச் செந்நிறத்த சுக்ரீ வனும் கருநிறத்த விபீடணனும் தழுவியபோது

'இருவரும் ஓருநாள் உற்ற எல்லியும் பகலும் போலத் தழுவினர்' என்று அமைத்துப்பாடிக் களித்தனர் கம்பர்.

இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினூர் இனிஇப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானூர்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனிஆடிச்
செய்வண்ணத் திறம்மொழிவேன் தீவினையின்
திறம்ஒழிவேன்

என்பது சேக்கிழார் திருப்பாட்டு.

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்
இனிஇந்த உலகுக் கெல்லாம்
உய்வண்ணம் அன்றி மற்றோர்
துயர்வண்ணம் உறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கிப் போரின்
மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ணம் அங்குக் கண்டேன்
கால்வண்ணம் இங்குக் கண்டேன்

என்பது கம்பரது கவின் மிகு கவி.

சேக்கிழார் பெருமானூர் சில செய்திகளைத் தம் வாயால் சொல்லுதற்குக் கூசுவர். முத்த நாதன் என்பான் மெய்ப்பொருள் நாயனூரைத் தான் மறைத்து வைத்திருந்த கத்தியால் குத்தி விட்டனன். இதனைச் சேக்கிழார் 'தான் முன் நினைந்த அப்பரிசே செய்ய' என்றனர். ஏனூதிநாதநாயனூர் புராணத்துள் அதிசூரன் என்பான் நாயனூரைக் குத்திவிடுகிறான். இச்செயலையும் சேக்கிழார், 'முன்னின்ற பாதகனும் தன் கருத்தே

மூற்று வித்தான் என்றனர். சிறுத் தொண்டர் புரா ணத்துள் பெற்ருேர்கள் தம் திரு மகனை அறுத்த நிலை யினைக் குறிப்புடும்போது 'அரிய வினை செய்வார்' என்று பாடினர். இக்ஙனம் உளம் கூசி மறைமுகமாகக் கூறி யிருக்கும் அருமைப் பாட்டை அறிந்த கம்பர், இரா மனைக் காட்டிற்கு அனுப்புவது குறித்துத் தசரதன் தயங்கி அதனை வாயினுல் சொல்லவும் கூசினுன் என்ற கருத்தில் 'பெண்ணே கேகையன் மாதே பெறுவாயேல் மண்ணே கொள் மற்றைய தொன்றை மற என்ருன்' என்று பாடி யுள்ளனர்.

சிறுத்தொண்டரிடம் வந்த வைரவர் மிகவும் துன் புறுத்தற்குரிய வார்த்தைகளைச் சொல்ல நேர்ந்தபோது உவமை காட்ட வந்த சேக்கிழார், 'புண்செய் நோவில் வேலெறிந்தால் போலும் புகல்வது' எனறனர். கம் பரும் விசுவாமித்திரர் தசரதன் வருந்தும் முறையில் வாசகம் புகன்ற நிலைக்கு உவமையாக 'மருமத்தில் எறி வேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழையில் கனல் நுழைந்தால் என' என்று பாடி அமைத்துள்ளனர்.

சுந்தரர் உள்ளத்தில் பரவையாரும் பரவையார் மனத்தில் நம்பி ஆருரரும் அமைந்து இன்புற்ற நிலையி னைச் சேக்கிழார், 'ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர் ஒன்ருனுர்' என்றனர். இதனையேதான் கம்பர் சீதையுள்ளத்தில் இராமனும் இராமன் உள்ளத்தில் சீதையும் இருந்த அன்புநிலையினை 'வரிசிலை அண்ண லும் வாட்கண் நங்கையும் இருவரும் மாறிபுக்கு இதயம் எய்தினுர்' என்றனர்.

இவ்வாறு கம்பர் பெரிய புராணத்துள் திளைத்துத் திளைத்துப் பாடிய பாடல்களின் கருத்துக்கள் அவர்தம் இராமாயணத்தில் பல உள. ஈண்டு எடுத்து இயம்பப் பட்டவை சிலவே ஆகும். மேலும் அறிய அவாவுவார் இவ்விரு நூற்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும் கண் கொண்டு காண்கையில் ஒப்புமை அழகை அறிந்து சுவைத்து இன்புறலாம் என்பதில் ஐயம் உண்டோ?

---

# 4. கந்தபுராணமும் காவியச்சுவையும்

நம் செந்தமிழ் மொழியில் சிறந்து விளங்கும் புராண இலக்கியங்களில் ஒன்று கந்தபுராணமாகும். கந்தபுராணம் எவர்க்கும் சொந்தபுராணம் என்னும் தொடரே இது சைவசமயத்தவர்கட்கே அன்றிப் பிற சமயத்தவர்க்கும் உரிய நூல் என்பதை விளக்கும். கந்த புராணம் முருகப் பெருமானைக் கதாநாயகராகக் கொண்டு மிளிர்வதனால், அம்முருகன் என்னும் சொல் லின் பகுதியாகிய முருகு என்பது இளமை, மணம், அழகு, கடவுள் தன்மை என்று பொருள் தந்து நிற்றலி னால், இந்நான்கையும் விரும்பாத மொழியினரோ சம யத்தினரோ எவரேனும் இருக்க இயலுமோ என்று சிந்தித்துப் பாருங்கள். ஆகவே கந்தபுராணம் எவர்க் கும் சொந்த புராணமே என்பதில் ஐயம் எழக்காரணம் இல்லை. இந்த நூலைச் செய்தவர் கச்சியப்ப சிவாச் சாரியார் என்பவர்.

கந்தபுராணம் சிறந்த நீதிகளையும், இக்காலக் கருத்துக் கொண்டு காண்பதற்கேற்ற நவீனப் புதை பொருள்களையும் பெற்று விளங்குகிறது என்பது ஒரு முறை இந்நூலைப்படித்துப் பார்ப்பவர் காணுமல் இருக்க இயலாது.

மாதர்களின் இன்பமே பேர் இன்பம் என்று கருதி, அவர்களின் கண் மயக்கில் ஈடுபட்டு இன்பத்திற்கு ஈடாகத் துன்பமே துய்க்கின்றனர் மக்கள் என்பதை நன்கு விளங்கிக்கொள்ளத்தக்கதான உவமை கொண்டு உணர்த்துந் திறனை,

'துன்பம் நுகரும் வினையின் தொடர்ச்சியினோர்
இன்பம் நுகர்வார்போல் ஏந்திழையார் கண்பட்டார்
தன்பல் மிகநடுங்க ஞாளி தசையில்லா
என்பு கறித்திட்டால் இருஞ்சுவையும் பெற்றிடுமோ'

என்ற செய்யுளால் அறிந்து இன்புறலாம்.

பலநாள் வெயிலில் உலர்ந்து கிடந்த எலும்பை நாய் பெற்று அதைக் கடிக்குந்தோறும் தன் பல்லின் அசைவால் சுரக்கும் செந்நீரை, எலும்பினின்று வருகின்ற சுவைநீரெனக் கருதிச் சுவைப்பது போலத் தம் கண் உண்டாகும் இன்பம் மாதர்பால் வரும் இன்பமாக எண்ணித் தம் வன்மையை இழக்கும் மக்கள் அறியாமை என்னே என்று இரக்கம் கருதிப் பாடிய பாட்டாக அன்றோ இது விளங்குகிறது?

'உள்ளினும் சுட்டிடும் உணரும் கேள்வியில்
கொள்ளினும் சுட்டிடும் குறுகி மற்றதைத்
தள்ளினும் சுட்டிடும் தன்மை இதனால்
கள்ளினும் கொடியது காமத் தீயதே'

தந்தைசொல் மறுப்பவர்கள் தாயுரை தடுப்போர்
அந்தமுறு தேசிகர்தம் ஆணையை இகந்தோர்
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கள் மாறாச்
செந்தழல வாயநிர யத்தினிடை சேர்வர்'

என்னும் செய்யுட்களின் பொருளை உணர்ந்தவர் நல்வழியில் நடக்க ஏதுவாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இன்னோரன்ன நீதிப்பாடல்கள் நமது கந்தபுராணத்தில் கணக்கின்றி இருக்கின்றன.

ககோள பூகோள நுட்பங்களை உணர்த்தும் குறிப்புகள் பல கந்த புராணத்தில் உண்டு. உலகம் உருண்டை என்பதை நம்மவர்கள் நன்கு உணர்ந்திருந்

தனர். உலகிற்கு அண்டம் எனும் பெயரிருப்பதாலும் அதன் உண்மையை உணர்கிறோம். அண்டமோ முட்டை வடிவினது. பூகோளத்தைப் பற்றி அறிவிக்கும் ஆசிரியர்கள் நமக்கு, 'இங்கு நாம் சூரியவெளிச்சத்தோடு இன்புறுகையில் வேறு உலகினர் இருளில் துன்புறுவர்; அவ்வாறே அவர்கள் ஒளியுற்றபோது நாம் இருள் உற்று இருப்போம்; இந்த மாறுதல் உலகம் உருண்டையாக இருந்து தன்னைத்தானே சூரியனைச் சுற்றி வருவதால் ஏற்படுவதாகும். அப்படிச் சுற்றுகையில் சூரியன் ஒளிபடும் இடம் பகலாகவும், ஒளிபடா இடம் இருளாகவும் இருக்கும்' என்று கூறுவர். சூரபதுமனுடைய இளவலான தாரகாசுரனை முருகப் பெருமானது வேல் மாய்த்தது. இது நிகழ்ந்த நேரம் மாலைப்பொழுது. சூரியன் மறைந்து செல்லுகின்ற நேரம். இதனை ஆசிரியர் கூறும்போது, முன் கூறிய சிறந்த பூகோளக் கருத்தை விளக்கிச் செல்கின்றார். அதாவது, 'முருகன் தாரகனைக் கொன்ற செய்தியை இவ்வுலகில் உள்ளவர் உணர்வர்; அடுத்த உலகில் உள்ளவர்களும் இதனை அறிந்துகொள்ள நானே புறப்பட்டுச் சென்று சொல்லிவிடுறேன் என்பான் போல மறைந்தான்' என்பதாம். இக்கருத்தைக் குறிக்கும் பாட்டே,

'ஒப்பறு சூர்பின் னேனை ஒருவன்வேல் அட்ட தன்மை
இப்புற உலகில் உள்ளார் யாவரும் உணர்வர் இன்னே
அப்புற உலகில் உள்ளார் அறிந்திட யானே சென்று
வன் என்பான் போலச் செங்கதிர் மறைந்து
போனான்'

என்பது. சூரியன் மாலையில் மறைதலின் இவர் இவ்வாறு பாடினர்.

ஆகாய விமானத்தைப்பற்றிய செய்தி அனைத்தும் இப்புராணத்தில் உண்டு. இக்காலத்தில் இவ்வாகாய விமானம், செய்துவரும் தொண்டு பலவாகும். போர்க் காலங்களில் அழிவு வேலைக்குப் பயன் பட்டாலும் அமைதியான காலத்தில் ஆக்க வேலைக்கும் பயன்பட்டு வருகிறது. தபால்களைச் சுமந்து செல்கிறது. ஓர் ஊரில் இருந்து மற்றோர் ஊருக்கு மக்களை வெகு விரைவில் தாங்கிச் சென்று சேர்க்கிறது. மற்றும் பலவற்றிற்கும் பயன் படுகிறது.

வானவூர்திகள் இப்படிச் சென்றுவரும் வழியினை ஆங்கிலத்தில் Air Route என்று கூறிப் பெருமையாகப் பேசிக்கொள்கின்றனர். இந்த ஆகாய வழி நமக்குப் பழைய வழியேயாகும். நம்மவரும் இத்தகைய வானவூர்திகளில் சென்றனர். நாம் எடுத்துப்பேசுவது கந்த புராணம் ஆதலின், இதனின்றே இதற்குரிய சான்றினைக் காட்டுவோமாக. திருமால், பிரமன் இந்திரன் முதலான தேவர்கள் தன்னைச்சூழ வீரவேல் தடக்கை அண்ணல் ஆகாய விமானத்தில் ஏறி, வானவழியே சென்றனன். இதனைக் கச்சியப்பர் எடுத்து இயம்புவதைக்காணும்போது நாமும் இந்த நாகரிகத்தில் வாழ்ந்தவர் என்பதை எண்ணி இறுமாப்பு அடைவோமல்லவா?

மண்படு புவனம் போற்றும் மன்னகேள் புயங்க மீது
கண்படு முகுந்தன் வேதாக் கடவுளர் தலைவ னோடு
எண்படு துணைவர் ஆனோர் யாவரும் புடையில் சூழ
விண்படு நெறியில் சென்றான் வீரவேல் தடக்கை
அண்ணல்.

'விண்படு நெறி' என்பது Air Route என்பதைத் தவிர்த்து வேறு யாதாக இருக்க முடியும்?

இக்கால நிகழ்ச்சிகளுக்கேற்ற கருத்துப்படி காணத்தக்க பாடல்களும் கந்த புராணத்தில் உண்டு. நம்மைக் கடந்த பல ஆண்டுகளாக வன்மையாய் அடிமைப்படுத்தி ஆண்டவர் ஆங்கிலேயர் என்பதை நாம் மறுக்கவோ மறக்கவோ இயலாது. அப்படிப்பட்டவர் இப்போது தம் ஆட்சியை நம்மிடம் ஒப்படைத்துச் சென்றது சரித்திர உண்மையாகிவிட்டது. அவர்களிடமிருந்து ஆட்சியைப் பெற்றபோது நாம் வன்மையில் அவர்களை நோக்க மிக மிகக் குறைந்தவர்கள். இதுபோது நாம் வன்மை பெற்று விளங்குகின்றோம். இதுகுறித்து யாரும் வியக்கவேண்டா. இதனை நாம் உணர அன்றோ, ஆசிரியர் தாம் கூறும் கதையின் நிகழ்ச்சியோடு,

கலகல மிழற்றும் தண்டைக்
கழலடிச் சிறுவன் கைம்மாத்
தலையுடை இளவல் தன்னைத்
தடிந்ததற் புதத்த தன்றால்
வலியரும் ஒருகா லத்தில்
வன்மையை இழப்ப ஆன்ற
மெலியரும் ஒருகா லத்தில்
வீரராய்த் திகழ்வர் அன்றே

என்று கூறுகிறார்.

அண்மையில் வரப்போகும் தேர்தல் காலங்களில் போட்டி இடுபவர்கள் தேர்தலில் கலந்துகொண்டு வெற்றி காணப் பெரிதும் முயல்வர் என்பதையும் நாம் அறிவோம். சில புதுப்புதுக் கட்சிகளும் அதுபோது முளைக்கும். இவற்றின் நோக்கம், முன்பு நீதிக்கட்சி ஆட்சியில் இருந்தது. இப்பொழுது காங்கிரஸ் கட்சி ஆட்சி பெற்றிருக்கிறது. இவ்வாட்சியினை நாமும் ஏன்

கைக்கொள்ளக்கூடாது என்பதாகும். இப்படிக் கருதும் கட்சியினர்க்கு ஆதரவு அளிப்பதுபோல் மாலை நேரம் வந்துற்றதைப் பாடும்போது நம் கந்த புராணம்,

பானுஎன் றுரைக்கும் மேலோன்
பகற்பொழு தெலாம்கைக் கொண்டான்
ஏனைய மதியப் புத்தேள்
இரவினுக் கரச னானான்
யானிவற் றிடையே சென்று
நண்ணுவன் என்று செந்தீ
வானவன் போந்த தென்ன
வந்தது மாலைச் செக்கர்

என்று பாடிக் காட்டுகிறது. மாலைக்கால வருகைக்கு இத்தகைய கற்பனை கூறப்பட்டது. இது படித்து இன்புறத்தக்க செய்யுள் அன்றோ?

ஆங்கிலேயர் தம் அன்புக்குரிய மாதரைக் கையால் அணைத்துக் கொண்டு வீதிவழியும், சோலையிடத்தும் செல்வது நாம் காண்கின்ற காட்சியாகும். இச்செயல் இவ்வினத்தார்க்கே உரியசெயல் என்று எண்ணுகிறவர் பலர். இஃது இவர்கட்கு மட்டும் உரிய செயல் அன்று. நம்மவர் துய்த்துச் சிந்திய செயலேயாகும். நம்மவர்களைப்போல ஐம்புலன்களும் ஆரத் துய்க்கின்றவர்களும், அவற்றை அறவே அடக்கி ஒடுக்கி இறை அருள் பெறுகின்றவர்களும், வேறு எவ்வினத்திலும் எந்நாட்டிலும் காண முடியாது. நமது நாட்டுக் காதலரும் ஒருவரை ஒருவர் இணை பிரியாது இயைந்து கையால் அணைத்துச் சென்றதைக் கந்த புராணச் செய்யுள் கொண்டு தெளியலாம்.

ஏமரும் கலாப மஞ்ஞை
இனமெனச் செல்லும் மாதர்
மாமருங் கிறுங்கொல் இற்ருல்
மதன்அர சிழக்கும் என்னுக்
காமரு கவற்சி கொள்ளக்
காத்திறல் அவரைப் பற்றித்
தாமருங் காகப் போனர்
தார்முடி இளைய ராஞேர்,

என்பது அப்பாட்டு.

இந்நூல் கருத்துக்களைக் கம்பராமாயணத்திலும் நள வெண்பாவிலும் காணலாம்.

கந்த புராணத்தில், இரு தம்பதிகள் குளத்தில் நீராடச் சென்றனர். அப்படிச் சென்று நீராடுகையில் தலைமகன் நீரை வாயில் பெய்து கொப்பளித்து நீரில் உமிழ, அதுகண்டு தலைமகள் தன்னை அக்குளத்தில் வளர்ந்திருந்த தாமரை மலர்கட்கிடையே முகத்தை மட்டும் காட்டி மறைத்துக்கொண்டிருந்தனள். அத்தலைவன் தன் மனைவியின் முகத்தையும் தாமரை மலர் என்று எண்ணியதால், அவள் தன் எதிரில் தன் முகத்தைக் காட்டி இருந்தபோதும் காணுது அயர்ந்தான். இந்த நிகழ்ச்சிகளை அழகுபடச் சித்திரித்துக் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள்,

'குளத்திடைப் புனல்வாய்ப் பெய்து கொப்பளித் திடுவான் [தன்மேல்
உளத்திடை வெகுளி எய்தி ஊடினள் ஒருத்தி ஏகி
முளைத்திடும் கமலக் கானில் முகமலா உறுப்பு முற்றும்
ஒளித்தனள் நிற்ப நாடிக் காண்கலன் உலைதல் உற்றுன்'

என்று பாடியுள்ளார்.

இக்கருத்தைப் புகழேந்திப்புலவர் நளவெண்பாவி லும் காணலாம். அங்கும் காதலர்கள் நீராடப்போயினர். இருவரும் நீராடுகையில் ஒரு பந்தயம் போட ஆரம்பித் தனர். 'யார் நீண்டநேரம் நீருக்குள்ளே இருக்கின்ற னரோ, அவர் தாம் வென்றவர்என்றும்,விரைவில் எழுந்து கொள்பவர் தோற்றவர்' என்றும் முடிவுகட்டிக்கொண்டு மூழ்கினர். தலைவி மூழ்கிய சிறிது நேரத்திற்கெல்லாம் தலையைத் தூக்கித் தாமரை மலர்கட்கு இடையே நீரில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். காதலனோ தான் தன் காதலிக்குத் தோல்வியுறுதல் கூடாது என்பதற் காக நீண்டநேரம் நீரில் மூழ்கிக்கிடந்தான். அவனாலும் முடியாமல் தலையை மேலே தூக்கிவிட்டான். அப்படித் தூக்கியவன் தன் காதலி தாமரை மலர்கட்கு இடையே தலையை மட்டும் காட்டி இருந்ததால், அதுவும் தாமரை மலர் என்று கருதி, 'இன்னமும் அவள் நீரினுள்தான் இருக்கின்றாள் போலும்' என்று அவளைக் காணாமல் அயர்ந்தான். இக்காட்சியைத்தான் புகழேந்தியார்,

'பொன்னுடைய வாசப் பொகுட்டு மலர்அலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய
பூணாள் திருமுகத்தைப் புண்டரிகம் என்றயிர்த்துக்
காணா தயர்வானைக் காண்'

என்று பாடினார்.

கம்பர் தம் நூலில் சரயுநதி பலவாகப் பரந்து கடலில் கலந்தது என்பதை,

கல்விடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலும்
இயம்பரும் பொருளீ தென்னத்

தொல்லையில் ஒன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயம் சொல்லும்
பொருளும்போல் பரந்த தன்றே'

என்று பாடினுர்.

இந்தக் கருத்துப்போன்றே கந்தபுராணத்திலும்,

'யாதொரு பொருளை யாவர்
இறைஞ்சினும் அதுபோய் முக்கண்
நாதனை அடையும் அம்மா
ஆங்கது போலத் தொல்லை
வேதம துரைக்க நின்ற
வியன்புகழ் அனைத்தும் மேலாம்
நாதனை அணுகும் எல்லா
நதிகளும் கடல்சென் றன்ன'

என்று காணப்படுகிறது.

கம்பரது பாடலும், கந்த புராணச் செய்யுளும் கருத்து ஒற்றுமையில் கலந்து செல்வதற்கு மற்றும் ஓர் எடுத்துக்காட்டினைக் காண்போமாக.

இளஞ் சிறுவர்கள் குதிரை பூட்டிய தேரினை ஊர்ந்து சென்றனர். அத்தேரின் உருளைகள் பொன்னுல் இயன்றவை. அவ்வுருளைகள் நிலத்தில் பதிந்து உருண்ட போது அவ்வுருளையின் பொன்னை மணித்தலம் சிறிது சிறிது கவர்ந்துகொண்டது. இதன் மூலம் ஆசிரியர் சிறந்த கருத்தை விளக்குகிறுர். பொருள் எவரும் விரும்பும் தன்மையது. இதனை, முனிவரும் விரும்புவர் என்பது அக்கருத்து. இக்கருத்தடங்கிய அப்பாடல்,

'குருளை மான்பிணித் திளஞ்சிறுர்
ஊர்ந்திடும் கொடித்தேர்
உருளை ஒண்பொனை மணித்தலம்
கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென்
முனிவரும் விழைவார்
பொருளின் ஆசையை நீங்கினர்
யாவரே புவியில்?'

என்பது. இதேபோன்று கம்பர் வேறுமுறையில் மற்ருெரு கருத்தை விளக்கவேண்டி,

'தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுருள் உரைத்துரைத்து
இருண்ட கல்லையும் தன்னிற மாக்கிய இரதம்'

என்று பாடினர். இதனுல் பெரும்புலவர்களின் கவிகளில் ஒன்றுபட்ட கருத்துகள் துலங்கும் என்பது புலனுகின்றதன்ருே?

பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்த புராணம் போன்ற புராணங்களைப் புராணக் கண் கொண்டு பார்ப்பதிலும், காவியக் கண்கொண்டு காண்பது ஒரு தனிச் சிறப்பும், ஒரு தனிச்சுவையும் ஆகும். புராணமாகப் பார்க்கும்போது பக்திச்சுவையும், அன்புச் சுவையும்தாம் நம் கண்முன் வந்து காட்சி அளிக்கும். ஆனுல், அவற்றைக் காவியமாகக் காணும்போது இன்பச்சுவையும், இலக்கியச்சுவையும் இனிது தோன்றி நிற்கும். தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமானுக்கும் தம் நூல் புராணமாக இருப்பதோடல்லாமல் காவியமாகவும் திகழவேண்டும் என்பதற்கேற்பத் தம்

போக்கையும் சிறிது மாற்றிக்கொண்டதைப் பெரிய புராண அமைப்பினின்றே நாம் நன்கு உணரலாம். இதன் விளக்கத்தை முன் கட்டுரையில் காண்க.

இதனால் அவரும் காவியச்சுவையை நளிவிரும்பினர் என்பது புலனாகிறது. ஆதலின், கந்த புராணத்தையும் காவியமாக நாம் கருதி அதன் கவிச்சுவையைத் துய்க்க வேண்டும். காவிய இலக்கணத்தைத் தண்டியலங் காரம் நன்கு எடுத்து இயம்புகிறது. அவ்விலக்கண அமைப்பு முற்றும் நம் கந்தபுராணத்தில் பொருந்தி இருக்கிறது. அவற்றுள் சிற்சிலவற்றை மட்டும் காண்போமாக.

கந்தப்பெருமானே கந்த புராணத்திற்குத் தன்நிகர் இல்லாத் தலைவன் என்பது.

மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி
அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின்
வீற்றிருந் தருளி னானே'

என்னும் பாட்டாலும்,

மாயையின் வலியோன் ஆகி
மால்முத லோரை வென்றே
ஆயிரத் தோர்எட் டண்டம்
அரசுசெய் துகம்நூற் றெட்டுக்
காயம தழிவின் றாகிக்
கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற
குமரன்தாள் சென்னி வைப்பாம்'

என்னும் பாட்டாலும் தெள்ளத்தெளிய விளங்கும்.

நாற்பொருள் பயக்கும் நடைநெறித்தாகி என்ற இலக்கணம் கந்த புராணத்தில் அமைந்திருப்பதை,

இந்திரர் ஆகிப் பார்மேல்
இன்பமுற் றினிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச்
சிவகதி அதனில் சேர்வர்
அந்தமில் அவுணர் தங்கள்
அடல்கெட முனிந்த செவ்வேள்
கந்தவேள் புராணம் தன்னைக்
காதலித் தோதுவோரே.

என்ற புராணப் பயன் உணர்த்தும் பாடலால் உணரலாம்.

இனிக் காவியச் சுவைக்குரிய கவிகளைக் காண விழைவாரைப் பூக்கொய் இடத்தும் புனல் விளையாட்டிடத்தும் சென்று காண விட்டுவிடுகின்றனர் ஆசிரியர். ஆகவே, ஆண்டுச் சென்றே அச்சுவையை நுகர்வோமாக.

காதலர் இருவர் பொழிலில் சென்று காற்றின்பம், காட்சி இன்பம் நுகரப் புறப்பட்டனர். உள்ளே நுழைந்ததும் இருவரும் சிறிது தணந்தனர். காதலன் புன்னுக மரத்தையும் வேங்கை விருட்சத்தையும் கண்ணுற்றான். அந்த இரு தருக்களின் தண்ணிய மலர்கள் அவனது உள்ளத்தைக் கவர்ந்தமையால் அவற்றுள் சிலவற்றைப் பறித்துக்கொண்டு ஓடோடியும் வந்து தன் அருமைக் காதலியை நோக்கிப் 'பெண்களுக்குள் பேரரசியாகத் திகழும் என் உயிர் ஓவியமே! இதோ பார்! வேங்கைப் பூவும், புன்னுகப் பூவும் கொணர்ந்

தனன். இவற்றை உன் கூந்தலில் சூட்டிக்கொள்க' என்றான். இவ்வளவுதான் அவன் கூறிய மொழிகள். அவன் கூறியபோது ஒரு பளிங்கு மேடையில் அமர்ந் திருந்தவள் ஞரேல் என எழுந்தாள். தன் கணவனைக் கண்களால் சுட்டுக்கொல்வாள்போல் உறுத்துப் பார்த்து, 'என்ன கூறினீர் ? நான் பெண்களுக்கெல்லாம் பேர் அரசியா ? அப்படியானால், உமக்கு என்போல் காதலுக்குரிய மாதர் எத்தனைபேர் உளர் ? தெரிந்தது உம் கள்ளத்தனம்' என்று சீறிச் சென்றாள். இவ் வோவியத்தைக் கந்த புராண ஆசிரியர்,

'மின்னார் தமக்கோர் அரசே வெறிவேங் கைவீயும்
புன்னாக வீயும் கொணர்ந்தேன் புனைகிற்றி என்ன
மன்னா உனக்குப் பலருண்டுகொல் மாதர் என்னாத்
தன்னாவி யன்னான் தனைச்சீறி யொர்தையல் போனாள்'

என்று தீட்டியுள்ளார்,

'யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று'

என்ற வாய்மொழியை இப்பாட்டு எண்ணுதற்கு இடங்கொடுக்கிறது அன்றோ ?

சில காதலர் நீரில் குளித்து விளையாடுகின்றனர். அங்கு நிகழும் நிகழ்ச்சிகளைக்கூறும் கவிகள் கழிபெருஞ் சுவையைக் காட்டவல்லனவாய் விளங்குகின்றன.

ஆணும் பெண்ணுமாகிய இரு தம்பதிகள் நீண்ட நேரம் நீரில் கிடந்து நீராடினர். அதனால் இதழ் வெளுத்துக் காட்டியது. இவ்வெளுப்பு நீராடியதால் வந்தது என்பதை அறியாத நங்கை, தன் நாயகன்மீது குற்றம் காட்டிக் கோபித்துக்கொள்வாள்போல், 'நாயக ! நான் உன்னோடு கூடவே இருக்கிறேன். நீயும் என்னைத்

தணந்து சென்றிலே. இந்த நிலையில் உனக்கு இன்பம் தந்து இதழை வெளுப்பாக்கியவள் யாவள்? என்னை யறியாது இப்படி நீ நடந்துகொண்டது முறையா?' என்று சீறிக் கரையேறிவிட்டனளாம்.

உட்டெளி வில்லா நங்கை
ஒலிபுனல் தடத்தில் ஆடும்
கட்டழ குளதோர் காளை
கவர்இதழ் வெளுப்பு நோக்கிக்
கிட்டியான் நிற்க உன்தன்
கேழ்கிளர் அதரத் தெச்சில்
இட்டனள் யார்இங் கென்று
வெகுளிகொண் டிகலிப் போனாள்

என்னும் பாடலைக் காண்க.

அத்தடத்தில் வேறொருசாராரால் மற்றொரு நாடகம் நடத்தப்பட்டது. இரு காதலர் கையினால் ஒருவரை ஒருவர் பிணித்துக்கொண்டு நீரில் திளைத்து இன்புற்றிருந்தனர். திடுமெனக் காதலி தன் நிழல், அத்தடத்தில் தோன்றக் கண்டாள். அதனைத் தன் நிழல் என்று தெரிந்திலள். அதனைத் தன்னைப்போன்ற மற்றொருத்தியின் உருவென்று கருதி, அவள் தன்னை மறைத்துக்கொள்ள நீரில் மூழ்கியிருப்பதாகவும் எண்ணிக் கொண்டு, தன் கணவனைப் பார்த்து, 'ஆ! ஆ! என்னை அறியாது இவளொடு நீ கூடி மகிழ்ந்தனையோ?' என்று சீறிப் பிணித்த கையையும் உதறிவிட்டுக் கரைக்கு வந்துற்றாள். இவள் நடிப்பை ஆசிரியர் கச்சியப்பர்,

தத்தையை அனைய சொல்லாள்
ஒருத்திதன் நிழல் தன்னை
அத்தடந் தன்னில் நோக்கி
அளியனை அறியா திண்டோர்

மமத்தடங் கண்ணி ளுனே
　　மருவினே என்று கேள்வன்
கைத்தலம் தன்னே விட்டு
　　வெருண்டனள் கரையில் போனுள்

என்று சுட்டிக் காட்டினர்.

குடித்து மயங்கிய ஒருத்தியின் செயலேயும் சுவை படப்பாடினுர் புலவர் பெருமான். அதிலிருந்து கட்குடியால் மதிமயங்கிப்போகும் நிலையையும் நன்கு உணர்த்தியும்காட்டினர். ஒருத்தி நன்கு குடித்துவிட்டாள். குடிமயக்கால் தன் அறிவு மயங்கினுள். தன் நிழலேப் பார்த்தாள். தந்நிழல் தன்னேடு வரும் என்னும் பழமொழியும் மறந்தாள். அந்நிழலேப் பார்த்து அது தன்னேப்போன்ற வேறு ஒருத்தியின் உரு என்று கருதி 'என்னேடு பிறந்தாய்; என்னேவிட்டு நீங்காது என் பின் வந்துகொண்டிருக்கிருய். நான் இம்மதுவை அருந்து என்றுலும் அருந்தாமல் நிற்கிருய். இது முறையன்று; யான் உன்னே இவ்வளவு கெஞ்சிக்கேட்கினும் பேசாமல் இருக்கிருய்' என்று தன் நிழலே நோக்கிக் கடிந்து வெறுத்துப் பேசித் தளர்ந்தனளாம்.

என்னெடே தோன்றினுய் யான்எனும்
　　தன்மையால் யாதும் வேண்டாய்
பின்னரும் முன்னுமாய் வைகலும்
　　திரிகுவாய் பிரிகி லாதாய்
இன்னரு உண்கெனு உதவினும்
　　கொள்கிலாய் என்றெருத்தி
தன்னதாம் நிழலோ டுடினுள்
　　வாடினுள் தளர்தல் உற்றுள்.

என்பது கந்த புராணப் பாடல்.

இங்ஙனம் தன் நிழலை வேறு ஒன்றன் உரு என்று கருதி அதனுடன் மாறுபாடுடன் பேசிய காட்சியை மணிமேகலையிலும் காணலாம். அது,

தொழூஉம் எழூஉம் சுழலலும் சுழலும்
ஓடலும் ஓடும் ஒருசிறை ஒதுங்கி
நீடலும் நீடும் நிழலொடு மறலும்''

என்பது.

பெண்கள் நடைக்கு யானை நடை உவமை. இத்தகைய சிறப்புக்குரிய யானையும் மாதர்களின் நடைக்குத் தோற்கின்றதாம். அத்தோல்வியை ஏற்றுக்கொள்வதற்காக அவர்களைச் சுமந்தும் செல்கிறதாம். இந்தச் சுவையினையே கந்த புராணம்,

கூற்றினை வென்றிடும் கொலைக்க ணார்சிலர்
ஏற்றமில் பிடிமிசை ஏறிப் போந்தனர்
ஆற்றல தின்மையால் அவர்ந டைக்குமுன்
தோற்றவர் நாணியே சுமத்தல் போன்றவே

என்று பாடிக் காட்டுகின்றது. இப்பாட்டைப் படிக்கும்போது சிரிப்பதில்லை என நோன்பு கொண்டவரும் சிரிக்காமல் இருக்க முடியாது.

இவ்வாறு பல்வேறான காவியச் சுவைகள் கந்த புராணத்தில் உள்ளன. அவற்றினைப் படித்துச் சுவைத்து இன்புறுவீர்களாக.

# 5. மூவர் பாடலும் இசைக் குறிப்பும்

நந்தம் செந்தமிழ் மொழி முத்தமிழ் என்று மொழியப் பட்டு வருவதை யாவரும் அறிவர். முத்தமிழ் என்ற தொடர் சிலப்பதிகாரத்துள்ளும் அதன் உரையிலும் நன்கு எடுத்து உணர்த்தப்பட்டுள்ளது. 'குடக்கோ முனிசேரன் தண்டா உரை முத்தமிழ்' என்றும், 'முத்தமிழ்க் கல்வியும்' என்றும், 'பழுதற்ற முத்தமிழின் பாடல்' என்றும், 'ஒரும் தமிழ் ஒரு மூன்றும்' என்றும், 'தமிழ் மூன்று உரை செய்வித்ததே' என்றும் குறிக்கப் பட்டுள்ளனவற்றைக் காணலாம். முத்தமிழ் ஆவன இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்பன. இம்மூன்றனுள் இசைத்தமிழ் பற்றிச் சிறிது கூறுவோமாக.

இசைத் தமிழ் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தும் காணப்படுகின்றன.

'அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளஎன மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்"

என்றும், 'பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே' என்றும் வருவனவற்றைக் காண்க.

இசைத் தமிழ் பற்றிய இலக்கணங்கள் பல நந்தம் தமிழ் மொழியில் இருந்துள்ளன. பெருநாரை, பெருங் குருகு, இசை நுணுக்கம், தாளவகை ஒத்து, இசைத் தமிழ்ச் செய்யுட்டுறைக்கோவை, சச்சபுட வெண்பா, பதினறு படலம் என்பனவற்றை எடுத்துக்காட்டாக

இயம்பலாம். இதுபோது இசைத்தமிழ் இலக்கியங்களாக உள்ளவை மூவர் பாடல்கள், திருவாசகம், திருவிசைப்பா, நாலாயிரப்பிரபந்தம், திருப்புகழ் முதலியன. குறவஞ்சி, பள்ளு, சிந்து இவற்றிலும் இசைப் பகுதிகள் உண்டு. இசைத் தமிழின் பெருமையினை அளவிட்டுச் சொல்ல முடியாது. இசை உயர்திணை மக்களையும் அஃறிணை உயிர்களையும் தன் வயம் ஈர்க்கவல்லது. இவ்வுண்மையினை 'அணி இழை மகளிரும் யானையும் வணங்கும் மணி ஒலி வீணையும்' என்று பெருங் கதையிலும், 'ஒலியல் வார்மயிர் உளரினள் கொடிச்சி, பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக் குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது படாஅப் பைங்கண் பாடுபெற்றுஒய்என மறம்புகல் மழகளிறு உறங்கும்' என்று அகநானூற்றிலும், 'வேழத்து வெந்தொழில் அவியக் கருணை வீணை காமுற' என்று ஞானமிர்த்தத்திலும், 'கடுங்களிற்று ஒருத்தல் யாழ் வரைத்தங்கி' எனக் கலித்தொகையிலும் 'இன் அளிக்குரல் கேட்ட அசுணமா' எனச் சிந்தா மணியிலும் வருதல் கொண்டு தெளியலாம்.

இன்னின்ன காலத்துக்கு இன்னின்ன இசை பாடுதற்குரியது என்ற முறையும் நந்தம் செந்தமிழில் உள்ளது. காலைக்கு மருதப்பண்ணும், மாலைக்குச் செவ்வழிப் பண்ணும் உரியன எனபது 'யாழோர் மருதம் பண்ண' 'திவவு மெய்ந்நிறுத்துச் செவ்வழி பண்ணி' என்று காலை மாலைப் பொழுதை வர்ணிக்கும் போது இவ்வாறு குறிப்பிட்டு இருப்பதை மதுரைக் காஞ்சியில் உணரலாம்.

இதுவரை இசையைப்பற்றிய குறிப்புகளைப் பழம் பெரும் நூல்களின் வழி ஒருவாறு உணர்ந்தோம். இனி எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ப மூவர்தம் பாடல்

களில் காணக்கூடிய இசைச் சிறப்புக்குரிய இயல்பு களைச் சிறிது சிந்திப்போமாக. திருஞானசம்பந்தர் தாம்பாடிய பாடல்களைக் குறிப்பிடும்போது, ' இயல்வல இசைமலி தமிழ்' என்றும், 'பண்ணேடு இசை பாடிய பத்து' என்றும, 'இசையொடு கூடிய பத்து' என்றும், 'பண்பொலி செந்தமிழ் மாலை' என்றும், 'பண்மதியால் சொன்ன மாலை' என்றும் குறித்துள்ளார். சுந்தர மூர்த்தி சுவாமிகளும் திருஞானசம்பந்தர் பாடல் இசை யுடன் பாடப்பட்டது என்பதை, 'நாளும் இன்னிசை யால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தனுக்கு உலகவர் முன் தாளம் ஈந்து' என்று குறிப்பிட்டுள்ளார். தமது பாடலைச் 'சுந்தமிகு தண் தமிழ் மாலைகள் பாடுமின் தொண்டீர்', 'பண்பயிலும் பத்தும்', 'வாய்மொழி பாடல் பத்து உன்னி இன்னிசை பாடுவார்', 'ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும்', 'பண்ணும் இசைக் கிளவி பத்து' என்று சம்பந்தர் போலக் குறிப்பிட் டிருப்பதைக் கண்டுணரவும். இதனல் இவ்விருவர் பாடல்கள் 'இசைப்பாட்டு' என்பதில் எள்ளளவும் ஐயம் இன்றிப் புலனுகின்றது அன்ருே? அப்பர் பாட்டும் இசைப்பாட்டே. அப்பர் தம் பாடல்கள் இசையுடன் கூடியவை எனக் கூறிலர் என்ருலும், அவர் பாடல்களும் இசையுடன் அன்றும் இன்றும் பாடப் பட்டு வருதலைக் காணலாம்.

இனி அடுத்தாற்போல் தேவாரம் என்பதைப்பற் றிச் சிறிது அறிதல் இன்றி அமையாதது. இக்காலத் தில் தேவாரம் என்றவுடன் மூவர் முதலிகளான அப்பர், சுந்தரர், சம்பந்தர் பாடிய பாடல்கள்தாம் என்ற எண் ணம்,வேரூன்றி உளது. ஏன்? சில நூற்ருண்டுகட்கு முன்னும் இக்கருத்தே நிலவியிருந்தது. மூவர் முதலிகள்

பாடிய பாடல்கள் பண்டைக் காலத்தில் வெவ்வேறு தனிப் பெயரால் வழங்கப்பட்டுள்ளன. பட்டினத்தடிகள், 'வித்தகப் பாடல் முத்திறத்து அடியவர்' என்றும், 'மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந் தமிழ்' என்றும் மூவர் பாடல்களைப் பொதுமையில் கூறினர். நம்பியாண்டார் நம்பிகள் திருநாவுக்கரசர் பாடல்களை 'உழவாரப் படைக் கையில் உடையார் வைத்த தமிழ்' என்றும், அருந்தமிழ்' என்றும், சுந்தரரது பாடலை, 'செந்தமிழ் பாடி' என்றும் குறிப்பிட்டுள்ளார். சம்பந்தரது பாடலைக் குறிப்பிடும்போது, 'சண்பைநாதன் அமுதப் பதிகம்' என்றும், 'சிரபுரத்தான் இருந்தமிழே' என்றும், 'பாடிய செந்தமிழ்' என்றும், 'விடந் தீர்த்த தமிழ்' என்றும், 'பதிகம் பல பாடி' என்றும், 'சம்பந்தன் தன்மாலை ஞானத் தமிழ்' என்றும், திருப்பதிகம் பாடவல்ல சேய்' என்றும் குறித்துக் காட்டினர். ஞானசம்பந்தர் பதினுயிரம் பாடல்களைப் பாடியவர் என்று சுட்டும்போதும், 'பன்னு தமிழ் பதினுயிர நற்பனுவல்' என்றுதான் பாடியுள்ளார். திருநாவுக்கரசர் பாடல்களின் தொகையினைக் கூறும் போதும், 'பதிகம் ஏழ் எழுநூறு பகரும் மா கவியோகி' என்றே உரைத்துள்ளார். இதனுல் நம்பியாண்டார் காலத்தில் மூவர் பாடல்கள் தேவாரம் என்று குறிப்பிடப்படவில்லை என்பதை உணர்கிறோம்.

நம்பியாண்டார்க்குப் பின் வந்த சேக்கிழாரேனும் குறிப்பிட்டுள்ளனரோ என்பதையும் ஆராய்ந்து அறிவோமாக. சேக்கிழார் 'திருநாவுக்கரசர்தம் பாடல்களைப் 'பாவுற்றலர் செந்தமிழின் சொல்மலிப் பதிகத் தொடை' என்றும், 'தண்டமிழ் மாலைகள் சாத்தினர்'

என்றும் பாடியுள்ளார். அப்பரது பாடலை மேலும் குறிப்பிடுகையில், 'செழுந் திருத்தாண்டகம் பாடி' எனவும், 'திருவிருத்தம் நலம் சிறக்கப் பாடுதலும்' எனவும், 'திருக்குறுந்தொகைகள் பாடி' எனவும் பாடியுள்ளனரேயன்றித் தேவாரம் என்ற சொல்லால் கூறிற்றிலர். அப்பர் பாடிய பாடல்களைத் தொகுதியாகக் கூறும்போதும், 'அளவில் திருத்தாண்டக முன் அருளிச் செய்து, ஓங்கு திருக்குறுந்தொகைகள், களம்கொள் திருநேரிசைகள் பல பாடி' என்றுதான் குறிப்பிட்டுள்ளார்.

திருஞானசம்பந்தரது பாடலைப்பற்றிப் பகரும் போதும் குன்றை ஆளியார் 'மெய்ம்மை மொழித் திருப் பதிகம்' எனவும், 'வண்தமிழ் மாலை' எனவும் குறிப்பிட்டுள்ளார். ஆனால், சில பதிகங்களை அப்பதிகம் தொடங்கு சொல்லால் அறிவித்துள்ளார். 'வானவர் கள் தானவர்' என்றெடுத்து, 'உற்றுமை சேர்வது எனும் திருவியமகம்' என்றும், 'நீலமா மிடற் றால வாயான் என நிலவும் மூலமாகிய திருவிருக்குறள் மொழிந்து' என்றும் குறிப்பிட்டுள்ளார். 'இடரினும்' என்று தொடங்கும் பதிகத்தை 'நால் அடியின்மேல் இருசீர் தொடுத்த வைப்பு' எனக் குறித்துள்ளார். ஈண்டும் தேவாரம் என்ற சொல் காணப்பட்டிலது.

சுந்தரர் தம் பாடலைத் தொண்டர்சீர் பரவுவார் 'பெரிதாம் திருப்பதிகம்' எனவும், 'தமிழ் மாலை' எனவும் குறித்துள்ளனர்.

சேக்கிழார் பெருமானார் மூவர் பாடல்களைப் பெரிதாம் திருப்பதிகம் என்றே மொழிந்து போதலை ஊன்றி உணர்தல் வேண்டும்.

திருமுறை கண்ட புராணத்துள்ளும் நம் மூவர் முதலிகளின் பாடல்கள் 'மெய்ப் புகழ்சேர் மூவர் தமிழ்' எனவும், 'வண் தமிழ்கள்' எனவும், 'மூவர் பாடல்' எனவும், 'பதிகங்கள்' எனவும்தான் குறிப்பிடப்பட்டுள்ளன. திருத்தொண்டர் புராண சாரத்திலும் 'ஓது திருப்பதிகத்தால்' என்றே உளது.

இங்ஙனம் இருக்க, நம் மூவர் முதலிகளின் பாடல்களுக்குத் 'தேவாரம்' என்ற பெயரைச் சூட்டியவர் யாவர் என்பதையும் ஈண்டு நோக்குவோமாக. மூவர் பாடலுக்கும் 'தேவாரம்' என்ற பெயரை முதன்முதல் சூட்டிய பெருமக்கள் தத்துவப் பிரகாசர், சைவ எல்லப்ப நாவலர் ஆவார். முன்னவர் 'பேசுவது தேவாரமே எனவும், பின்னவர் 'செம்பொருள் வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும்' எனவும் பாடியுள்ளனர். ஈண்டுத் தேவாரம் என்றது மூவர் பாடல்களையுமேயாகும். ஒரு சிலர், இரட்டையர்கள் பாடிய 'ஏகாம்பரநாதர் உலா' வில் வரும் 'மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும் தேவாரம் செய்த திருப்பாட்டும்' என்ற அடிகளைக் காட்டி முன் காட்டிய இருவர்க்கு முன்பே மூவர் பாடலும் தேவாரம் என்று குறிப்பிட்டிருப்பதாகக் கருதுவர். அவர்கள் கூற்று வலி உறுவதாயின், 'மூவர் முதலிகளும் தேவாரம் செய்த' என்ற அளவில் அவ்வடிகள் நின்று மேலே சென்றிருக்கவேண்டும். அங்ஙனமின்றித் 'திருப் பாட்டும்' என்று தொடர்ந்துள்ளதைக் காண்க. ஆகவே, மூவர் பாடல் தேவாரம் என்று குறிப்பிடப்பட்டது, கி. பி. பதினாறும் நூற்றாண்டு முதல் என்றே கொள்ளுதல் தகும். ஆனால், ஆளுடைய அரசாம் அப்பர் பெருமானார் பாடல்கள் தேவாரம் என்ற பெயரால் குறிக்கப்

பட்டதையும், ஞானசம்பந்தர் பாடல்கள் திருக்கடைக் காப்பு என்று கூறப்பட்டதையும் சுந்தரரது பாடல்கள் திருப்பாட்டு என அறிவிக்கப்பட்டிருப்பதையும், திருத் துறையூர் சாந்தலிங்க சுவாமிகள் திருவாய்மலர்ந்த கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் ஆகிய நூல்களுக்கு உரை வரைந்த திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் தம் உரையில் உணர்த்திச் சென்றிருப்பதை நன்கு காணலாம்.

திருஞானசம்பந்தர் பதிகங்களின் ஈற்றுப் பாடலில் இவர்தம் பெயரும், பதிகப் பயனும், பாடும் முறையும் அமைந்திருப்பதையும் நாம் உணர்கிறோம். இதுவே திருக்கடைக்காப்பாகும். இதனால் அவர்தம் பதிகம் 'திருக்கடைக்காப்பு' எனப்பட்டது. இதனைச் சேக் கிழார் 'பண்ணார் பதிகத் திருக்கடைக்காப்புப் பரவி' என்று அறிவிப்பதன் மூலம் அறியலாம். சுந்தரர் பாட்டு, திருப்பாட்டு என்பதன் குறிப்பைப் பெரியபுரா ணத்துள் 'ஏத்தா திருந்தறியேன் எனுந் திருப்பாட்டு' என்ற தொடரால் அறிந்துகொள்ளலாம் இன்னோரன்ன குறிப்புகளே சிதம்பர சுவாமிகளை மூவர் முதலிகளின் பாடல்களுக்கு வெவ்வேறு பெயர்களை ஈயத் துணையாக இருந்தன என்னலாம். அப்பர் பெருமானார் திருப் பாடல்கள் தேவாரம் என்று குறிப்பிட்ட குறிப்புச் சேக்கிழார் பெருமானார் திருவாக்கில் இலது. பின் வந்த துறைமங்கலச் சிவப்பிரகாச சுவாமிகள் சுந்தரர் பாட் டைத் 'திருப்பாட்டு' என்றே குறிப்பிட்டுள்ளார். 'படி யிலா நின் பாட்டு' என்ற தொடரைக் காணவும். இராம லிங்க வள்ளலாரும் 'தேன் படிக்கும் அமுதாம் உன்

திருப்பாட்டை' என்று பாடியிருப்பதையும் அறிந்து கொள்வோமாக.

இன்னோரன்ன அரிய குறிப்புகள் மூவர் பாடலைப் பற்றி இருக்க, அம்மூவர் பாடல்களுக்குத் 'தேவாரம்' என்ற சொல் எங்ஙனம் அமைத்து வழங்கப்பட்டது என்ற ஐயம் எழத்தான் செய்யும். தேவாரம் என்ற சொல் கல்வெட்டுகளில் காணப்பெறும் சொல்லாகும். ஆனால், ஆண்டு இச்சொல் மூவர் பாடல்களைக் குறிக்க வந்திலது. கல் வெட்டுகளில் 'தேவாரத் தேவர்' என்றும், 'தேவாரத்திற்குத் திருப்பதியம் பாடும் பெரியான்' என்றும், 'தேவாரத்திற்குத் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் அம்பலத்தாடி' எனவும், 'தேவாரச் செல்வன் மடம்' 'திருவூறல் பெருமானைத் தேவாரம் செய்து' என்றும் வரும் அச்சொல்லுக்கு வழிபாடு என்பதே பொருளாக உள்ளதே அன்றி, நாம் கருதும் தேவாரமாம் நூலைக் குறித்து வந்திலது. மேலே காட்டிய தொடர்களில் வரும் 'திருப்பதியம்' என்பது மூவர் பாடல்களைக் குறித்து நிற்கிறது.

கொற்றவங்குடி உமாபதி சிவாசாரியரும் தமது கோயிற் புராணத்தில் 'தேவாரம் கைப்பற்றிய பணி' என்னும் தொடரை ஆண்டுள்ளனர். ஆண்டும் வழிபாடு என்னும் பொருளில்தான் தேவாரச் சொல் உணர்த்தி நிற்கிறது. இரட்டையர் வாக்கில் வந்துள்ள 'தேவாரஞ் செய்த திருப்பாட்டும்' என்பதும் வழிபாட்டிற்காகச் செய்த திருப்பாட்டு என்பதே நேரிய பொருளாகும். இனி, மூவர் பாடல்களில் காணப்படும் இசைக் குறிப்பைக் காண்போமாக.

திருஞானசம்பந்தரது இசைக் குறிப்பை உணர்தற்குமுன், அவருக்குத் தமிழ் இசையின் மாண்பைப் பற்றியும், தமிழினைப்பற்றியும் உள்ள மனப்பண்பை உணர்வோமாக. அவர் தென்னாடு தமிழ் இசைக்குப் பேர் பெற்றது என்பதையும், தமிழ் மொழியே இசை அமைந்தது என்பதையும் நன்கு எடுத்து இயம்பியுள்ளார்.

'வேறுபொ ருளின்தமிழ் இயற்கிளவி தேருமடமாதருடனார், வேறுதிசை ஆடவர்கள் கூற இசை தேரும் எழில் வேதவனமே' என்று பாடிய பாடலின் கருத்து வேதவனமாம் திருமறைக்காடு பிறதேசத்தவர் வந்து இசைப் பயில்தற்கு இருப்பிடமாய் அமைந்தது என்பதாம். இது தமிழ் இசையின் மாண்பை இயம்புவதன்றோ ? இவர் தமிழிற்கு அடை கொடுத்துப் பேசும் இடங்கள் சிலவற்றுள் 'பண்ணார் தமிழ்,' பண்ணார்ந்த தமிழ்' என்று பாடியுள்ளனர். இனி இவர்தம் பாடலில் காணும் இசைக்குறிப்பைக் காண்போமாக.

சிரபுரச் செம்மல் தமது பாடல்கள் பண்ணமைந்த இசைப்பாடல்கள் என்பதை, 'இயல் இசை இயல்பா' 'எழின்னிசை மாலை' 'பண்பொலி செந்தமிழ் மாலை 'சந்தம் இவை தண்தமிழின் இன்னிசை எனப் பரவு பாடல்' என அவரே குறிப்பிட்டிருப்பதால் அறியலாம்.

யாழ் என்னும் இசைக் கருவியினைக் குறிப்பிடும் போது இன்னிசை யாழ் என்றும், துளை பயிலும் குழல் யாழ் என்று குழல் கருவியையும் குறிப்பிட்டுள்ளார். முழவைப்பற்றிய குறிப்புப் பல இடங்களிலும் வந்துளது. 'முழவோடிசை' என்றும், 'மந்த ஒலி முழவு' என்றும்

கூறியுள்ளார். பறையும் இசைக்கருவிகளுள் ஒன்ருகக் கூறப்பட்டுள்ளது.

'நாவினில் பாடல்' என்ற தொடர் இசைக் கருவிகள் ஐந்தனுள் மிடற்றுக் கருவியும் ஒன்ருதலின் அக் குறிப்பினை விளக்க எழுந்ததாகும். அப்பரும் வள்ளுவரும் பாடலுக்குப் பண் இன்றியமையாதது என்று கருதுவதுபோல, இவரும் பாடலுக்குப் பண் இன்றியமையாதது என்பதை வற்புறுத்தப் பல்வேறு இடங்களில், பாடலுக்குப் பண் என்னும் மொழியை அடைகொடுத்தே பாடியுள்ளார். 'பண்ணியல் பாடல்' என்றும், வண்டுகளும் பண்ணியைத்தே பாடின என்பதை, 'வண்டு பண்ணின்று ஒலி செய' என்றும் குறித்துள்ளார். 'பண்ணுரப் பாடவல்லார்க்கு இல்லை பாவமே' என்றும் பாடியுள்ளார். 'பண்கள் ஆர்தரப் படுவார் கேடிலர்' என்றும் கூறியுள்ளார். ஏழிசையினை 'ஆருச் சுவை ஏழ் இசை' என்றும், 'பண்ணும் பதம் ஏழ்' என்றும் உணர்த்தியுள்ளார்.

சம்பந்தரது பாடலில் மொந்தை என்னும் இசைக் கருவி அடிக்கடி குறிக்கப்பட்டுள்ளது. இதுபோலவே தக்கை என்னும் கருவியும் காணப்படுகிறது. 'தழங்கும் மொந்தை தக்கை மிக்க' என்றும், 'மொந்தை கொட்ட' என்றும், 'தண்டு உடுக்கை, தாளம் தக்கை சார நடம் பயில்வார்' என்றும், 'தமிழின் நீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி நல்ல முழவம் மொந்தை மல்கு பாடல்' என்றும், 'முழவம் குழல் மொந்தை முழங்கு' என்றும், குழலும் மொந்தை விழா ஒலி' என்றும், 'மண் முழவம் குழல் மொந்தை பறைவளர் பாடல்' என்றும் குறிப்பிட்டுள்ளார். பேரியும் ஓர் இசைக்கருவி என்பது

'பேரி முழங்கக் குலாவி' என்ற அடியால் தெரிய வருகிறது.

பண்கள் பல. அவற்றுள், செவ்வழியும் ஒன்று. அதனை இவரது பாடலில் 'சிறைவண்டு பெடை புல்கிச் செவ்வழி பாடும் குற்றாலம். என்றும், 'வண்டு செவ்வழி நற்பண் பாடும்' என்றும் பாடியுள்ளதைக் காண்க. திருஞானசம்பந்தரது மூன்று திருமுறைகளி லும் காணப்படும் பண்கள் கீழ்வருவன. அவை: நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி, இந்த ளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம், நட்டராகம், செவ்வழி, காந்தார பஞ்சமம், சாதாரி, பழம்பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக்குறிஞ்சி, கொல்லி, கொல்லிக்கௌவாணம், கௌசிகம், பஞ்சமம் என்பன. இப்பண்கள்படி சம்பந்தர் பாடல்கள் பாடப்பட்டன என்பதை அவ்வப்பதிகத் தலைப்பில் அவ்வப்பண்களின் பெயர்கள் அமைந்திருப்பதால் அறிகிறோம். அப்பண் களின் பெயர்களுள் சில இவரது பாடல்களில் உண்டு. செவ்வழிப் பண் குறிப்பிடப்பட்டிருப்பதை முதலில் கண்டோம். இதுபோலவே, 'காந்தாரம் இசையமைத் துக் காரிகையார் பண் பாட' என்று காந்தாரப் பண்ணையும் அவரே குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

பெரும் பண்கள் நான்கு. அவை: மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை என்பன. இவை மருத யாழ், குறிஞ்சி யாழ், நெய்தல் யாழ், பாலை யாழ் எனப்படும். யாழ் என்பது பண்ணையும், இசைக்கருவியையும் உணர்த்தும். இதைப்பற்றிய குறிப்புகளையும் சிலம்பில் காணலாம். சம்பந்தரது பாட்டிலும் 'பாலையாழ்ப் பாட்டுகந்தான்'

என்ற குறிப்புக் காணப்படுகின்றது. தமிழில் ஏழ் இசைகள் உள்ளன. அவை குரல், துத்தம், இளி, கைக்கிளை, விளரி, தாரம், உழை என்பன.

ஏழ் இசைகளில் குரல் முதலில் நிற்பது. அதனை இவர் 'பண்புனை குரல் வழி' என்று குறித்துள்ளனர். இளி என்னும் இசைப்பெயரை 'இளிபடும் இன்சொலி னார்' என்றனர். 'துத்தம் நல்லின் இசை' எனத் துத்த இசையினையும் சுட்டியுள்ளார்.

மொந்தை என்னும் இசைக் கருவியினைக் குறிப் பிடும் இடங்களில் பெரிதும் குழலை இயைத்துக் கூறுவ தால் அதற்கு இது துணைக்கருவி என்பது தெரிகிறது. 'மொந்தை குழல்' என்றதைக் காண்க. முழவில் பல உண்டு ஆதலின் 'மண் முழவு, மண்ணார்ந்த முழவு' என்று குறிப்பிட்டு, அதன் அமைப்பினையும் அறிவிப் பது அறிதற்குரியது.

'தெத்தே' என்பது இசை ஒலியாகும். வண்டின் ஓசை இவ்விசையின் ஒலியாகும் எனபதை, 'தும்பி தெத்தெ என முரல' என்றனர். சல்லரி என்பதும் ஓர் இசைக்கருவி. அதனை, 'சல்லரி யாழ் முழவம் மொந்தை குழல் தாளமது இயம்ப' என்று முன் வைத்துச் சிறப் பித்துள்ளார். கொக்கரை என்பதும் ஓர் இசைக் கருவி. 'கொக்கரை குழல் முழவு' என்றதைக் காண்க.

சம்பந்தர் வண்ணங்களைப் பற்றியும் குறிப்பிட் டுள்ளனர். வண்ணம் என்பது பாட்டில் நிகழும் ஓசை விகற்பம், அவ்வண்ணம் மூன்று. அவை, பெருவண் ணம், இடை வண்ணம், வனப்பு வண்ணம் என்பன. இக்குறிப்பே சம்பந்தர் வாக்கில் 'வண்ணம் மூன்றும்

தமிழில் தெரிந்திசை பாடுவார்' என்று காணப்படு கிறது. அப்பரும், வண்ணங்களைப்பற்றிக் குறிப்பிட் டுள்ளனர். 'வண்ணங்கள் தாம் பாடிவந்து நின்று' என்னும் வரியைக் காண்க.

சந்தக்குறிப்பு, வாய்பாடுகள் பல சம்பந்தர் வாக்கில் உண்டு. அவ்வாய்பாடுகள், 'தென்னு, தென என, தெத்தென, தெத்தே மும்ம், தந்த, திந்த, தேம் தாம்' என்பன. இவற்றை, 'தென்று என்று வரி வண்டு இசைசெய்' 'தென்எனு வண்டினங்கள், தென் என இசை முரல. தும்பி தெத்தே என முரல, தந்த திந்தத் தடமென் அருவி' 'தேந்தாம் என்று அரங்கேறி, மும்ம் என்று இசைமுரல் வண்டுகள்' என்றும் அவரது வாக்கில் வருதலைக் காண்க.

சம்பந்தர் இசை நுட்பங்கள் பலவற்றையும் தம் பாடலில் குறித்துள்ளனர். அவற்றுள் ஒன்று, 'ஏழ் இசை எட்டிருங் கலைசேர் பண்ணிடை ஒன்பதும் ஒன்று' என்பது. இதன் விளக்கத்தை இசை வல்லுநர்பால் கேட்டுத் தெளிதல் வேண்டும்.

சம்பந்தரது பாடல்களில் காணக்கிடைத்த இசைக் குறிப்புகளைக் கண்டோம். இனி அப்பர் பெருமா னுரின் வாக்கில் இசைகளைப்பற்றி என்ன அறிகிறோம் என்பதையும் அறிவோமாக. இதற்கு முன் அப்பரது பதிகங்கள் எவ்வெப் பண்களில் பாடப்பட்டன என் பதையும் ஈண்டே நினைவுகூர்வோமாக. அப்பரது பாடல்கள் இந்தளம், காந்தாரப் பஞ்சமம், காந்தாரம், குறிஞ்சி, கொல்லி, சாதாரி, சீகாமரம், பழந்தக்கராகம், பழம்பஞ்சுரம், பியந்தைக் காந்தாரம் என்னும் பண் களிலே பாடப்பட்டன.

திருநாவுக்கரசர் இசையோடு பாட விரும்பினர் என்பது, 'தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்' என்றும், 'வரிமுரி பாடிநின்று வல்லவாறு அடைந்து நெஞ்சே' என்றும் பாடுமாற்ருல் தெரியலாம்.

பண்ணுக்கும் பாட்டுக்கும் இயைபு உண்டு என்பதை, 'பண்ணின் ஆர் பாடல் ஆகி' என்றும், 'பாட்டில் பண்ணும்' என்றும், 'பண் துளங்கப் பாடல் பயின்ருய்' என்றும் பாடி இருப்பதால் அறியலாம். 'பண் வடிவே இறைவன் வடிவு' என்பதைப் 'பண் அகத்தான் பண்ணவன்காண்' என்பதனுல் உணரலாம்.

இசைக்கருவிகளைப்பற்றி ஆளுடைய அரசர் குறிப்பிடும்போது, 'தாளங்கள் கொண்டும் குழல் கொண்டும் யாழ் கொண்டும்' என்றும், 'குழலொடு கொக்கரை கைத்தாளம் மொந்தை' என்றும், 'குழல் மொந்தை வீணை யாழும்' என்றும், (இதனுல் வீணையும் யாழும் வேறு என்பதை ஈண்டே உணரவும்). 'கொக்கரை தாளம் வீணை பாணிசெய் குழகர்' என்றும், 'கொண்ட பாணி கொடுகொட்டி தாளம் கைக்கொண்ட' என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

இயங்களிலும் பண்கள் பொருந்தியுள்ளன என்பது அப்பர் கருத்து. இஃது அவர் கூறியுள்ள 'பண் ஆரப் பல்லியம் பாடி' என்னும் அடியால் தெரிகிறது. காந்தாரப் பண்ணைப் பாடிச் செல்வதை, 'காந்தாரம் தாம் முரலப் போக' என்பதனுல் தெரியவருகின்றது. இறைவர் காமரப் பண்ணைப் பாடி மகிழ்வர் என்பதை, 'காமரங்கள் பாடித் திரிவர்' என்று உணர்த்துவதால் உணரக்கிடக்கிறது. இறைவர், சொல்லிப்பண்ணை

விரும்புவர் என்பதை அப்பர், 'கொல்லியாம் பண் உகந் தார் குறுக்கை வீரட்ட னுரே' என்று குறிப்பிடுவதைக் காண்க. யாழ் ஏழு நரம்புகளைக்கொண்டது என்பது அப்பர் வாக்கால் அறியவருகின்றது. 'எழுநரம்பின் இசை கேட்டானை' என்னும் தொடரைக் காண்க.

ஆளுடைய அரசுகள், 'கந்திருவம்' என்னும் இசை இலக்கண நூலைக் குறிப்பிட்டுள்ளனர். 'கந்திருவம் பாட்டிசையில் காட்டுகின்ற' என்னும் அடியைக் காண்க. பண், திறம், திறத்திறம் என்று கூறப்படும் மூவகை இசைக்குறிப்புகள் உண்டு. இந்தக் குறிப்பைப் 'பண்ணவற்றின் திறலானுன்காண்' என்னும் வரியில் அமைத்துக் காட்டினுர்.

அடுத்தாற்போல் சுந்தரரது பாடலிலும் காணக் கிடக்கும் இசைக் குறிப்பினை நோக்குவோமாக.

ஆளுடைய நம்பிகள் இசைக்குறிப்பினைப் பாடிய பாடல்கள் சிலவே. தமது பாடல் பண்ணமைந்தது என்பதைப் 'பண்பயிலும் பத்து' என்ருர். 'நலிகொள் இன்இசைச் செந்தமிழ் பத்தும்' என்றும், 'ஏழ் இசை இன்தமிழால் இசைந்தேத்திய பத்து' என்றும் குறிப் பிட்டுள்ளனர். நம்பி ஆரூரர் பண்ணுக்கும் தமிழுக்கும் இயைபு இருப்பதை, 'பண் இடைத் தமிழ் ஒப்பாய்' என்பர். இறைவன் இசைமயமாய் இருக்கிருன் என் பதையும், ஏழ் இசைகள் தமிழில் உள்ளன என்பதை யும், 'ஏழ் இசையாய் இசைப் பயனுய்' என்று கூறு மாற்ருல் தெளியலாம்.

இசைக்கருவிகளைப்பற்றிய குறிப்புகளும் நாவலூர் நம்பிகள் பாடல்களில் சிலஉண்டு. 'மந்தம் முழவும் குழலும் இயம்பும்' என்றும் கூறுதலால் அறியலாம்.

நம்பி ஆரூரரது பதிகங்கள் இந்தளம். தக்கராகம், நட்டராகம், கொல்லி, கொல்லிக்கௌவாணம், பழம் பஞ்சுரம் தக்கேசி, காந்தாரம், பியந்தைக் காந்தாரம், காந்தார பஞ்சமம், நட்டபாடை, புறநீர்மை, சீகாமரம், குறிஞ்சி, கௌசிகம், செந்துருத்தி, பஞ்சமம் என்ற பண்களிற் பாடப்பட்டன என்பது பதிகங்களின் தலைப்பில் அமைந்த இப்பண்களின் பெயர்கள் மூலம் உணர்கிறோம். இவரது பாடல்களுள் அமைந்த இசை பற்றிய செய்தி யாது என்பதையும் அறிதல் நலமன்றோ?

இசைக்குரிய ஒலிக் குறிப்பினை அழகுற 'தென்னாத் தெனாத்தெத் தெனா என்று பாடி' எனக் குறிப்பிட்டுள்ளார். சுந்தரர் யாழினைப் பற்றிப் பாடுகையில் 'யாழ் முயன்றிருக்கும் ஆரூர்' என்றார். பேரியும் முழவும் இவர் பாடலில் காணப்படும் இசைக்கருவிகள். 'பேரி முழவொலியும்' என்றனர். 'ஏழ் இசை' என்ற தொடர் இவர் பாடலிலும் உண்டு. இவரும் இசைக்குப் பண் இன்றியமையாதது என்பதைக் குறிப்பிடுவாராகி 'பண்ணார் இசைகளது கொண்டு பலரும் ஏத்தும்' என்று பாடுகின்றார். பாடல்கள் பண்ணுடன் பாடப்படுதலின் இன்றியமையாமையினை 'பண்ணார் பாடல்அறா' எனக் கூறுதல் கொண்டு தெளியலாம்.

திருநாவலூரர் பாடல்கள் நமக்குக் குறைவாகவே கிடைத்திருக்கும் காரணத்தால் இசைகளைப்பற்றிய குறிப்புகள் அவர் பாடல்களில் மிகுதியும் அறிதற் கில்லை. ஆனால், கிடைத்த அளவில் இவர் பண்ணைப் பற்றிக் கொண்டுள்ள கருத்துப் பாடலுக்குப் பண் இன்றி அமையாதது என்பது புலனாகிறது.

மூவர் பாடல்களில் பாலை யாழ், மருத யாழ், முல்லை யாழ், செவ்வழி, பஞ்சமம், காந்தாரப் பஞ்சுரம், மருள் குறிஞ்சி, கொல்லி, காமரம், நேரிசை, நந்திசை, பிறழ் செந்து என்னும் பண்களின் பெயர்கள் காணப்படு கின்றன. இவற்றுள் நேரிசை, நந்திசை, பிறழ் என்னும் பண்களின் பெயர்களை வேறு நூல்களில் காணல் அரிது.

இப்பண்களை எடுத்து ஆண்ட தொடர்கள் கீழ் வருவன: நேரிசையாக அறுபதம் முரன்று' என்றும் 'வண்டினங்கள் வந்து நந்திசை பாட' என்றும் சம்பந்தர் பாடியுள்ளனர். 'உமை என்னும் நங்கை பிறழ் பாட' என்று அப்பர் அறிவித்துள்ளனர்.

இசைக் கருவிகளைப்பற்றிய குறிப்புகளும் பல வாக மூவர் பாடல்களில் உண்டு. அவையே இடக்கை, உடுக்கை, கத்தரிகை, கல்லவடம், கல்லக்கிணை, குட முழா, கொக்கரை, கொடுகொட்டி, சல்லரி, தக்கை, தகுணிச்சம், தண்ணுமை, பறை, பிடவம், முழவு, மொந்தை, முரசம் என்பன. இவை தோல் கருவிகள்.

மூவர் பாடல்கள், வெறும் தோத்திரப்பாடல்களின் தொகுப்பு மட்டும் அல்ல. அவை ஒரு கலைக் களஞ்சியம். அவற்றுள் அறுபத்து நான்கு கலைகளையும் காணலாம். அக்கலைகளுள் ஒன்றான இசைக் கலைக் குறிப்பே ஈண்டுச் சிறிது எழுதப்பட்டது. சமயம் வாய்ப்புழி ஏனைய கலைகளைப்பற்றி ஆய்வோமாக.

———

## 6. உலகெலாம் தழுவிய உன்னத நூல்

இந்தத் தலைப்பைக் கண்டதும் எவர்க்கும் திருக்குறள் நூலின் நினைவு வருமே அன்றி, வேறு நூலின் நினைவு வராது. இஃது உண்மை. அந்த அளவுக்கு நந்தம் திருக்குறள் உலகம் முழுவதும் பரவி, எவரும் அந்நூலின் கருத்துகளைத் தழுவும் நிலையில் பொலிவுற்றுத் திகழ்கிறது. கிறித்தவர்களின் வேதமாம் பைபில் எங்ஙனம் பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறதோ, அதுபோலத் திருக்குறளும் பல மொழிகளில் பெயர்க்கப்பட்டிருப்பதனால் அஃது 'உலகெலாம் தழுவிய உன்னத நூல்'தானே! என்றாலும், ஈண்டு இத்தலைப்பின்கீழ் விளக்கப்படும் நூல், தொண்டர்சீர் பரவுவார் பாடிய தொண்டர் புராணமே ஆகும்.

சேக்கிழார், திருவள்ளுவரோடு ஒருங்கே வைத்துப் போற்றப்படுதற்குரியர். இருவரும் தெய்வப்புலவர் என்னும் மாபெரும் சிறப்புப் பட்டத்திற்குரியவர்கள். பெரிய புராணம் சைவர்கட்குரிய சிறப்பு நூலே ஆயினும் அந்நூலின் கருத்துகளும் விளக்கங்களும் உலகம் யாவும் ஏற்றுக்கொளற்குரிய பொது நூலும் ஆகும். இதனைக் கீழ்வரும் கட்டுரை வாயிலாக நன்கு உணரலாம். ஆகவே, பெரிய புராணம் 'உலகெலாம் தழுவிய உன்னத நூல்' என்று கூறவேண்டி உளது.

இங்கு எடுத்துக்கொண்ட தொடர்ப் பொருளை ஆய்தற்கு முன், முன்னவனார் மொழிந்தருளிய 'உலகெலாம்' என்னும் தொடர்ப்பொருளில் சிறிது சிந்தனை

செலுத்துவோமாக. உலகெலாம் என்னும் இச்செம்மை சான்ற திருத்தொடரைச் சேக்கிழார் பெருமானார் தம் நூலகத்து முதன்மை மிக்க மூவிடத்து வைத்துப் போற்றியுள்ளதை யாவரும் அறிவோம். முதற்கண் தம் நூலுக்கு வணக்கச் செய்யுளைப் பாடி அமைக்குங்கால்,

'உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்'

என்றும்,

தம் நூலின் இடைப் பகுதியில் ஆளுடைய பிள்ளையார், அரனார் அருளால் கிடைத்த சிவிகையில் இவரும் தருணம்,

'சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்
றோதி யாரருள் ஆதலின் அஞ்செழுத்து
ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்'

என்றும்,

தம் பெருநூலின் இறுதியில், அதற்கு அருமை வாய்ந்த வாழ்த்துக் கவிபோல,

'என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யார்அவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்'

என்றும் பாடி அமைத்திருப்பதைக் காண்க.

கூத்தப்பெருமானது அருள்நாத ஒலியில் எழுந்த மகாமந்திரமாகிய உலகெலாம் என்னும் உண்மைமொழியினை இந்நூல் பெற்றதால் இப்பெரிய புராணமானது, இறைவனது மந்திரம்போல் அமைந்த பதிவாக்கே அன்றிப் பசுவாக்கு அன்று. இந்நூல் பதி வாக்கு என்பதை உணர்த்தவும், இறைவனும் சேக்கிழார் பெருமானுர்க்கு வேறு எந்தத் தொடரையும் எடுத்து இயம்பாது, உலகெலாம் என்னும் உண்மைத்தொடர் மொழியினையே எடுத்து ஓதினன் என்க. இத்தகைய உலகெலாம் என்னும் தொடரை இப் பெரிய புராணம், தன்னகத்துக் கொண்டிருத்தலின், இந்நூல் சைவ சமயத்துக்கே உரிய சிறப்பு நூலாகத் திகழ்வதோடு நில்லாது, உலகத்திற்கே ஒரு பொது நூலாகத் திகழ்ந்து கொண்டிருகின்றது என்பது பெறப்படுகிறது. இந்நூல் பதி நூலாயின் ஏன் உலக நூல் ஆகாது? உலகம் தழுவிய உன்னத நூல் ஆகாது?

ஈண்டு உலகம் என்பது எது? மேல், இடை. கீழ், என்னும் மூவுலகங்களா? அன்றி, கீழ் ஏழ் உலகம்' மேல் ஏழ் உலகம் என்று கூறப்படும் பதினுன்கு உலகங்களா? அன்றி, அடுக்கிய மூவேழ் உலகம் என்று கூறப்படும் இருபத்தோர் உலகங்களா? உலகம் என்றது ஈண்டு இவ்வாருன எண்ணிக்கைகட்கு உட்பட்ட உலகங்களை மட்டும் உணர்த்தும் மொழி அன்று. இத்தகைய எண்ணிக்கைகட்குரிய உலகமாயின், சூரபதுமன் எவ்வாறு ஆயிரத்தெட்டு அண்டங்கட்குரியன் என்று கூறப்படுவான்?

'மாயையின் வலியோன் ஆகி மால்முதலோரை வென்றே
ஆயிரத் தோரெட்டு அண்டமும் அரசு செய்து'

என்று இவன் ஆயிரத்தெட்டு அண்டங்களை ஆண்டதைக் கந்தபுராணச் செய்யுள் அறிவித்தல் காண்க.

அருட்பிரகாச வள்ளலார், உலகெலாம் என்னும் மெய்ம்மொழிக்குரிய பொருளை விளக்குங்கால் உலகம் 2306 என வகுத்துப்பேசியதோடு நிறுத்தாமல், இறுதிக்கண், 'இன்னும் இதனை விரிக்கில் பெருகும்' என்று இயம்பிச் சென்றிருப்பாராயின், எத்தனையோவகை உலகங்கள் மேலும் பல உள என்பது பெறப்படுகின்றது அன்றோ?

'ஆயிரம் கோடிகொண்ட அண்டத்தின் உயிர்கட்கெல்லாம்
நாயகன் அவன்காண்'

என்னும் கந்தபுராணச் செய்யுளையும்,

'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பரும் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றுக் கோடியின் மேற்பட விரிந்தன'

என்னும் மணிமொழியாருடைய மணிமொழிகளையும் ஈண்டு நினைவுபடுத்திக்கொண்டால், அண்டங்கள், (உலகங்கள்) பல உண்டு என்னும் உண்மை நன்கு புலப்படும். ஆக பலகோடி உலகங்களையும் உணர்த்தவே 'உலகெலாம்' என்று இறைவன் எடுத்து இயம்ப, அதன் அருமைப் பொருளை உணர்ந்த சேக்கிழார் பெருமானுர், உய்ய உலகெலாம்' என்றும் பாடி அருளிய அருமைப் பாட்டை, எண்ணும்தொறும் எண்ணும்தொறும் இப் பெரியபுராணம் உலக நூல் என்பது பெறப்படும், உலகம் தழுவிய உன்னத நூல் என்பதும் உணரப்படும். இக்கருத்துகள் இந்நூலகத்து நன்கு பொருந்தியுள்ளன.

ஆளுடைய நம்பிகள் பொதுப்படத் தம் அருமைத் திருவாக்கில் 'அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்' என்று பாடியருளினர். இவ்வாறு நம்பி ஆரூரர், 'அப்பாலும் அடிசார்ந்த அடியார் யாவர்?' என்பதை நாம் உய்த்து உணரவேண்டும் என்ற முறையில் தான் பொதுப்படப் பாடிச்சென்றார். அப்பாலும் அடிச் சார்ந்த அடியார் என்னும் தொடருக்கு நம்போல் சில் வாழ்நாள் சிற்றறிவுடைய சீர்மையற்றவர்கள், 'எனக் குப்பின்னால் இறைவன் திருவடியை அடைந்த அன்பர் கட்கு எல்லாம் அடியேன்' என்பதுதான் ஆளுடைய நம்பிகள் கருதிய கருத்தாகும்' என்று பொருள் கூறி இடர்ப்பட்டிருப்பர். ஆனால், பேர் அறிவு படைத்த பெருந்தகையராம் சேக்கிழார் பெருமானார், இங்ஙனம் இத்தொடர்க்குப் பொருள் காண்பரோ? ஒருபோதும் காணார். சேக்கிழார் கண்ட பொருள்,

'மூவேந்தர் தமிழ்வழங்கு நாட்டுக் கப்பால்
முதல்வனார் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையில் கூறும்
நற்றொண்டர் காலத்து முன்னும் பின்னும்
பூவேய்ந்த நெடுஞ்சடைமேல் அடம்பு தும்பை
புதியமதி நதிஇதழி பொருந்த வைத்த
சேவேந்து வெல்கொடியான் அடிச்சார்ந் தாரும்
செப்பியஅப் பாலும்அடிச் சார்ந்தார் தாமே'

என்பது.

இப்பாடலின் உள்பொருளினை நன்கு ஓர்தல் வேண்டும். இதில் வன்தொண்டர்க்குப்பின் அரனார் திருவடிகளைச் சார்ந்த தமிழ் நாட்டுச் சிவனடியார்கள் மட்டும் குறிக்கப்பட்டிலர். தமிழ் நாட்டிற்கு அப்பால்

உள்ள அன்பர்களையும், முழுமுதற் பரம்பொருளின் திருவடியினை அடைந்தவர்களையும் கூறுகின்றார் சேக்கிழார் பெருமானார். இப்பொருளினை 'மூவேந்தர் தமிழ் வழங்கு நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோரும்' என்னும் முதலடி உணர்த்தி நிற்கிறது. ஏனைய மூன்று அடிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு முன்னும் பின்னும் சிவனடி சார்ந்த சிவனடியார்களைக் குறிப்பிடுவனவாகும். இந்த நுட்பமான வேறுபாட்டினை உணர்த்தவே சேவையர் காவலர், முதலடியில் இறைவனைச் சிறப்புப்பெயரால் குறிப்பிடாமல், பொதுப்பெயராகிய முதல்வனார் என்றும், ஈற்றடியில் இறைவனைப் பொதுப்பெயரால் குறிப்பிடாமல் சிறப்புப்பெயராகிய 'சேவேந்து வெல்கொடியான்' என்றும் செப்பிப் போயினர். இந்த அரும்பெரும் குறிப்பினை நாம் நன்கு சிந்திக்கவேண்டாவா? ஆண்டவனிடத்தும், ஆண்டவன் அன்பரிடத்தும் அன்பு கொண்டவர் எக்குடியில் பிறப்பினும், எங்நாட்டில் இருப்பினும், எச்சமயத்தில் தோன்றினும் கவலையில்லை. அவர்கள் யாவரும் அடியவர்களே; அன்பர்களே. அவர்கட்கெல்லாம் தாம் அடிமை என்பதுதான் பரவையார் காதலரின் உள்ளக்கிடக்கையாகும். அவ்வுள்ளக் கிடக்கைதான் 'அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்' என்று சிங்கடி அப்பரைக் கூறுமாறு செய்தது; இக்கூற்றின் உண்மையினை உணர்ந்துதான் 'மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக்கப்பால் முதல்வனார் அடிச்சார்ந்த முறைமையோரும், செப்பிய அப்பாலும் அடிச் சார்ந்தார்தாமே' என்று தொண்டர்சீர் பரவுவார் பாடுவாராயினர். இதனைப் புறச்சமயத்தைச் சார்ந்த

பிறநாட்டு அன்பர்களின் அன்புடைமையினை எடுத்துக் காட்டி விளக்குவோமாக.

மேனாட்டில் திரு. பிரான்ஸிஸ் என்னும் பெயருடையார் ஒருவர் இருந்தார். அவர் கிறித்தவச் சமயத்தினர். அவர்,

'படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே'

என்ற நம் திருமூலர் கொள்கைப்படி, ஆண்டவனது அன்பர்களிடத்திலும் ஏழை எளியவர்களிடத்திலும் அன்பு காட்டி அவர்கட்கு ஆவன செய்து வந்தார் அவர் இருந்த காலம் கி. பி. 13 ஆம் நூற்றாண்டாகும். கோயில் திருப்பணி செய்வதில் பேரூக்கம் கொண்டவர். இவர் பெருஞ் செல்வக்குடியில் தோன்றித் தந்தையாரைப் பொருட்படுத்தாது ஆண்டவனுக்கும் அனாதைகட்கும் தொண்டு செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். 'தம் மகன் இவ்வாறு இருக்கின்றானே, நமக்குப் பின்னால் நம் பெருஞ் சொத்தை யார் துய்ப்பவர்கள்? அவனை எப்படியும் நம் வசப்படுத்த வேண்டும்' என்று எண்ணிய பிரான்ஸிஸினுடைய தந்தையார் முனைந்து சட்டப்படி தம் மகனைத் தம் வழிக்குக் கொணரப் பாடுபட்டபோது, பிரான்ஸிஸ் சட்ட சபையில் பலர் முன், 'என் தந்தை பரலோகத்தில் இருக்கும் ஆண்டவனே அன்றி, என் உடலுக்குரிய தந்தையாரான பியட்ரோ பெர்னார்டன் அல்லர்' என்று திட்டவட்டமாகக் கூறினார். இங்ஙனம் தந்தையாரை வெறுத்து ஆண்டவன் பணியும் அடியார்

பணியும் செய்துகொண்டு இறைவன் திருவடியில் கலந்து இன்புற்ருர். இப்பிரான்ஸிஸின் தொண்டும் வரலாறும்,

'ஓதடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும என்று
நாடிய மனத்தி னேடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்'

என்னும் மெய்ப்பொருள் நாயனுர் தொண்டினையும.

'அடுப்பது சிவன்பால் அன்பர்க்
காம்பணி செய்தல் என்றே
கொடுப்பதுஎவ் வகையும் தேடி
அவர்கொளக் கொடுத்துக் கங்கை
மடுப்பொதி வேணி ஐயர்
மகிழ்ந்துறை வதற்கோர் கோயில்
எடுப்பது மனத்துக் கொண்டார்
இருநிதி இன்மை எண்ணுர்'

என்னும் பூசலார் நாயனுர் அன்பின் மாட்சியினையும், 'அந்த உடம்பு தன்னுடனே அரனுர் மகனுர் ஆயினுர்' என்னும் பேறுபெற்ற சண்டேசுர நாயனுர் வரலாற்றுக் குறிப்பையும் குறிக்கின்றன அல்லவோ? இங்ஙனம் இருக்க, இப்பிரான்ஸிஸ் பெரியார் அப்பாலும் அடிச் சார்ந்த அடியார் கூட்டத்தில் ஒருவர் அல்லரோ?

சிவகன் சமண சமயத்தைச் சார்ந்தவன். அவன் இறுதியில் உற்ற பேரின்பநிலை சிவகதி சேர்ந்தமை யாகும். இந்தக் குறிப்பினை அவன் உபதேச மொழிக ளாலும், சைன நூற்களில் ஒன்ருன மேருமந்திர புராணங்கூறும் கருத்தினுலும், மற்ருெரு சமண நூலாகிய திருக்கலம்பக நூலாலும், சிலப்பதிகார அடியி

ளூலும், இன்னெரு நூலாகிய சூளாமணியாம் சைன நூலாலும் முறையே நன்குணரலாம்.

'இன்பமற் றென்னும் பேரான்
எழுந்தபுற் கற்றை தீற்றித்
துன்பத்தைச் சுரக்கும் நான்கு
கதியெனும் தொழுவில் சேர்ந்து
நின்றபற் ருர்வம் நீக்கி
நிருமலன் பாதம் சேரின்
அன்புவிற் றுண்டு போகிச்
சிவகதி அடைய லாமே'

என்பது சீவகனது உபதேச மொழியாகும். இது சிந்தாமணிப் பாடல். சிந்தாமணி ஒரு சைன நூல்.

'மணிமலிந்த ஒளியெனவும் மலர்நிறைந்த
விரைஎனவும் மல்கு சந்தின்
துணிஉமிழ்ந்த தண்மையினும் தோன்றியஅப்
பேரின்பத் துள்ளே தோன்றி
இணைபிறிதும் இலராகி இமயவரும்
மாதவரும் இறைஞ்சி ஏத்தப்
பணிவரிய சிவகதியின் அமர்ந்திருந்தார்
அறஅமிர்தம் உண்டார் அன்றே'

என்பது மேருமந்திர புராணச்செய்யுள்.

'மாக்கயிலை மிசைநாப்பண்

மூவிலையொரு நெடுவேலினை
மேவாத வினையவுணர்
குன்றுபட நூழில்ஆட்டி
வென்றட்ட விறல்வெகுளியை

மூவெயிலின் முரண்முருக்கி
    மூவர்சரண் அடையநின்றனை
கருப்புநாண் வில்லிபட
    நெருப்புமிழ் நெடுநோக்கினை
கோள்வலிய கொடுங்கூற்றைத்
    தாள்வலியின் விழஉதைத்தனை
பரிவில்கே வலக்கிழத்தி
    பிரிவில்லா ஒருபாகனை
ஆன்றமெய் அறம்வளர்க்கும்
    மூன்றுகண் முனித்தலைவனை
ஆலநெடு நீழல்அமர்ந்தனை
    காலம்மூன்றும் உடன்அளந்
தாழ்சடை முடிச்சென்னிக்
    காசறு பொன்னெயில் கடவுளை
மன்னியபேர் உலகனைத்தும்
    நின்றுள்ளே நீஒடுக்கினை
நின்னின்று நீவிரித்தனை
    நின்அருளின் நீகாத்தனை
என ஆங்கு,
ஆதி பகவனை அருகனை
மாதுயர் நீங்க வழுத்துவம் யாமே

என்பது திருக்கலம்பகம்.

'சினவரன் தேவன் சிவகதி நாயகன்' என்பது சிலப்பதிகாரம்.

'அலகில்பெருங் குணத்தோன் ஆவரணம் நீக்கி
உலக மலோகம் உடனே விழுங்கிப்
புலவன் முடிவென்னும் பூங்கொடியும் தானும்
நிலவு சிவகதியுள் நீங்காது நின்றான்'

என்பது சூளாமணிப் பாடல்.

வீடுபேற்றினை உணர்த்தும் சிவகதி என்னும் தொடரை நமது அப்பர் பெருமானார் அருள் வாக்காகிய,

'மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறைஎனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகில்
சிவகதி விளையும் அன்றே'

என்னும் திருநேரிசையில் காணலாம்.

பௌத்த மதத்திலிருந்து ஓர் எடுத்துக்காட்டினைக் காட்டவேண்டின், அதற்குச் சான்றாகச் சாக்கியரே போதுமானவராக எடுத்துக் கூறலாம்.

'அந்நிலைமை சாக்கியர்தம் அருங்கலைநூல் ஓதி அது
தன்நிலையும் புறச்சமயச் சார்வுகளும் பொருளல்ல
என்னும்அது தெளிந்தீசர் அருள்கூட ஈறில்சிவ
நன்னெறியே பொருளாவ தெனஉணர்வு நாட்டுவார்'

என்ற பெரிய புராணச் செய்யுளைக் காண்க.

சைவ சமயத்தின் அணுக்கச் சமயமாம் வைணவச் சமய அடியார்களும், அப்பாலும் அடிச்சார்ந்த அடியார் கூட்டத்தவரே. நம்மாழ்வார் வைணவ சமயத்தினர் என்பதை எவரும் மறுக்க முடியாது. அவர் திருவாய் மலர்ந்த நூல் திருவாய்மொழி. அத்திருவாய்மொழி களில் ஒன்றான,

'இவளைப் பெறும்பரிசு இவ்வணங் காடுதல் அன்றந்தோ
குவளைத் தடங்கண்ணும் கோவைச்செவ் வாயும் பயந்த
கவளக் கடாக்களி றட்டபி ரான்திரு நாமத்தால் [னள்
தவளப் பொடிகொண்டு நீர்இட் டிடுமின் தணியுமே'

என்ற பாடலில், இறைவனது திருநீற்றின் மாண்பை எடுத்துக் கூறித் தாம் திருநீற்றுத் தொண்டராகும் உள்ளக் குறிப்பை உரைத்தருளினமையையும் காண்க.

முஸ்லிம் சமயத்தில் மஸ்தான் சாயபு அவர்கள் அகத்தீசர் சதகம், நந்தீசர் சதகம் பாடிய அன்பர் ஆவார். சவ்வாது புலவர், இராஜராஜேஸ்வரி பஞ்சரத்தின மாலை என்னும் நூலைப் பாடியுள்ளார். இவர்கள் யாவரும் புறச்சமயத்தவர்கள் அல்லரோ?

இத்தகைய அன்பர்களை உள்ளடக்கியே நம் நம்பியாரூரர், 'அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்' என்றார். அதற்கு ஏற்ற முறையில் சேக்கிழாரும் அத்தொடர்க்கு விளக்கம் கூறினர். ஆகவே, பெரிய புராணம் உலக நூல் என்பதில் இன்னமும் ஐயம் எழ இடன் உண்டா? இந்த உண்மையினைக் கருதி அன்றோ மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், தாம் பாடிய சேக்கிழார் பிள்ளைத் தமிழில் 'பார்கொண்ட தொண்டர் வரலாறு சொல் புராணம்' என்று அறிந்து கூறியுள்ளார்? ஆகவே, தொண்டர் புராணம் 'உலகெலாம் தழுவிய உன்னத நூல்' என்று கூறுவதில் ஐயம் எழ இடம் உண்டோ? 'உலக நூல்' என்று கூறுவதும் பொருத்தம்தானே?

பெரிய புராணம் உலகப் பொது நூல் என்பதை நாம் என்றும் மறவாது இருக்கும்பொருட்டே பாலறு வாயரின் முன் தோன்றலார், தாம் பாடிய நூலின் இறுதிச் செய்யுளை மிகமிகத் திறம்படப் பாடியுள்ளார். அப்பாடல் முன்னரே காட்டப்பட்டது.

அப்பாடலின் பொருள் என்னை? 'எல்லார்க்கும் நலம் உண்டாகப் பொதுவில் நடமிடும் கூத்தரசன்

புகழ் உலகம் எங்கும் நின்றது என்பதும், அக்கூத்தரசனது அடியவர்களின் வான்புகழும் எங்கும் நிறைந்தது என்பதும் அல்லவோ? இவ்வாறு ஆண்டவன் புகழும் அடியார் புகழும் உலகம் எங்கும் நின்று நிலவுவதால், மனத்தைச் சிதறவிடாமல் ஒப்பற்ற பொருளாகிய அன்பையே விரும்பி மேற்கொண்டு. மனம் தாழ் பொருள்களில் நாட்டங்கொள்ளாது உயர் பொருளில் நாட்டம் கொண்டு பற்றுக்கொண்டு ஓங்குமானல் இன்பம் என்றும் பெருகும் அன்ருே?

இப்பெரிய புராண இறுதிச் செய்யுள் ஒன்றே நம் சேக்கிழார் பெருமானுர் செம்மை சான்ற அறிவின் திறத்தை எடுத்துக் காட்டுவதாகும். நம் குன்றைக் கோமகனுர், பெரிய புராணம் 'உலக நூல், உலகெலாம் தழுவிய உன்னத நூல்' என்பதை நிலைநாட்டவே, இறைவனுக்குரிய திருப்பெயர்களாக உள்ள கங்கை வேணியன் என்ருே, மதிசூடிய மாணிக்கம் என்ருே, மாதொரு பாகன் என்ருே, மற்றும் பிறவாருே கூருது அப்பாடலில் அவனை மன்றுளார் என்று குறிப்பிட்டுள்ளார். மன்றுளார் என்பதன் உட்பொருள் யாது? பொது இடத்து இருப்பவர் என்பதன்ருே? பொது இடம் ஆயின் அஃது 'இன்னுர்க்கு உரித்து, இன்னுர்க்கு உரித்து அன்று' என்று இயம்ப ஒண்ணுமோ?

சன்மார்க்க ஞானமதில் பொருளும் வீறு
சமயசங்கே தப்பொருளும் தானென் ருகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்ட தில்லை
பகர்வரிய தில்லைமன்றுள் பார்த்த போதங்
கென்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
கன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
கண்டவுடன் ஆனந்தம் காண்டல் ஆகும்'

என்ற தவராச சிங்கமாம் தாயுமானரும் பொது இடத்தின் பொலிவினை எத்துணையளவு பொருத்தமுறக் கூறியுள்ளார் என்பதையும் கூர்ந்து கவனிக்க வேண்டாவா? இத்தகைய பெரியார்களின் கருத்துகளைத் தழுவி அன்றோ, இராமலிங்க வள்ளலாரும் 'எல்லார்க்கும் பொதுவில் நடம் இடுகின்ற சிவமே' என்று அருளிப் போயினர்.

நம் ஆண்டவன் சிறப்பாகச் சைவ சமயத்தவர்க்கே உரியவராயினும், பொதுவாக எச்சமயத்தவர்க்கும் அவனே இறைவனாக இருந்து அருள் செய்கிறான் என்பதுதான் உண்மை நூல்களின் துணிபாகும். நம் ஆளுடைய அடிகளாராம் மணிமொழியார், 'தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்றனர்.

ஆளுடைய அரசாம் அப்பர் பெருமானார்,

'விரிவிலா அறிவி னோர்கள் வேறொரு சமயம் செய்தே
எரிவினால் சொன்னா ரேனும் எம்பிராற்கு ஏற்ற தாகும்'

என்றனர். இவ்வாறு அப்பர் பெருமானார் கூறுதற்கும் தக்க காரணம் உண்டு. எல்லாச் சமயங்களையும் இறைவரே படைத்தவர் என்ற குறிப்பு,

'துணைநல் மலர் தூய்த் தொழும்தொண் டர்கள்சொலீர்
பணைமென் முலைப்பார்ப் பதியோ டுடன்ஆகி
இணையில் இரும்பூ ளையிடம் கொண்டஈசன்
அணைவில் சமண் சாக்கியம் ஆக்கிய வாறே'

என்ற திருஞானசம்பந்தரது அருள் வாக்கால் புலனாகின்றதன்றோ?

இன்னோரன்ன பெருமக்களின் பெருங் கருத்து களை உள்ளடக்கி அன்றே நமது அருணந்தி சிவாசாரிய சுவாமிகளும் 'தெள்ளத் தெளியத் தமது சீரிய நூலாம் சிவஞான சித்தியாரில்

'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகிஆங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்'

என்று பாடியுள்ளார்,

எல்லா உயிர்களிலும் நம் இறைவனே உள்ளான் என்பதை,

'உரைசேரும் எண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனி பேதம்
நிரைசேரப் படைத்த வற்றின்
உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்கோயில்
வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல
நடமாட வண்டு பாட
விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள்
கையேற்கும் மிழலை யாமே'

என்று பாடிய ஆளுடைய பிள்ளையாரது அருள் வாக்கை உணரும்போது அவ்வுயிர் இனங்கள் எந்நாட்டிலேனும், ம்மரபிலேனும், எச்சமயத்திலேனும் இருப்பினும் இறை அன்புபெற்றிருக்குமானல், இறை அன்புபெற்று இறைவனடி உற்றிருக்குமானல் அவை யாவும் அப்பா லும் அடிச்சார்ந்த அடியார் என்பதில் என்ன ஆசங்கை எழக்கூடும்?

உலகில் பலர் பலவகைப் புகழை எய்தினும் அடி யவர் எய்தும் புகழே வான்புகழ் எனப்படும், இத் தகைய வான்புகழ் பெற்ற அடியவர்கள் ஒன்று காத லித்து உள்ளம் ஓங்கப் பெற்றிடில், அவர்கட்கு என்றும்

இன்பம் பெருகும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? என்றும் இன்பமாவது இறை இன்பமே ஆகும். இதனை மணிமொழியார் வாக்காகிய,

'தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணுதே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும்
எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ'

என்ற திருவாசகப் பாடலைக்கொண்டே அறியலாம். இக்கருத்துக்கு அரண்செய்வதாகிய அப்பர் பெருமானுர் அருள் மொழியாம்:

'கைப்போது மலர்தூவிக் காதலித்து வானேர்கள்
முப்போதும் முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே'

என்பதையும் காண்க.

இந்த இன்பம், ஒரு பிறப்பில் மட்டும் ஒருங்கு இயைந்து இன்பம் தருவதன்று. எழுமையும் இயைந்து இன்பம் தருவது. இதனை,

'எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனிப் பழம்படு பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவன் எழுமையும்
மனக்கு இனியவன் தனதிடம் வலம்புரமே'

என்ற சுந்தரர் செந்தமிழ் உணர்த்துவதையும் உணர்வோமாக.

இவ்வாறுன என்றும் இன்பம் பெருக, அதனைத் துய்ப்பவர்கள் யார்? அவர்கள் மன்றுளார் அடியார்

கள் அல்லரோ? அவர்களே செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா அம்மலம் கழீஇயவர். அவர்களே மாலற நேயம் மலிந்தவர். அவர்களே திருநீறும் திருக்கண் மாலையும் திகழும் வேடத்தர். அத்தகைய சீரும் சிறப்பும் பேரும் புகழும் வாய்ந்த அடியவர்களின் வான் புகழும் மன்றுளார் தம்புகழும் உலகெலாம எங்கும் நின்று நிலவுவதுபோலத் தொண்டர் புராணமும் உடன் நின்று உலகு எங்கும் நின்று நிலவுகின்றதன்றோ ?

இறைவன் புகழோடு இயைந்த .வான்புகழுடைய உண்மை அடியவர்களே சீவன் முத்தர்கள்.

மேலே குறிப்பிட்ட சீவன் முத்தர்களையே நாம் இறைவனாகக் கருதி அவர்களை வணங்கவேண்டும். இக்கருத்தை எத்துணைப் பொருட்பொலிவு பொருந்த நம் மெய்கண்ட சிவாசாரியார், தம் மெய்ந்நூலாம் சிவஞான போதத்துள்,

'செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே'

என்று கூறியுள்ளார் பாருங்கள் !

இச்சிவஞானபோத இவ்வீற்று நூற்பா எந்த இலக்கியத்திற்கு ஓர் இலக்கணமாக அமைந்திருக்க வேண்டும் ? நம் உலகப் பொது நூலாகிய உலகெலாம் தழுவிய உன்னத நூலாகிய தொண்டர்களின் வரலாற்றைத் தொகுத்துக்கூறும் பெரியபுராணத்திற்கு அன்றோ இலக்கணமாக அமைந்திருக்கவேண்டும். இந்நூலில்

வரும் நாயன்மார்கள் சிவனடியாரையே தெய்வமாகக் கொண்டு பெறற்கரிய பேரின்ப நிலையினை உற்றுள்ளனர். ஆகவே, அச்சிவவேடப் பொலிவழகை உணர்த்தும் வாழ்த்துப் பாடலாம்,

'இடையறுப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்'

என்பதை நாவார உளமாரப் பாடி வாழ்த்தி இக் கட்டுரையினை முடிப்போமாக.

———

# 7. திருவாசகமும்,

## டாக்டர் ஜி. யூ. போப்பின் மொழிபெயர்ப்பும்

அமிழ்தினும் இனிய நந்தம் செந்தமிழ் மொழி நம்மவரால் மட்டும் போற்றப்பட்டு வந்திலது. பிற நாட்டவராலும், பிற சமயத்தவராலும் போற்றப்பட்டு வந்துளது. இங்ஙனம் போற்றப்பட்டு வந்தமைக்குக் காரணம், செந்தமிழ் மொழியின்பால் செறிந்துகிடக்கும் அரும்பெருங் கருத்தும், கவினுமே ஆகும். பிறநாட்டவரோ, சமயத்தவரோ செந்தமிழ் மொழியைப் போற்றியதோடு மட்டும் நின்றார்கள் இல்லை. நம் மொழிக்கு அரும்பெருந் தொண்டினையும் புரிந்துள்ளனர். அங்ஙனம் புரிந்தவர்களுள் கிறித்தவ நெறியினர்களையும் குறிப்பிடலாம். கிறித்தவர்களுள் நம் நாட்டவர்களும் உளர்; மேற்கு நாட்டவர்களும் உண்டு. மேற்கு நாட்டவர்கள் தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் அல்லர். அவர்கள் ஆங்கிலம், ஜர்மன், பிரஞ்சு முதலான மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். இங்கிலையில் அவர்கள் நந்தம் செந்தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களைச் செம்மையாகப் பயின்று, தேர்ந்து, தமிழ் நூல்களில் தம் உள்ளங்களைக் கவர்ந்த சிற்சில நூல்களை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்துத் தாம் பெற்ற இன்பத்தினைத் தமிழ் மொழியின் அருமை பெருமைகளைத் தம் நாட்டவர்களும், இனத்தவர்களும் அறிய மொழிபெயர்த்துத் தந்துள்ளனர். அங்ஙனம் தந்த மேற்கு நாட்டு அறிஞர்க

ளுள் ஒருவரே, ரெவரண்டு டாக்டர் ஜி. யூ. போப்பு ஆவார்.

போப்பு அவர்கள் ரெவரெண்ட் ஆதலின், போப் ஐயர் என்றும் அழைக்கப்பெறுவர். இவர் ஆங்கிலேயர்; தமது கிறித்தவச் சமயத்தைப் பரப்ப இந்தியாவுக்கு வந்தவர். அவர் வந்த காலத்தில் திகழ்ந்த மகா வித்துவான் இராமானுச கவிராயரிடம் தமிழ் மொழியைப் பயின்றார். இப்பயிற்சியின் காரணமாக ஆக்ஸ்பர்ட் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆசிரியராக அமர்த்தப் பட்டார். இவர் நாலடியார், திருக்குறள் ஆகிய இவ்விரு நூற்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார். தமிழ் இலக்கணத்தை மூன்று பகுதிகளாக எழுதியுள்ளார். தமிழில் தாம் சுவை எனக் கண்ட செய்யுட்களைத் தொகுத்து, 'தமிழ்ச் செய்யுட் கலம்பகம்' என்ற தொகுப்பு நூலையும் தொகுத்துள்ளார். புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை ஆகிய நூல்களில் உள்ள சில செய்யுட்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தந்துள்ளார். தமிழ் இலக்கியங்களைப்பற்றி ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை ஆங்கிலத் தாள்களில், மலர்களில் எழுதியுள்ளனர். இவற்றோடு, அழுது அழுது அடியடிக்கே அன்பு பூண்ட மணிவாசகப்பெருமான் திருவாய்மலர்ந்த திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பதும் நாம் பெரிதும் பாராட்டற்குரியதாகும். கிறித்தவ நெறியினராம் போப் அவர்கள், சிவநெறி நூலாகிய திருவாசகத்தை மொழி பெயர்க்க முன் வந்தனர் என்றால், அவ்வாசகத்தின் அருமை பெருமைகள் அவர் உள்ளத்தை அந்த அளவுக்கு ஈர்த்துள்ளன என்பது தெரிகிறது அன்றோ? திருவாசகம் என்னும் தேன், 'அல்லல் அறுத்து ஆநந்தம் ஆக்கியதே'

என்றும், 'வாதவூர் அண்ணல் மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேன்' என்றும், 'பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம் மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே வாசகம்' என்றும், 'நலமலி வாதவூர் நல்லிசைப் புலவன், மனம் நின்று உருக்கும் மதுர வாசகம்' என்றும் இந் நூலில் ஈடுபட்ட ஈடும் எடுப்பும் அற்ற இன்தமிழ்ப் புலவர்கள் இசைத்துள்ள இனிய மொழிகளை உணர்ந்த போப் அவர்களும் திருவாசகத்தைப் பயின்றபோது, இறவாத இன்ப அன்பை அறிந்து ஆனந்தமுற்றதனால் தான் இந்நூலை மொழிபெயர்க்க முற்பட்டனர்போலும்! திருவாசகத்தை 'முனிசிரேட்டரான மாணிக்கவாசகரின் தெய்விக மொழிகள்' என்பர் போப்.

இவர் திருவாசகத்தை மொழிபெயர்த்து வெளியிட்ட நாள் அவரது எண்பதாவது ஆண்டு தொடக்கமாகும். அதாவது, அவரது எண்பதாவது பிறந்த நாள். இதனை அவரே தம் மொழி பெயர்ப்பு முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். திருவாசக நூலை மொழிபெயர்த்தல் வேண்டுமென்ற உறுதி அவருக்கு இருந்தது என்பதை அவரது வாக்கியமே தெளிவாக்குகிறது. எப்படியும் இவ்வேலையைச் செய்துமுடிக்கவேண்டும் என்பது அவரது உறுதியான எண்ணம். போப் அவர்கள், பாலியல் கல்லூரி ஆசிரியர், தம்மை ஊக்கப்படுத்தித் திருவாசக மொழிபெயர்ப்பை முடிக்கச்சொன்ன விதத்தை நமக்கு அறிவிக்கும்போது, 'ஒரு நற்பெரும் செயலைச் செய்துகொண்டிருத்தலே நீண்டகாலம் வாழ்தற்கு வழி. அக்காரியம் முடியும் வரை நீங்கள் நலனுற வாழ்வீர்' என்று அவர் கூறியதாக எழுதி அறிவித்துள்ளார்.[1] இக்குறிப்புகளை

[1] Preface Page XIV.

அவரது முகவுரையில் காணலாம். இதனால் போப் அவர்கள் தமது பழுத்த வயதில் இந்நூலை மொழி பெயர்க்கத் தொடங்கினார் என்பது புலனாகின்றது. திருவாசகத்தைப் படித்தால் விரைவில் விண்ணுலகு புகுவர் என்று நம் நாட்டில் கருதி வரும் இம்முரணான கருத்துக்கு மாறாகப் போப் அவர்களின் திருவாசக மொழி பெயர்ப்பு, ஆயுள் வளரும் என்ற உண்மையை நமக்கு அறிவிக்கிறது என்பதை நாம் ஈண்டுக் கூர்ந்து கவனித்தல் வேண்டும். இது நிற்க.

நாம் ஈண்டு ஆராயவேண்டுவது போப் அவர்கள் தமது மொழி பெயர்ப்பில் திண்ணனார், சண்டேசுரர், காரைக்கால் அம்மையார், சிறுத்தொண்டர், சேக்கிழார் ஆகியோரைப்பற்றிய வரலாற்றை எம்முறையில் எழுதியுள்ளார் என்பதாகும். இக்கட்டுரையின் நோக்கம், பாரம்பரையாகக் கூறிவரும் வரலாற்றின் போக்கிற்குப் போப் எங்ஙனம் மாறுபடுகின்றார் என்பதை எடுத்துக் காட்டுவதாகும். அவ்வரலாறுகளில் போப் சிற்சிலவிடங்களில் மாறுபடுகின்றனரேயன்றி. முற்றிலும் மாறுபட்டிலர் என்பதை நாம் நினைவில் கொள்ளுதல் வேண்டும். முதலில் திண்ணனார் வரலாற்றைப் பார்ப்போமாக.

திண்ணனார் வேடர் மரபினர் என்பதே நாம் கண்ட உண்மை வரலாறு. சேக்கிழார் இதனை நன்கு தெளிவு படுத்தியுள்ளார். இவரை 'வனவேடர் பெருமானார்' என்று குறிப்பிட்டுள்ளனர். நக்கிரர் திண்ணனாரை நமக்கு அறிமுகப்படுத்தும்போது, 'பிறப்புப் பொத்தப்பி நாட்டு உடுப்பூர் வேடுவனும்' என்றும், 'தேன் அழித்து ஊன் உண்ணும் கானவர் குலத்தோன்' என்றும், தாம் பாடிய 'திருக்கண்ணப்பதேவர் திருமறத்தில்

பாடியுள்ளார். 'திருவேட் டுவர்தம் திருவடி கை தொழக், கருவேட் டுழல்வினைக் காரியம் கெடுமே' என்று கல்லாடனரும் தாம் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தில் சுட்டியுள்ளார். சிவப்பிரகாசரும், 'சிலை மறவர்குல திலகம்' என்றே குறிப்பிட்டுள்ளனர். ஆனல், போப் அவர்கள் திண்ணனுரை, 'உடுப்பூர் மன்னர்' என்றும், 'ஆயர் குலத்தினர்' என்றும் கூறுவர்.[1] உடுப்பூர் மன்னர் என்பது பொருந்துமே அன்றிக் கோவலர் மரபினர் என்பது பொருந்தாது. ஆனல், கோவலர் என்னும் சொல்லுக்கு அடுத்து இருபிறைக் குள் 'வேடர் மரபினன்' என்ற குறிப்பு உளது.

திண்ணனூர்க்கு இப்பெயர் அமைந்தமைக்குக் காரணம் அவரது உடல் பருமனும் நிறையும் ஆகும். இவ்வாறு இருந்தமையால் வேடர்கள் நாகனது குழந்தையைத் தூக்கித் திண் என்று இருந்தமையின், திண்ணன் என்று கூறினர். இதனைச் சேக்கிழார் கூறும்போது 'அண்ணலைக் கையில் ஏந்தற்கு அருமை யால் உரிமைப் பேரும் திண்ணனென் றியம்பும் என்ன திண்சிலை வேடர் ஆர்த்தார்' என்றனர். இதைப்பற்றி நக்கீரரோ, கல்லாடரோ யாதும் கூறிற்றிலர். ஆனல், போப் அவர்கள் திண்ணன் என்ற பெயர்க்குக் காரணம் கூறுகையில், 'பெருமிதம் மிக்க தந்தையார் தம் மகனைத் தம் தோளில் சுமந்து செல்வது வழக்கம். ஒருநாள் தம் மகன் சுமப்பதற்கு மிகவும் பாரமாக இருந்தமையி னல் திண்ணன் எனப் பெயர் இட்டனர்' என்று எழுதி யுள்ளனர்.[2] இதனல் நாகனே தம் மகனது நிறையும் உடல் கட்டையும் உணர்ந்து திண்ணன் என்ற பெயர் ஈந்தனன் என்பது புலனகின்றது.

---

[1] Page 141. [2] Page 141.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமது கண்ணப்பர்ச் சருக்கத்தில் கூறி இருப்பது, போப் அவர்களின் கருத்துக்குச் சிறிது இடம் தருவது போலக் காணப்படுகிறது. அதாவது. தத்தையாம் தாய் கொடுக்கத் தந்தையாம் நாகன் வாங்கும்போது திண் என்று இருந்தமையால் திண்ணன் என்று பெயர் சூட்டினன் என்பதாம்.

'பூங்குழல்வேல்நெடுங்கண்ணாள் புனலாட்டிப்புனைந்துதர
வாங்குசிலை மறவர்கோன் மணிமகனைத் தடக்கையால்
தாங்குபுதிண்ணென் றிருந்ததன்மையால்திண்ணன்எனத்
தேங்கியபேர் உவகையொடும் திருநாமம் சாத்தினான்'

என்பது சீகாளத்திப் புராணம். திருவாசக மொழி பெயர்ப்பில் தாம் பயின்ற நூல்களையும் நூல் ஆசிரியர்களைப் பற்றியும் தந்துள்ள குறிப்புகளில் போப் அவர்கள் சீகாளத்திப் புராணத்தையும், சிவப்பிரகாசரையும் குறிப்பிடாமை நோக்குதற்குரியது.[1] இதனால் திண்ணனார் வரலாற்றைக் கூறுகையில் அந்நூலைப் பயின்றிருப்பார் என்பதை எதிர்பார்க்க முடியாது. சிவப்பிரகாசரும், தொண்டர்சீர் பரவுவார் கருத்துக்கு மாறாகக் கூறி இருப்பது அவ்வளவு பாராட்டற்குரியது அன்று.

திண்ணனார்க்குக் காளத்தி மலையின் காட்சி தோன்றவே, தம்முடன் போந்த நாணனை நோக்கி, 'நாணனே! தோன்றும் குன்றில் நண்ணுவேம்' என்று கூறியதாகக் குன்றைக் கோமகனார் கூறியுள்ளார். சீகாளத்திப் புராணத்தில் திண்ணனார் வேட்டையாடிக் களைத்து ஒரு மரத்தடியில் உறங்கும்போது, இறைவர்

[1] See Lexican and concordance.

அவர் கனவில் தோன்றித் தம்மை வந்து வணங்குமாறு கூறியதாகக் கூறப்பட்டுளது. ஆனால், போப் அவர்கள், தம்முடன் போந்த பணியாளர்களில் ஒருவன் மலையினைக் கண்டு, 'அம்மலை உச்சியில் இறைவன் தலைமுடி (உச்சிக் குடுமி)யுடன் உளன். அத்தகைய ஆண்டவனைக் கண்டு வணங்கலாம்' என்று கூறினான் என எழுதியுள்ளனர்.[1] இவ்வாறு நக்கீரர் பாடலிலும், கல்லாடனார் பாடலிலும் குறிக்கப்படவில்லை. சேக்கிழார் கூறியது போலவும் அவ்விரு நூற்களில் காணப்படவில்லை.

இங்கிலையில், ஓர் அரிய குறிப்பினைக் கூறவேண்டியுள்ளது. நக்கீரரோ, கல்லாடரோ. போப்போ திண்ணனாருடன் இருந்தவர்கள் நாணன், காடன் என்ற பெயருடைய வேடவர்கள் என்பதைக் கூறிற்றிலர். சீகாளத்திப் புராணத்திலும் வேடர்கள் பெயர் இல்லை. ஆனால், பணியாளர்கள் இருந்தனர் என்பதை மட்டும் போப்பு அறிவிக்கின்றனர்.[2] சேக்கிழார் அப்பணியாளர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் நாணனும் காடனும் என்ற கருத்தில், 'ஏழுனை அடுசிலை விடலைகள் இருவர்கள் அடிபிரியார்' என்று கூறி, அவ்விருவர்கள் யாவர் என்பதைத் தெளிவிக்க, 'நாணனும் நெடுவரிவில் காடனும் எனும் இருவரும்' என்றனர்.

திண்ணனார் கொன்ற பன்றியை உடன்வந்த பணியாளர்களான நாணன், காடன் சுமந்து சென்றனர் என்பது சேக்கிழார் வாக்கு. 'அங்கே இங்கிது தன்னைக் கொண்டு போதுமின்' என்று திண்ணனார் கட்டளை இட்டதை அவர் குறிப்பிடுகின்றார். ஆனால், போப் ஐயர், திண்ணனாரே தாம் கொன்ற பன்றியைத் தாமே

[1], [2] Page 141

தோளில் சுமந்து சென்றனர் என்கிறார்.[1] திண்ணனாரைப் போப் அவர்களே முன்பு உடுப்பூர் அரசர் என்று கூறியுள்ளனர். இங்ஙனம் இருக்க, அரசராம் திண்ணனார் சுமந்து சென்றிருத்தல் பொருந்தாது. சுமந்தவர் திண்ணனாரே என்பதை மேலும் வற்புறுத்தும் முறையில் சுமந்து சென்ற பன்றியாம் சுமையினை ஓர் ஆற்றங் கரையை அடைந்து இறக்கினார்'[2] என்றும் எழுதியுள்ளார்.[2] அவ் ஆறு பொன்முகலி யாறு. அவ் ஆறு பொன்முகலி ஆறு என்பதை போப் கூறிலர்.

காளத்தி அப்பர் தம்மைத் தினமும் பூசித்து வந்த சிவகோசரியார்க்குத் திண்ணனாரின் மெய் அன்பைக் காட்டுதற்குத் தமது இரண்டாவது கண்ணிலும் குருதி ஒழுகும் காட்சியைத் தோற்றுவித்த நிலையில், திண்ணனார் தமது மற்றொரு கண்ணையும் தோண்டி, இறைவர் கண்ணில் அப்புதற்கு அம்பினைக் கண் அருகு வைத்தனர். அதுபோது, காளத்தியப்பர் தம் கரத்தால் 'நில்லு கண்ணப்ப; நில்லு கண்ணப்ப; நில்லு கண்ணப்ப' என்று கூறித் தடுத்துவிட்டனர். இதனைச் சேக்கிழார், 'திருக் காளத்தி அற்புதர் திருக்கை அன்பர் தங்கண்முன் இடக்கும் கையைத் தடுக்கமூன் றடுக்குநாக கங்கணர் அமுத வாக்குக் கண்ணப்ப நிற்க என்ற' என்று அறிவித்துள்ளனர். இவருக்குப் பின்வந்த சிவப்பிரகாசரும் தமது சீகாளத்திப் புராணத்தில் 'மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந்து அருட்பேராழி இறைவர் கண்ணப்ப நிற்க என மூக்கால் மொழிந்து' என்று கூறியுள்ளனர். இவ்விருவருக்கும் மிகப் பழையரான நக்கீரர் 'நில்லு கண்ணப்ப; நில்லு கண்ணப்ப, என் அன்

---

[1] Page 141. [2] Page 142.

புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப' என்று கூறி யிருப்பதுதான் மூலம் ஆகும். ஆனால், நமது போப் அவர்கள் திண்ணனே, நிற்க; என் மகனே, உன் கையை நிறுத்துக' என்று இறைவர் கூறினர் எனக் குறிப் பிட்டுள்ளனர்.[1]

அடுத்துச் சண்டேசுரநாயனர் வரலாற்றைப் போப் கூறியுள்ள முறையில் நாம் எந்தவித மாறுதல்களையும் காணமுடியாது. பெரிய புராணத்தில் உள்ளதுபோலவே எழுதியுள்ளார். இறைவர் சண்டேசுரரைத் தழுவி உச்சி மோந்து அவர் தலையில் தமது கொன்றை மாலை யைச் சூட்டினர் என்பதைச் சேக்கிழார் அறிவித்துள் ளனர். இதனை 'தொடுத்த இதழி சூழ்சடையார் துணைத் தாள் நிழற்கீழ் விழுந்தவரை எடுத்து நோக்கி, 'நம் பொருட்டால் ஈன்ற தாதை விழ எறிந்தாய், அடுத்த தாதை இனி உனக்கு நாம்என் றருள்செய் தணைத்தருளி, மடுத்த கருணை யால்தடவி உச்சி மோந்து மகிழ்ந்தருள' என்றும், 'அவர்பொன் தடமுடிக்குத் துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலைவாங்கிச் சூட்டினர்' என்றும் பாடியுள்ளார். இவ்வரலாற்றைப் போப் அவர்கள் அப் படியே எழுதியுள்ளார். அவர் கூறியவை, 'அப்பரம் பொருள் அவரைத் தம் தெய்வத் திருக்கரங்களில் எடுத்து அணைத்து, 'எம்பொருட்டு நின்னைப் பெற்ற தந்தையைத் தடிந்தனை. ஆதலால், இனி நாமே நின் தந்தை' என்று பகர்ந்து, அவரைத் தம் திருக்கரங்க ளால் தடவிக்கொடுத்து நெற்றியில் முத்தமிட்டனர், காட்சிதந்த இறைவர் தம் தலைமாலையாம் கொன்றை யினை எடுத்து இவ்விளமுனிவர்க்குச் சூட்டினர்' என்பர்.[2]

---

[1] Pagc 145. [2] Psge 187.

இங்கு இரண்டு சிறு வேறுபாடுகள் உள. ஒன்று, சேக்கிழார் உச்சி மோந்து என்பதை, நெற்றியில் முத்தம் இட்டு என்பது. மற்றொன்று, சண்டேசுரரை முனிவர் என்றது.

இறைவர் சண்டேசுரருக்கு முடிமாலை சூட்டித் திருவருள் புரிந்ததை இன்றும் கங்கைகொண்ட சோழபுரக் கோயில் சிற்பங்கள் ஒன்றில் காணலாம்.

காரைக்கால் அம்மையார் வரலாற்றைப் போப் தமது திருவாசக மொழிபெயர்ப்பில் எங்ஙனம் நுழைத்துள்ளார் என்பதைச் சிறிது ஆய்வோமாக.

திருவாசகத்தில் 'ஓர்ஒருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான் சீர்ஒருகால் வாய்ஓவாள்' என்று தொடங்கிச் செல்லும் பாடல் உண்டு. இதில் 'ஓர் ஒரு கால்' என்னும் தொடரில் உள்ள 'கால்' என்னும் சொல்லிற்குப் பொழுது என்ற காலத்தைக் காட்டும் பொருளைக் கூறியதோடு நில்லாமல், அந்தக் கால் என்னும் மொழி இருபொருள் அமையப் பாடப்பட்டிருப்பதாகப் போப் அவர்கள் உளங்கொண்டு, அச்சொல்லிற்குக் காரைக்கால் அம்மையார் என்று பொருள் கொண்டு அவ்வம்மையார் சரித்திரத்தை எழுதியுள்ளனர்.[1]

'ஓர் ஒருகால்' என்று தொடங்கும் பாடலை மொழிபெயர்த்த இடத்துத் தலைப்பாக 'The Lady of Karaikal'[2] என்றும் குறித்துள்ளனர். இந்தக்கருத்தை மேலும் வலியுறுத்தத் திருவாசகத்தில் தெள்ளேணத் தலைப்பின் கீழ் வரும் 'கறங்கோலை' என்று தொடங்கும் பாடலின் மூன்றும் நான்காம் அடிகளாகிய 'மறந்தேயும் தன்

[1], [2] Page 111.

கழல்நான் மறவாவண்ணம் நல்கியஅத் திறம்பாடல் பாடி, நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்ற பாடலையும் மேற்கோள் காட்டி, அவ்வடிகளில் காரைக்கால் அம்மையாரைப்பற்றிய குறிப்பே அமைந்திருப்பதாக உறுதிசெய்துகொண்டு எழுதியுள்ளார்.[1]

இங்ஙனமெல்லாம் போப் அவர்கள் கருதி எழுதி இருக்கின்றமைக்குக் காரணம், அவர் உள்ளத்தில் காரைக்கால் அம்மையார் இறைவனை நோக்கி வேண்டிய வேண்டுகோள் இன்னது என்பதைச் சேக்கிழார்,

'இறவாத இன்ப அன்பு
வேண்டிப்பின் வேண்டு கின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும்
பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும்
வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும் போதுன்
அடியின்கீழ் இருக்க என்றார்'

என்று பாடிய பாட்டின் பொருளும், அம்மையார் உற்ற பேரின்ப நிலையினைக் குறிக்கும்போது, 'குலவிய தாண்டவத்தில் அவர், எடுத்தருளும் சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றார்' என்றும் பாடிய வரிகளின் கருத்தும், போப் அவர்களின் உள்ளத்தில் நன்கு பதிந்திருந்ததானால், திருவாசக அடிகட்கும், தொடர்க்கும் காரைக்கால் அம்மையாரை இயைத்து வலிந்து பொருள் கண்டுள்ளார். இங்குக் காரைக்கால் அம்மையாரைக் குறிப்பிட்டிருப்பது அத்துணைப்பொருத்தமே இல்லை.

---

[1] Page 111.

இதுவரையில் திருவாசகத்தை ஆய்ந்த அறிஞர்கள் எவரும் காரைக்கால் அம்மையாரைப் பற்றிய குறிப்புத் திருவாசகத்தில் இருப்பதாகக் கூறிற்றிலர். ஒருசிலர் சுந்தரரைப்பற்றியும், சம்பந்தரைப்பற்றியும் திருவாதவூரர் குறிப்பிட்டிருக்கிருர் என உளங்கொண்டு, 'ஓத உலவா ஒரு தோழன்' என்ற தொடரையும், 'கழுமலம் அதனில் காட்சி கொடுத்தும்' என்னும் இத்தொடரையும் எடுத்துக் கூறுவது உண்டு. இத்தொடர்கட்குரிய பொருள் முறையே சுந்தரரையும், சம்பந்தரையும் குறிப்பது அன்று என்பதை யான் தக்க சான்றுகளுடன் விளக்கி இருப்பதை, எனது 'பொய்யடிமை இல்லாத புலவர் யார்?' என்னும் ஆய்வு நூலில் பரக்கக் காணலாம்.

போப் அவர்கள் காரைக்கால் அம்மையாரைப் பற்றிய குறிப்பு இருப்பதாக எண்ணியுள்ள பாடல்களில் நங்கைமாரது பொதுச்செயல் புலப்படுகிறதே அன்றிக் காரைக்கால் அம்மையாரைப்பற்றிய சிறப்புச் செயல் புலப்படவில்லை. என்ருலும், போப் அவர்கள் எம்முறையில் காரைக்கால் அம்மையார் வரலாற்றைக் கூறியுள்ளனர் என்பதையும் இங்குக் காண்போமாக.

போப் அவர்கள் காரைக்கால் அம்மையாரிடத்துப் பெருமதிப்புக் கொண்டிருந்தனர். அவர் காரைக்கால் அம்மையார் என்ற பெயரை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, 'காரைக்கால் தாய்' என்று குறித்துச் சென்றனர். [1]

'காரைக்கால் அம்மையார் பேயாக மாறினர். அவர்க்கு ஆலங்காடு உறைவிடமாயிற்று' என்பர். [2]

---

[1] Page 111. [2] Page 113.

மேலும், 'காரைக்கால் என்பது பிரெஞ்சுக்காரர் ஆதிக்கத்தில் உள்ள ஒரு சிறு நகரம், இது தஞ்சைக்கு நாற்பத்தேழு கல் தொலைவில் உள்ளது. அதனருகு புகழ் வாய்ந்த ஆலங்காடு (வடாரண்யம்) உளது. அஃது ஆலமரங்கள் நிறைந்த காடு. அங்கு அம்மையாரின் கோவில் இன்னமும் இருக்கிறது' என்று எழுதியுள்ளனர்.[1] ஆலங்காட்டை வடாரண்யம் என்று இரு பிறைக்குள் அடைத்துக் கூறியிருப்பது வடமொழியில் அவ்வாறு வழங்கப்பட்டது என்பதை நாம் நன்கு உணர்தற்காகவே ஆகும். ஆனால், தஞ்சைக்கு நாற்பது கல் தொலைவில் உள்ளது என்று குறிப்பிடும் குறிப்புப் பொருத்தமாக இல்லை.

அம்மையார் பேய் உருவம் பெற்றதும், கயிலை நண்ண எண்ணினார் என்பதும், அவ்வெண்ணத்தை நிறைவேற்றச் செல்லவும் தொடங்கினார் என்பதும் சேக்கிழார் அறிவிக்கும் செய்திகள் ஆகும். 'எயில்ஒரு மூன்றும் முன்னாள் காய்ந்தவர் இருந்த வெள்ளிக் கைலை மால் வரையை நண்ண, வாய்ந்தபேர் அருள்முன் கூர வழிபடும் வழியால் வந்தார்' என்றும், 'படரொளிக் கைலைவெற்பின் பாங்கணைந்து' என்றும், 'சங்கரன் இருந்தவெள்ளி மலையின்மேல் ஏறும்போது' என்றும் குன்றை ஆளியார் கூறுமாற்றை அறிக.

திருவாலங்காடு என்பது தொண்டை நாட்டில் உள்ளதே அன்றிச் சோழ நாட்டில் உள்ளது அன்று. அம்மையார் இன்பப் பேறுபெற்ற இடம் தொண்டை

---

[1] Page 112.

நாட்டுத் திருவாலங்காடே ஆகும். இதுவே வடமொழி யில் 'வடாரண்யம்' என்று வழங்கப்பட்டதாகக் கூறுவர். இது சென்னைச் சென்ட்ரல் இரயில் நிலையத்தி லிருந்து அரக்கோணம் செல்லும் இரயில் பாதையில் உள்ள இரயில் நிலையங்களில் ஒன்று. திருவாலங்காடு என்பதே அந்த இரயில் நிலையத்திற்குப் பெயர். அவ் ரயில் நிலையத்திலிருந்து வடகிழக்கே மூன்று கல் தொலை வில் இத்தலம் உளது. இஃது இரத்தின சபையுள்ள இடம். காளியம்மையுடன் நடராசப்பெருமான் ஊர்த்து வத்தாண்டவம் புரிந்த தலம். 'ஆடினார் காளி காண ஆலங்காட்டடிகளாரே' என்று அப்பர் பெருமானார் இத் தலத்துப் பதிகத்தில் பாடியுள்ளார். இதனால்இறைவர் திருப்பெயர் 'ஊர்த்துவ தாண்டவர்' என்று கூறப்படு கிறது. தேவர் சிங்கப்பெருமான் என்ற பெயரும் இவ ருக்கு உண்டு. இதனைச் சுந்தரர் இத்தலத்தைப் பாடிய பாடலுள், 'சிவனே தேவர் சிங்கமே' என்று குறிப்பிட் டிருப்பதைக் காண்க. தேவியார் திருப்பெயர் வண்டார் குழலி அம்மை என்பது. எத்தலத்திலும் நடராசப் பெருமான் பக்கலில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் திருவுரு வங்கள் இருப்பது மரபு. இவ்விடத்தில், 'அறவா நீ ஆடும்போது உன் அடியின்கீழ் இருக்க' என்று காரைக் கால் அம்மையார் கேட்டுக்கொண்டதற்கு இணங்க இவ்வம்மையார் திருவுருவம் அப்பெருமான் பக்கலில் உள்ளது. இத்திருவாலங்காட்டிற்கு முக்கால்கல் தொலை வில் பழையனூர் என்னும் பெரிய கிராமம் உள்ளது. நடராசப்பெருமான் ஒவ்வோர் ஆண்டும் பங்குனி உத்திர நட்சத்திரத்தன்றும், மார்கழித் திருவாதிரை அன்றும் இங்கு எழுந்தருளுகின்றனர். திருஞானசம்பந்தர் திருவா லங்காட்டினை நெருங்கியபோது, அத்தலம் அம்மையார்

தம் திருத்தலையால் நடந்து சென்றது ஆதலின், அத் தலத்தினை மிதிக்க அஞ்சி, திருஆலங்காட்டிற்கு அருகில் தங்கினர். இங்ஙனம் தங்கிய செய்தியினைச் சேக்கிழார், 'அம்மைதிருத் தலையாலே நடந்து போற்றும் அம்மை அப்பர் திருவாலங் காடாம் என்று, தம்மை யுடையவர் மூதூர் மிதிக்க அஞ்சிச் சண்பைவரும் சிகாமணியார் சாரச் சென்று, செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர் செழும்பதியில் அன்றிரவு பள்ளி சேர்ந்தார்' என்று பாடியுள்ளனர். மேலும், இதனை வற்புறுத் தும்பொருட்டு, 'சென்றணைந்தார் பழையனூர்த் திரு வாலங்காட்டருகு' என்றும் குறித்துள்ளார். இந்தக் குறிப்புகளை மேலும் உறுதியுடன் உணரவேண்டித் திருஞானசம்பந்தர் தமது தொண்டைநாட்டு யாத்திரை யின்போதுதான் தொண்டை நாட்டுத் தலங்களை முறையே வணங்கிக்கொண்டு திருவாலங்காட்டை அடைந்தார் என்பதை அழகுற, 'திருவிற் கோலமும் பணிந்து .... .... விருப்பினொடும் திருவூறல் மேவினர் தமைப்பணிந்தார்' என்பதை அறிவித்த பின்பே, 'சென் றணைந்தார் பழையனூர்த் திருவாலங் காட்டருகு' என்று சேக்கிழார் செப்பியுள்ளனர். இத்தொண்டை நாட்டுத் திருவாலங்காடு பழையனூரை இணைத்தே பேசப்பட்டிருப்பதை மூவர் முதலிகளின் பாடல்களில் விளக்கமுறக் காணலாம். 'பழையனூர் ஆலங்காட் டடிகளே' என்று தோணிபுரத் தோன்றலாரும், 'அன் னலம் பழனை மேய ஆலங்காட் டடிகளே' என்று தாண் டக வேந்தரும், 'பழையனூர் மேய அத்தா ஆலங்காடா' என்று சுந்தரரும் பாடியுள்ளனவற்றைக் காண்க.

சம்பந்தர் திருவாலங்காட்டிற்குச் செல்லாது, இறைவனைப் பாடாது ஆலங்காட்டிற்கு அருகே இரவு

தங்கியபோது, ஆலங்காட்டு அப்பர் சம்பந்தர் கனவில் தோன்றினர் என்றும், தம்மைப் பாடுமாறு தூண்டினர் என்றும் சேக்கிழார் குறிப்பிடும்போது, 'பள்ளிகொள் ளும் மறையவனர் தம்முன்பு கனவிலே வந்து, 'ஆல வனத்து அமர்ந்தருளும் அப்பர் தம்மை அயர்ந்தனையோ பாடுதற்கு என்று அருள்செய்யப் புகலிவேந்தர், வேலை விடம் உண்டவர்தம் கருணை போற்றி மெய்யுருகித் திருப்பதிகம் விளம்பலுற்றார்' என்று பாடியுள்ளார். இந்தக் குறிப்பு ஞானசம்பந்தரது திருவாக்காகிய 'துஞ்சவருவாரும் தொழுவிப் பாரும் வழுவிப்போய் நெஞ்சம் புகுந்து என்னை நினைவிப்பாரும்' என்ற பாடலே உணர்த்தி நிற்கிறது. இதுவே,காரைக்கால் அம்மையார் திருஞானசம்பந்தர்க்கு முன் இருந்தவர் என்பதற்குப் போதிய சான்றாகும்

இவ்வாறெல்லாம் அகப்புறச் சான்றுகளால், திரு வாலங்காடு என்பது தொண்டைநாட்டுத் திருவாலங் காடே ஆகும் என்பதும், அங்குத்தான் காரைக்கால் அம்மையார்க்குத் திருவுருவம் உண்டு என்பதும் காணக் கிடத்தலின், போப் அவர்கள் தம் மொழிபெயர்ப்பில் தஞ்சையிலுள்ள தலம் என்றும், அங்குத்தான் அம்மை யார் உருவமுள்ளது என்றும் கூறுவது பொருத்தமாகக் காணப்படவில்லை. ஆனல், போப் எங்ஙனம் இவ்வாறு மயங்குமாறு குறிப்புத்தந்தனர் என்பதைச் சிந்திப்பின், போப் அவர்கள் திருவாலங்காடு, திருத்தலை ஆலங்காடு என்ற இவ்விரண்டு திருப்பதிகளும் வெவ்வேறு என் பதை உணராமையே ஆகும். திருத்தலை ஆலங்காடு என்றதும், அம்மையார் திருத்தலையாலே நடந்த கார ணத்தால் அப்பெயர் பெற்றதாக எண்ணித் திருத்தலை

ஆலங்காட்டையே திருவாலங்காடாகக்கொண்டு குறிப்புத் தந்துவிட்டனர் போலும்!

திருத்தலை ஆலங்காடு தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த சோழநாட்டுப் பதிகளில் ஒன்றாகும். இது கொரடாச்சேரியில் இருந்து ஆறு கல் தொலைவில் உள்ளது. இதனைக் குழித்தலை இரயில் அடியில் இருந்து வடக்கே மட்சாலையில் நடந்து ஆற்றை ஓடத்தால் கடந்து நான்கு மைலுள்ள வைணவத்தலமாம் திருக்கண்ணமங்கையைக் கண்டு களித்து அங்கிருந்து மேற்கே ஒரு கல் தொலைவில் உள்ள திருக்கரவீரத் தலத்தை வணங்கிக் கொண்டு அங்கிருந்து வடமேற்கே மட்சாலையில் ஒன்றரைக் கல்லில் உள்ள திருப்பெருவேளூரையும் கண்டு இன்புற்று, அங்கிருந்து மேற்கே மட்சாலையில் இரண்டு கல் கடந்தால் திருத் தலைஆலங்காட்டை அடையலாம்.

இத்தலத்து இறைவர் ஆடவல்ல வரதர் என்றும், தேவியார் திருமடந்தை என்றும் கூறப்பெறுவர். இத்தலத்தில் காரைக்கால் அம்மையார் உருவம் தனித்த முறையில் இருப்பதான குறிப்பே கிடையாது. இத்தலமும் தொண்டைநாட்டுத் தலமும் வேறு வேறு என்பதை நன்கு தெரிவிக்கவே, 'தலையாலங் காடன் தன்னை' என்றே அப்பர் பாடுகிறார். தொண்டைநாட்டுத் தலத்தைப் 'பழனை மேய ஆலங்காடு' என்பர். பழனை என்பது பழையனூர் என்பதன் மரூஉ மொழி ஆகும்.

போப் அவர்கள் மேலும் சில குறிப்புகளை அம்மையாரைப்பற்றி எழுதுகின்றனர். அதாவது, அம்மையார் கணவனால் தாம் பிரிக்கப்பட்ட நிலையினை உணர்ந்த

தும், காட்டில் தாம் ஒரு கோயில் அமைத்துக்கொண்டு இரவும் பகலும் இறைவனைத் தொழுது வாழ்ந்தனர் என்பது.[1]

சேக்கிழார் தம் வாக்கில், அம்மையார் கணவனது தொடர்பு நீங்கியது என்பதை உணர்ந்ததும், இறைவனை வேண்டிப் பேய் உருப்பெற்றனர் என்றும், நேரே கயிலை நண்ணப் புறப்பட்டனர் என்றும், அங்கிருந்து இறைவன் கட்டளைப்படி திருவாலங்காட்டினை உற்றனர் என்றும் கூறினரே அன்றிக் காட்டில் கோயில் கட்டி அங்கு வந்தனை வழிபாடு ஆற்றினர் என்று கூறினார் அல்லர். 'ஈங்கிவன் குறித்த கொள்கை இது இனி இவனுக் காகத், தாங்கிய வனப்பு நின்ற தசைப் பொதி கழித்துஇங்கு உன்பால், ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடிவு அடியே னுக்குப் பாங்குற வேண்டும் என்று பரமர்தாள் பரவி நின்றார்' என்றும், 'மன்றுள் ஆடுவார் அருளினாலே .... ... பேய் வடிவம் ஆனார்' என்றும், 'கைலை வெற்பின் பாங்கு அணைந்து ஆங்குக் காலின் நடையினைத் தவிர்ந்து பார்மேல் தலையினால் நடந்து சென்றார்' என்றும், 'குலவு தென்திசையில்' என்றும், 'நீடுவாழ் பழனமூதூர் நிலவிய ஆலங் காட்டில் ஆனந்தம் சேர்ந்து எப்போதும் பாடுவாய் நம்மை என்றார்' என்றும், 'திருஆலங் காடாம் நற்பதி தலையினாலே நடந்து புக்கடைந்தார்' என்றும் பாடி நமக்கு அறிவித்திருப்பதைக் காண்க. அடுத்ததாகச் சிறுத்தொண்டர் வரலாற்றுக் குறிப்பினைக் காண்போமாக.

---

[1] Page 113.

சிறுத்தொண்டரது இயற்பெயர் பரஞ்சோதியார் என்பது. இவர் சிறந்த வீரரும், தானைத்தலைவரும் ஆவர். இவர் வாதாபி நகர்க்குச் சென்று புலிகேசியுடன் பொருது அவனை வென்றும் உள்ளனர். இதனைச் சேக்கிழார 'மன்னர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வாதாபித் தொன்னகரம் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப் பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும் இன்னன எண்ணில கவர்ந்தே இகலரசர் முன் கொணர்ந்தார்' என்று குறிப்பிட்டுள்ளார். இந்த இடத்தில் போப் அவர்கள் தெளிவுறக் கூருமல், 'ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் தம் மன்னர்க்காகப் பெருவெற்றியினைப் பெற்றனர்' என்பர்.[1] பரஞ்சோதியார் இரண்டாம் புலிகேசியுடன் பொருது வென்றதை வரலாற்று ஆசிரியர்கள் யாவரும் ஒருங்கே மொழிந்துள்ளனர். இத்துடன் வாதாபி நாட்டுக் கல்வெட்டிலும் இச்செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

சிறுத்தொண்டர் தம் திருமகனை ஐந்து வயதில் இறைவனது தூய நூல்களைப் பயிலப் பள்ளிக்கு அனுப்பினர் என்று போப் குறிப்பிட்டனர்.[2] சேக்கிழார், 'சிந்தைமலர் சொல்தெளிவில் செழுங்கலைகள்பயிலத்தம் பந்தமற வந்தவரைப் பள்ளியினில் இருத்தினுர்' என்றனரே அன்றி, இறை நூல்களைப் படிக்க வைத்தனர் என்று குறிப்பிட்டார் அல்லர்.

சேக்கிழார் சிறுத்தொண்டர் வரலாற்றில்,இறைவர் முதலில் நாயனுர் இல்லம் போந்து அவர் இல்லாத காரணத்தால் கணபதீச்சரத்தில் தாம் தங்கி இருப்பதாகக்கூறுமாறு சொல்லிச் சென்றுவிட்டனர் என்கிறுர்.

[1], [2] Page XXXVIII.

இந்தக் குறிப்புப் போப்பையர் வரைந்துள்ள வரலாற்றில் இல்லை. ஆனால், பைரவர் ஆலமரத்தடியில் இருந்த போது அவ்வழகிய அன்பர் சென்று கண்டனர் என்பது மட்டும் உளது.[1]

பைரவர் ஆத்தியின்கீழ் இருந்தார் என்ற குறிப்பே சேக்கிழார் வாக்கில் உளது. 'கணபதீச்சரத்தின்கண் வண்ணமலர் ஆத்தியின் கீழ் இருக்கின்றோம்' என்பது சேக்கிழார் வாக்கு. போப்அவர்கள் ஆலமரம் என்றனர்.[2]

போப்பவர்கள் சிறுத்தொண்டர் வரலாற்றைச் சேக்கிழார் நூல்கொண்டு நன்கு அறிந்துள்ளார் என்பது அவர் கூறிவரும் இடங்களில் வரும் ஆங்கில மொழி பெயர்ப்புகளால் நன்கு விளங்குகிறது. அது. 'My son cannot help us in this' என்பது. 'இப்போது உதவான் அவன்' என்னும் சேக்கிழாரது அடியின் மொழிபெயர்ப்பாகும். இறைவர் சிறுத்தொண்டர்க்குக் காட்சி கொடுத்ததைத் தொண்டர்சீர் பரவுவார் குறிப்பிடும்போது. 'மறைந்த அவர்தாம் மலைபயந்த, தையலோடும் சரவணத்துத் தனையரோடுந் தாம் அணைவர்' என்று பாடியுள்ளார். இத்துடன் இன்றி,

'கொன்றை வேணியன் தாமும்
பாகம் கொண்ட குலக்கொடியும்
வென்றி நெடுவேல் மைந்தரும்தம்
விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார்
நீடும் மகனார் தாதியார்
என்றும் பிரியா தேஇறைஞ்சி
இருக்க உடன்கொண் டேகினார்.

என்றும் பாடியுள்ளார்,

[1] Page XXXVIII, [2] Page XXXIX

இக் கருத்துகளைப் போப்பவர்கள் உளத்தில் கொண்டு, 'சிறுத்தொண்டரும், அவர் தம் மனைவியாரும், திருமகனும், பணிப்பெண்ணும் கயிலைக்கு இறைவனால் அழைத்துச் செல்லப்பட்டனர்' என்றனர். [1]

போப்புக் குறிக்கும் Nurse எனப்பட்டவர் சிறுத்தொண்டர் இல்லத்தில் பணிபுரிந்த மாதரார் ஆவார். அவர் பெயர் சந்தனத்தார் என்பது. இதனைச் சேக்கிழார், 'சந்தனத்தார் எனும் தாதியார்தாம்' என மரியாதைப் பன்மை தந்து குறிப்பிட்டுள்ளனர். சிறுத்தொண்டரின் தொண்டு இம் மாதரார் துணையினால் முற்றுப்பெறுகிறது. நாயனாரும் அவர்தம் மனைவியரும் தலைக்கறி உதவாது என்று ஒதுக்கிவிட்டனர். அதனையும் பக்குவப்படுத்தி நாயனாரும் மனைவியாரும் அறியாவண்ணம் சமைத்துவைத்த பெருமை சந்தனத் தார்க்குண்டு. உணவு உண்ண வந்த பைரவர் தமக்கு முன்னே படைக்கப்பட்ட கறிவகைகளுள் தலைக்கறி இல்லாமை உணர்ந்து 'அஃது எங்கே?' என்று வினவ, நாயனார் 'அது உதவாதே' என்ற காரணத்தால் ஒதுக்கிவிட்டமையின் இன்னது செய்வது என்பது தெரியாமல் திகைத்து நிற்கையில், தாதியார் அதனை எடுத்துக் கொடுக்க முகமலர்ந்தனர். இந்த நிலையினைக் குறிப்பிடவந்த சேக்கிழார்,

'சிந்தை கலங்கிச் சிறுத்தொண்டர் மனையா
ரோடும் திகைத்துஅயரச்
சந்தனத்தார் எனும்தாதியார்தாம்
அந்தத் தலைஇறைச்சி

[1] Page XXXIX

வந்த தொண்டர் அமுதுசெயும் பொழுது
நினைக்க வரும்என்றே
முந்த அமைத்தேன் கறிஅமுதுஎன் றெடுத்துக்
கொடுக்க முகம்மலர்ந்தார்'

என்று பாடியுள்ளார். இத்தகைய அருமை பெருமைகட்குக் காரணரான சந்தனத்தார் பெயரைப் போப் குறிப்பிட்டிலர். ஆனால். பணிப்பெண் என்றுதான் குறிப்பிட்டனர்.[1] தலைக்கறியை, வந்த பைரவர் கேட்டதையும் குறிப்பிட்டிலர். இறுதியாகச் சேக்கிழார் வாழ்க்கைக்குறிப்பு போப்பின் மொழிபெயர்ப்பில் எந்நிலையில் அமைந்துள்ளது என்பதையும் உணர்வோமாக.

சேக்கிழார் அனபாயசோழனது முதல் அமைச்சர். அரசன் சீவகசிந்தாமணியில் தோய்ந்திருப்பதையறிந்து அவனது உள்ளம் சிவனடியார்களின் வரலாற்றில் ஆழ்ந்து இருத்தல் வேண்டும் என்று அடியார்களைப் பற்றிய குறிப்புகள் அடங்கிய சுந்தரர் பாடிய திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிகளைப் பற்றிக் கூறினார். அவற்றில் உள்ள அடியார்களின் வரலாற்றைத் தெளிவுற உரைத்தார். இந்தச் செய்திகளை உமாபதி சிவாச்சாரியர் பாடியுள்ள திருத்தொண்டர் புராண வரலாற்று நூலில்'சிந்தாமணிக்கதையை மெய்யென்று வரிசைகூற உளம் மகிழ்ந்து பலபடப் பாராட்டிக் கேட்க' என்று அரசன் சிந்தாமணியில் ஈடுபட்டதை அறிவித்தனர். சேக்கிழார்,மன்னனைச் சிவனடியார்வரலாற்றில்ஈடுபடச் செய்ததை 'உபயகுலமணிவிளக்காம் சேக்கிழார் கண்டு, இளவரசன் தனைநோக்கிச் சமணர்பொய்ந் நூல் இது,

[1] Page XCV.

மறுமைக்கு ஆகாது இம்மைக்கும் அற்றே, வளம் மருவு கின்ற சிவகதை இம்மைக்கும் மறுமைக்கும் உறுதிஎன' என்றும் அடியார் வரலாற்றை விளக்கிச் சொல்லத் திருத்தொண்டத்தொகை, திருத்தொண்டர் திருவந் தாதி ஆகிய இவ்விரு நூற்களையும் துணையாகக்கொண் டார் என்பதைச், 'சேக்கிழார் குரிசில் உரைசெய்வார், ஞாலத்து அம்பலவர் திருத்தொண்டர் பெருமை ஆரூர் அடிகள் முதல் அடி எடுத்துக் கொடுக்க நாவல் நம்பி பதினொரு திருப்பாட்டாகச் செய்த நலமலி தொண்டத் தொண்டத்தொகைக்கு நாரையூரில், தும்பிமுகன் பொருள் உரைக்க நம்பிஆண்டார் சுருதி மொழிக் கலித் துறை அந்தாதி செய்தார்' என்றும், வரலாற்றை வளவன் கேட்டான் என்பதை 'தில்லைவாழ் அந்தணரே முதல்பண் பாடு திருநீல கண்டத்துப் பாணர்ஈருச் சொல்லிய தொண்டத்தொகை நூல் வகை அந்தாதித் தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன் கேட்டு' என்றும் மொழிந்திருப்பதைக் காணலாம்.

இங்ஙனம் இருக்கப் போப் அவர்கள், 'திருத்தொண் டத்தொகையும், திருவந்தாதியும் கொணரப்பட்டன என்றும், அவற்றைத் தானே படித்துச் சிவனடியார் களின் வரலாற்றை மகிழ்வுடன் உணர்ந்தனன் என்றும் எழுதியுள்ளார். [1]

தில்லைக்கூத்தப்பெருமான், சேக்கிழார் தொண்டர் புராணம் பாட எடுத்துக் கொடுத்த தொடர் 'உல கெலாம்' என்பதே அன்றி, 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்பதன்று. இதனைத் தெளிவாக 'மன்றினில் ஆடுவார் திரு அருளினால் அசரீரி வாக்கு,

[1] Page XCV.

'உலகெலாம்' என அடி எடுத்து உரை பெய்த பேர் ஒலி ஓசை மிக்கு, இலகுசீர் அடியார் செவிப்புலத்து எங்கும் ஆகி நிறைந்ததால்' என்று உமாபதி சிவனாரும், 'ஏர்மேவு ஞானசபை இறைவர்தம் மேனியின் இணங்குற எழுப்பு உலகெலாம் என்னும் மறையாதியாக் கொண்டு' என்று மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் தமது சேக்கிழாரப் பிள்ளைத்தமிழ் நூலில் எடுத்து மொழிந்துள்ளார். ஆகவே, 'உல கெலாம்' என்னும் தொடரைத் தம் நூலின் தொடக் கத்தில் வைத்துப் பாடினார் சேக்கிழார். இவை புறச் சான்றுகள் என்று ஒதுக்கினாலும், சேக்கிழார் இந்த உலகெலாம் என்னும் மெய்ம்மொழித் தொடரைத் தம் நூலின், முன்னும் இடையிலும் இறுதியிலும அமைத் துப் போற்றிப் புகன்று இருக்கின்றனர், பாலருவாயர் பல்லக்கில் ஏறியபோது, 'அஞ்செழுத்து ஓதி ஏறினார் உய்ய உலகெலாம்' என்று இடையில் அமைத்ததையும், 'மன்றுளார் அடியார் அவர் வான்புகழ், நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்' என்று பெரிய புராண ஈற்றுச் செய் யுளின் இறுதியில் அமைத்து இருப்பதையும் கொண்டு தெளியலாம்.

இவ்வாறு அகப்புறச் சான்றுகளால் இறைவன் எடுத்துத் தந்தது 'உலகெலாம்' என்பதே அன்றி, 'உல கெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்பது அன்று என்பதை நாம் அறிதல் வேண்டும். இங்ஙனம் இருந் தும், போப் அவர்கள், 'அந்தச் சிலையில் (கூத்தப்பெரு மான் உருவில்) இருந்து ஒரு வாக்குக் கேட்கப்பட்டது. அதாவது, 'உணர்ந்து கொள்வதற்கும், சொற்களால் விளக்குதற்கும் அரியவன்' என்று கூறியுள்ளனர்.[1]

[1] Page XCV.

ஈண்டுப் போப் அவர்கள், 'உணர்ந்துகொள்ளுதற்கும், சொற்களால் விளக்குதற்கும் அரியவன்' என்பது, 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்' என்பதன் மொழிபெயர்ப்பாகும்.

அநபாயன், சேக்கிழாரது இளவலாம் பாலறுவாயருக்குச் செய்த சிறப்பை 'இவர் அமைச்சர்; இவர் பட்டமும் மன்றல் மாலைபுனை தொண்டைமான்' என வகுத்தபின் தமது மண்டலம் அன்று வற்பம் வர, வந்தடைந்தவரை ஆற்றல் செய்து 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' எனத் தமது பெயரை, எங்ஙனும் நிறுத்தினர்' என்று உமாபதி சிவம் கூறியுள்ளார். சேக்கிழார்க்குத் 'தொண்டர்சீர் பரவுவார்' என்ற பட்டம் இருக்கின்றதே அன்றித், 'தொண்டை மண்டலம் நின்று காத்த பெருமான்' என்றோ, மன்றல் மாலைபுனை தொண்டைமான்' என்றோ பட்டம் இருப்பதாக இதுவரையில் எவரும் கூறிலர். மேலும், சேக்கிழார் தில்லையிலேயே கூத்தப்பெருமானையும் அவனது தொண்டர்களின் திருவடிகளையும் போற்றி வாழ்ந்து இறைஅடி அடைந்தனர் என்றே உமாபதி சிவம் பாடியுள்ளார். இதனை,

'தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசில்
தூய தில்லைநகர் தன்னிலே
பண்டு மூவர்பதி கத்து வந்த அறு
பத்து மூவர்கதை தனை உணர்ந்து
அண்ட வாணர்அடி யார்கள் தம்முடன்
அருந்த வந்தனில் இருந்துபின்
இண்டை வைத்தசடை அம்ப லத்தவர்
எடுத்த பாதநிழல் எய்தினர்'

என்று பாடுவதிலிருந்து உணரலாம்.

இஃது இவ்வாறு இருக்கப் போப் அவர்கள் சேக்கிழார்க்கு அரசன் தொண்டை நாடு ஈந்து தமது இளவலான பாலறுவாயரது துணைகொண்டு தொண்டை நாட்டைச் சிலகாலம் ஆண்டு, பின் இறைவன் திருமுன் சென்றார் என்று குறிப்பிட்டுள்ளனர்.[1]

ஆக, இதுகாறும் காட்டிவந்த வரலாறுகளில் போப்பையர் அவர்கள் எங்கெங்கு மாறுபட்டனர்; எவ்வெவற்றை உணர்த்தாது விடுத்தனர்என்பனவற்றை எடுத்துக் காட்டினேம். டாக்டர்' ஜி. யூ. போப் அவர்கள் மேற்கு நாட்டு அறிஞராக இருந்தும், சைவப் பெருமக்களின் வரலாறுகளைப் பெரும்பாலும் ஒத்து வரும் நிலையில் எழுதி இருப்பதை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அவர் எழுதியுள்ள வரலாறுகளைப் படிக்கும்போதும், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் காட்டியுள்ள இடங்களைக் காணும்போதும் நமது மூல நூலில் உள்ள பாடல்களை அப்படியே தழுவி மொழி பெயர்த்துள்ளனர்; வரலாறுகளை எழுதியுள்ளனர் என்பது தெரியவரும். எடுத்துக்காட்டிற்காக இரண்டிடங்களை மட்டும் எழுதி இக்கட்டுரையினை முடிப்போமாக.

காரைக்கால் அம்மையார் இறைவனை நோக்கிக் கேட்ட வரங்கள் இன்னவை என்பதைச் சேக்கிழார் பெருமானார் 'இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்; பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி, அறவா நீ ஆடும்

---

[1] Page XCV.

போதுன் அடியின்கீழ் இருக்க என்றார்' என்று பாடியுள்ளனர். இதனை அப்படியே மொழிபெயர்த்துத்தந்த பெருமை போப்பவர்கட்கு உண்டு. இதனை,

'இவ்வுலகில் மீண்டும் பிறவாதிருத்தலையே நான் மகிழ்வுடன் விழைகின்றேன். ஆயினும் நான் பிறவி எடுத்தே ஆக வேண்டுமாயின், நான் அவ்வடிவிலும் எக்காலத்திலும் 'என் இறையே! நின்னை யான் மறவாதிருத்தல்வேண்டும். நீ தூய நடனத்தை ஆடும்போது, நின் திருவடியின் அருகே நின்று நின் புகழைப் பாடி மகிழும் பேறு கிடைக்கவேண்டும்' என்று மொழிபெயர்த்துள்ளார்.[1]

திண்ணனார் தம் திருவடியால் திருக்காளத்தி அப்பரது திருமுடி மலர்களைத் தள்ளுதல் 'திருமுருகனது சேயடி தம்மீது படுவதினும் இன்பம் தருகின்றது' என்றும், 'வாய் நீர், கங்கை நீரினும் புனிதமானது' என்றும் பொருள்படும் நிலையில் தொண்டர்சீர் பரவுவார் 'செருப்படிஅவ் விளம்பருவச் சேயடியில் சிறப்புடைத்தால்' என்றும், 'உயர்கங்கை முதல்தீர்த்தப் பொருபுனலின் எனக் கவன்தன் வாய்உமிழும் புனல் புனிதம்' என்றும், சிவகோசரியார் கனவில் இறைவர் கூறினான் எனப் பாடியுள்ளனர். அவற்றை அப்படியே போப் அவர்கள் மொழிபெயர்த்துத் தந்தனர். அம்மொழிபெயர்ப்பு:

'தோலினால் செய்யப்பட்ட காலணியின் தொடுகை எனக்கு என் திருமகன் முருகனது சிறு கை பட்டால் எத்தனை இன்பம் பயக்குமோ, அத்துணை மகிழ்ச்சியைத்

---

[1] Page 113.

தருகிறது. அவன்தன் வாயிலிருந்து தெளிக்கும் நீர் கங்கை நீரினும் தூயதாக எனக்குத் தோன்றுகிறது' என்பது. [1]

இங்ஙனம் ஊன்ஸி நம் சமய வரலாற்றை உணர்ந்திருந்தும், சிற்சில இடங்களில் மாறுபட எழுதி இருப்பதேன் என்ற ஆசங்கை சிலர்பால் எழலாம். இவ்வாறு சிற்சில மாறுன கருத்துகள் தம் நூலில் இருக்கக் கூடும் என்பதை அவரே உணர்ந்து, 'இந்த மொழி பெயர்ப்பு நூலில் ஏதேனும் ஒரு மொழி எனது மதிப்புக்குரிய தமிழ் நண்பர்களைப் புண்படுத்தும் நிலையில் இருப்பின், அதன்பொருட்டு முன்கூட்டியே மன்னிப்புக் கேட்டுக்கொள்கின்றேன்' என்று தம் பணிவு தோன்றப் பகர்ந்துள்ளார். 'If in this work any one word of mine should give pain to any of my valued Tamil friends, I ask forgiveness in advance' [1] என்னும் அவரது வாக்கைக் காண்க.

இம்மொழிகளை நாம் ஆழ நினைந்து வள்ளுவனர் வாய்மொழியாகிய 'பணியும்ஆம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' என்னும் குறளை நம் நினைவுக்குக் கொண்டுவந்து போப் அவர்களின் பண்பினைப் போற்றவேண்டியவராய் உள்ளோம்.

---

[1] Page XI

இக்கட்டுரையில் கொடுக்கப்பட்டுள்ள பக்க எண்கள், சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள ஆங்கிலத் திருவாசக மொழிபெயர்ப்பு நூலிற்கு இணங்கக் கொடுக்கப்பட்டன ஆகும்.

# 8. பிறர்மனை நோக்காப் பேராண்மை

பூந்தமிழ் மொழியில் பொலிவுற்று விளங்கும் கோவை நூல்கள் பல. அவை யாவும் கோவை எனும் தனித்த சொல்லால் குறிக்கப்படாமல், அக்கோவை, யார்மீது பாடப்பட்டதோ, எத்தலத்தின்மீது பாடப் பட்டதோ, அன்னார் பெயரையும், அத்தலத்தின் பெயரையும் சார்த்தியே வழங்கப்பட்டுவரும். எடுத்துக் காட்டாகத் தஞ்சைவாணன் கோவை, திருவாரூர் கோவை என்பனவற்றை முறையேகாட்டலாம். ஆனால், கோவை என்ற பெயராலேயே தனிப்பட்ட ஒரு நூலையே குறித்து வரும் கோவை திருக்கோவையார் ஒன்றே யாகும். கோவை என்னும் சொல்லுக்கு முன்னும் பின்னும் திரு என்னும் அடைமொழியும், ஆர் என்னும் மரியாதைப்பன்மை விகுதியும் முறையே இணைந்து யிருப்பதே இநூலின் சிறப்புக்கு ஒரு சீரிய காரண மாகும். இறைவனே இந்நூலைப் பாடுமாறு வாதவூர் அடிகளாரை வேண்டினார் என்னும் கர்ண பரம்பரை செய்தியும் இக்கோவையின் மாண்புக்கு மற்றும் ஓர் எடுத்துக்காட்டாகும். 'பாவை பாடின வாயால் ஒரு கோவை பாடுக' என்பதன்றோ இக்கர்ன பரம்பரை செய்தியினை வலியுறுத்திக்காட்டுவதற்குரிய பழமொழி?

பாவை என்பது திருவெம்பாவை. இது திருவாசகத்தில் அமைந்த ஒரு பகுதியாகும். கோவை என்பது திருக்கோவையார். இது ஒரு தனி நூல்.

இத்திருக்கோவையார் அகப்பொருட் செய்திகளை மட்டும் உணர்தற்குக் கருவியாக இருப்பது அன்று

அந்தணர்கள் இதனை வேதம் என்ற நோக்கத்தோடு படிப்பின் வேதமாகவே இது காட்சியளிக்கும். யோகியர் ஆகமங்களின் காரணமாயிருப்பது என்று அறிந்து படிப் பின் அப்படியே இஃது அப்பொருள்களைத் தன்னிடத்தே காட்டவல்லது. காம உணர்ச்சி உடையார் இது சிற் றின்ப நூல் எனக்கொண்டு சிந்தை செலுத்திப் பயில் வார்களானால், அச்சிற்றின்பப் பொருளையும் தரவல்ல தாய் மிளிருமிது. தர்க்கம்அறிந்த தக்கோர் இது தருக்க நூல் என்ற கண்கொண்டு கற்பாராயின், அங்ஙனமே இது தர்க்க நூலாகவே தயக்கமின்றிக் காணப்படும். புலவர்கள் இதனைத் தம் அறிவுக் கண்ணால் பார்க்கை யில் இலக்கண நூல் என்றே இயம்பிவிடுவர். இவ்வா றெல்லாம் இந்நூல் விளங்குவதை நன்கு துய்த்தே ஓர் அறிஞர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றைப் பாடியுள்ளார். அது,

'ஆரணங் காண்என்பர் அத்தணர்
யோகியர் ஆகமத்தின்
காரணங் காண்என்பர்; காமுகர்
காமநன் னூலதென்பர்;
ஏரணங் காண்என்பர்; எண்ணர்;
எழுத்தென்பர் இன்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக்
கோவையைச் செப்பிடினே'

என்பது.

இன்னோரன்ன சிறப்பு இயல்புகள் இந்நூலில் இருப்பதனால்தான், நம்பியாண்டார் நம்பிகள் தம் கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில், 'சிவனைத் தனக்கு நெருங்கிய உறவாகக்கொண்ட திருவாதவூர் அடிகள் பாடியுள்ள திருக்கோவையாரைக் கண்டபின்

ஒருவர், தாமும் ஒரு கோவை பாட வேண்டுமென முயல்வாரானால், அம்முயற்சி பிறர் தம்மைச் சிரிக்குமாறு செய்யும் முயற்சியாகும்' என்னும் பொருளில்,

'வருவா சகத்தினின் முற்றுணர்ந்
தோனைவண் தில்லைமன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன்
செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண்
டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி
பாடிச் சிரிப்பிப்பரே'

என்று பாடி அறிவித்துள்ளனர்.

தமிழ் மொழியினைப் பன்முறை பயின்றும் நுட்பங்களை அறிய இயலாது இடர்ப்படுபவர்கள் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் ஆகிய இம்மூன்று நூல்களைப் பயின்றார்களானால் தம் ஐயங்களைப்போக்கிக் கொள்வர் என்பதை இலக்கணக் கொத்து என்னும் நூல்,

'பல்கால் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினும் முழங்கும்'

என்று தெள்ளத் தெளியக் கூறுகிறது.

இங்ஙனம் பல்லோராலும் பாராட்டப்பட்ட பெருமைசான்ற திருக்கோவையார் நானூறு செய்யுட்களைக்கொண்டது. அவற்றுள், ஒரு செய்யுளை ஈண்டு எடுத்து, அதில் காணப்படும் பொருட்சுவையினை இனிது நுகர்வோமாக.

சிலகாலம் களவுப்புணர்ச்சியில் ஈடுபட்டுக் காதல் உணர்ச்சிமுதிர்ந்த இளையநங்கை தன் இல்லம் விடுத்துத் தன் காதலனோடு சென்றுவிட்டனள். இந்தச் செய்தி அவ்விளைய மாதினைக் கண்ணும் கருத்துமாக இளமை தொட்டு வளர்த்துவந்த செவிலித்தாய்க்குத் தெரிந்தது. தன்னிடத்திலும் கூறாது தன் காதலனுடன் சென்றுவிட்டனளே என்ற துயரால் மிகவும் வாடினள் அச்செவிலி. குலமகட்குத் தெய்வம் கொழுநன்தானே என்பது, அச் செவிலுக்கு நினைவு வராவண்ணம், தான் வளர்த்த பெண்ணினிடத்து வைத்த அன்பு மறக்கச்செய்தது.

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே'

என்று அப்பர் பெருமான், உண்மைக் காதலி உண்மைக் காதலன்பால் கொண்ட வேட்கை காரணமாக மேற் கொள்ளும் இயல்புகளை எடுத்துக்கூறியுள்ளதையும் தன் எண்ணத்தில்கொண்டு வந்திலள். வீட்டில் சிறிதும் தங்க மனம்கொள்ளாமல் தன் மகளைத் தேடிக்கொண்டு வர வெளியே கிளம்பினாள். தன் எதிரே காண்பாரை எல்லாம் தன் மகளைப்பற்றி உசாவலானாள். எவரும் தன் மகளைப்பற்றிய தகவலை கூறிலர். வருத்தம் மிகக் கொண்டனள். முற்றுந்துறந்த முனிவர்களும் தம் பழைய வாசனைகாரணமாகத் தாம் இல்லறத்திலிருந்து

இன்பம் துய்த்தபோது உடன் இருந்த மக்களைக் காண நேரின் அன்புகாட்டத் தொடங்குவர் என்ற கருத்தில் அதிவீரராமபாண்டியர், 'கடந்துளோர்களும் கடப்பரோ மக்கள்மேல் காதல்' என்று கூறுவாராயின், மங்கை நல்லார்கள் தாம் மகிழ்வுடன் பாலூட்டிச் சீராட்டித் தாலாட்டி வளர்த்த மக்கள், தம்மைத்துணந்துசென்றால் வருந்தாது இருப்பரோ? ஒருகாலும் இரார். ஆகவே, செவிலித்தாய் தன் மகளைத் தேடாது இல்லம் திரும்பக் கூடாதென்று மேலும் மேலும் தேடலானாள்.

இப்படி அவள் தேடிக்கொண்டு செல்லும்போது, தன் எதிரே சிறிது சேய்மைக்கண், ஆணும் பெண்ணு மாக இருவர் வருவதைக் கண்ணுற்றாள். அவர்கள் தன் திசை நோக்கி வரவரத் தன் வருத்தமும் குறையத் தொடங்கியது. மகிழ்ச்சியும் பொங்கத் தொடங்கியது. தன் மகள் தன் இல்லம் நோக்கித் திரும்பிவிட்டாள் என்று எண்ணிவிட்டாள், அந்தோ! அத்தம்பதிகள் அருகில் வந்ததும், பெரிய ஏமாற்றம் அடைந்தனள். தோன்றிய இன்பம் தொலை தூரத்தில் போய்விட்டது. இதற்குக் காரணம் அவ்விரு காதலர்கள் இவளது மக ளும் மருமகனும் அல்லர். வேறு காதலர்; என்செய் வாள்? எண்ணத்தில் இடி விழுந்தது. என்றாலும், இவர்களையேனும் நம்மகளைப்பற்றி விசாரிப்போம் என்று கருதி, 'காதலில் திளைக்கும் கட்டழகர்களே! உங்களைக் கண்டதும் என் மகளும், அவளை அழைத்துச் சென்ற மருகனும் திரும்பிவிட்டனர் என்று எண்ணி மகிழ்ந்தேன். ஆனால், நீங்கள் அருகில் அண்மியதும், நம்மவர் அல்லர் என்பது தெரியவந்தது. என்றாலும், நீங்கள் வரும் வழியே, உம் எதிரே உம்மைப்போன்று

ஆணும் பெண்ணுமாக அன்புடன் இணைந்து சென்ற இருவரைப் பார்த்திர்களா?' என்று வினவினுள்.

இங்கேதான் கோவையில் எடுத்த ஒரு பாவின் நயம் புலப்படும். இங்குக் 'கற்பு என்னும் பண்பு யாருக்கு உரியது? பெண்களுக்கே உரிய பண்பா? அன்றி, ஆண்களுக்கும் இருக்கவேண்டிய பண்பா?' என்னும் ஆசங்கை நீங்கும் இடமாகும். இந்த வினுக்கள் எழுவதிலிருந்து கற்பு, பெண்களுக்குமட்டும் உரிய பண்பன்று. ஆண் மக்களுக்கும் அமையவேண்டிய பண்பாகும் என்பதும் தொனிக்கின்றது. இதனை நன்கு வற்புறுத்தவே கம்பரும் கோசலநாட்டு மக்கள் இயல்புகளை எடுத்து இயம்பும்போது,

'ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பு நெறியின் புறம்செலாக்
கோசலம்புனை ஆற்றணி கூறுவாம்'

என்றனர்.

இத்தகைய சீரிய கருத்தைக் கம்பர் யாண்டுக் கண்டனர்? நமது திருக்கோவையாரில் அன்றோ கண்டனர்?

இப்பாட்டின் பொருள் யாது? ஆண் மக்களின் ஐம்பொறிகளும், மாதர்களின் கண்களும் மெய்ந் நெறியை விட்டுப் பொய் நெறியில் புகா என்பதன்றோ? அதாவது தம் ஒழுக்க நெறியினின்று கோசலைநாட்டு ஆண்களும் பெண்களும் விலகார் என்பதன்றோ? ஆகவே, இப்பாடற் கருத்தால் ஆண்களும் கற்புநெறி

(ஒழுக்க நெறி)யினின்று விலகுதல் கூடாது என்பதும் அவர்களும் பெண்டிரைப்போலக் கற்புடையராய்த் திகழவேண்டும் என்பதும் அல்லவா புலனாகின்றன?

இந்தக் கருத்தினை மனத்தில் கொண்டு செவிலித் தாய் விடுத்த வினாவிற்கு அக்காதலர்களுள் ஆண்மகன் அளித்த விடையும் பேச்சும் நமக்கு நம் தமிழ் மக்களின் பண்பாட்டை நன்கு புலப்படுத்தி நிற்கின்றன. அதாவது, 'அம்மா! நீங்கள் கூறுவதுபோல் எனக்கு எதிரே ஆண் சிங்கம்போன்ற ஒரு காளையைக் கண்ணுற்றேன். ஆனால், அவன் பக்கத்தில் ஒரு பெண்ணும் இருந்தாள் என நீ கூறும் கூற்றால் விளங்குகிறது. ஒரு வேளை அம்மாதினை என் மனாட்டி கண்டனளோ, என்னவோ யான் அறியேன். ஆகவே, அவளைக் கேட்டுப் பார்க்கின்றேன்' என்று கூறி, 'மாதே! இவ்வம்மையார் என்னவோ கேட்கிறார்களே! அதைப்பற்றி நீ அறிந்ததென்ன?' என்று வினவினான். ஆ! என்னே தமிழகத்தின் பண்பாடு!

இக்கருத்து அடங்கிய பா தான்,

'மீண்டார் எனவுவந் தேன்கண்டு
நும்மைஇம் மேதகவே
பூண்டார் இருவர்முன் போயி
னரேபுலி யூர்எனைநின்
ருண்டான் அருவரை ஆளியன்
னானைக்கண் டேன்அயலே
தூண்டா விளக்கனை யாய்என்னை
யோஅன்னை சொல்லியதே'

என்பது.

இப்பாடலால் நாம் அறியும் குறிப்புகள் யாவை? ஆண் ஆணையே பார்த்தானே அன்றி, அடுத்திருந்த பெண்ணைப் பார்த்திலன் என்பதும், பெண், பெண்ணையே பார்த்தனள்; அடுத்திருந்த ஆணினைப் பார்த்திலள் என்பதும் அல்லவோ! இஃதன்றோ பண்டைக் காலத்துத் தமிழர் பண்பாடு.

இத்தருணத்தில் நாம் வள்ளுவர் வாக்காகிய 'பிறன் மனை நோக்காத பேர்ஆண்மை சான்றோர்க்கு, அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு' என்ற குறளை நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும் அன்றோ?

——

# 9. நாவுக்கரசரும் நகைச்சுவையும்

சுவை என்றதும், நாவால் உணரப்படுகிற இனிப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு ஆகிய அறு வகைச் சுவைகளே நம் நினைவுக்கு வரக்கூடும். ஆனால், இவ்வறுவகைச் சுவையினும் வேறுபட்ட சுவைகளும் உண்டு. அவையே, நகை,அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன. இவற்றை எண்வகை மெய்ப்பாடு என்பர். இங்ஙனம் இருக்க, ஒருசிலர் தமிழில் நகைச்சுவைப் பாடல்களில்லை என்று கூற முன்வருகின்றனர். அந்தோ! அவர்களின் அறிவின் தெளிவை என்னென்று கூறுவது? அத் தகையவர்கள் உளம்கொளும் வகையில், நகைச்சுவைக் கவிகள் செந்தமிழ் நூல்களில் உண்டு என்பதை விளக் கவே, இக்கட்டுரை எழுந்ததென்க. பல நூல்களி லிருந்து எடுத்துக் காட்டக்கூடுமாயினும், ஈண்டு நகைச் சுவைக் கவிகட்கு நாவுக்கரசரது நற்பாடல்களையே நற்றுணையாகக் கொள்வோமாக.

'கிடந்தபாம்பு அருகுகண்டு அரிவை பேதுறக்
கிடந்தபாம்பு அவளைஓர் மயில்என்று ஐயுறக்
கிடந்தநீர்ச் சடைமிசை பிறையும் ஏங்கவே
கிடந்துதான் நகுதலைக் கெடில வாணரே'

என்ற பாடலை முதலில் எடுத்துக்கொள்வோம். இதில், இறைவன் பூண்டுள்ள பாம்பு, பிறை, தலைமாலை இவற் றைக்கொண்டு ஒரு நகைச்சுவை நாடகத்தை அப்பர் காட்டுகிறார். பாம்பைக் கண்டு பிரியாப் பிராட்டியாம்

உமாதேவி அஞ்சினாளாம். பாம்பு, தேவியை மயில் என்று எண்ணி, அது தன்னைக் கொத்திக்கொன்றுவிடும் என்று அஞ்சியதாம். ஒரு பக்கம் பிறைச்சந்திரன் பாம்பைக் கண்டு, இப்பாம்பு நம்மை விழுங்கிவிடுமோ என்று அஞ்சியதாம். அந்த அச்சக் காட்சியைக்கண்ட இறைவன் பூண்ட தலைமாலைகள் நகைத்தனவாம். இப் பாடலில் நகைச்சுவை ததும்புவதைக் காண்க.

இதே கருத்துடைய நகைச்சுவைப் பாடல் மற்றொன்று,

'நாகத்தை நங்கை அஞ்ச
நங்கையை மஞ்ஞை என்று
வேகத்தைத் தவிர நாகம்
வேழத்தின் உரிவை போர்த்துப்
பாகத்தில் நிமிர்தல் செய்யாத்
திங்களை மின்என்று அஞ்சி
ஆகத்தில் கிடந்த நாகம்
அடங்கும்ஆ ரூரனார்க்கே'

என்பது. இதில் அமைந்த நகைச்சுவை, பாம்பைக் கண்டு பார்வதி அஞ்ச, அப்பார்வதியை நாகம் மயில் என்று அஞ்ச, இவற்றைக் கண்ட இறைவர் பாம்புகளை மறைத்துக்கொள்ள யானைத் தோலைப் போர்த்துக் கொண்டாராம். இப்படிப் போர்த்து மறைத்தும், ஒரு பாம்பு எப்படியோ சடைமுடிச் சந்திரனைப் பார்த்து விட்டது. அஃது அதனை மின்என்று எண்ணிவிட்ட தாம். அதனால் அப்பாம்பு அம்மின்னுக்கு அஞ்சித் தலையை நீட்டாது அடங்கிக்கொண்டதாம்!

மூன்றாவதாக ஒரு பாட்டையும் நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டலாம். அதன் பொருள் :

அப்பர் ஆண்டவனை விளித்து, 'ஐயா உம்மிடம் ஒரு விண்ணப்பம் விடுக்க விரும்புகிறேன். அதாவது, 'நீங்கள் கங்கை என்பவளைச் சடையில் மறைத்துவைத்துள்ளீர், இதனை உமது இடப்பாகம்பிரியா வாழ்க்கைத் துணைவியாம் உமையாள் தெரிந்துகொண்டால், அவள் தனது வாழ்வு பங்கு போடப்பட்டது என்று உளங்கொண்டு, உம்பால் ஊடல் கொள்வாளே' என்றனர்.

இத்தகைய நகைச்சுவை கொண்ட பாடல்,

'வங்க மலிகடல் நாகைக்கா
    ரோணத்தெம் வானவனே
எங்கள்பெருமான்ஓர் விண்ணப்பம்
    உண்டது கேட்டருளீர்
கங்கை சடையுள் கரந்தாய்அக்
    கள்ளத்தை மெள்ளஉமை
நங்கை அறியில்பொல் லாதுகண்
    டாய்எங்கள் நாயகனே!'

என்பது.

இவ்வளவு எச்சரிக்கை செய்தும், கங்கை சடையில் இருப்பதை உமாதேவி எப்படியோ தெரிந்துகொண்டாள். ஊடலும் மேற்கொண்டனள். பார்த்தார் பரமனார். அவளது ஊடலை ஒழிக்கப் பாடவும் ஆடவும் தொடங்கினார். இதனை அப்பர்பெருமானார்,

'சூடினார் கங்கை யாளைச் சூடிய துழனி கேட்டங்கு
ஊடினாள் நங்கை யாளும் ஊடலை ஒழிக்க வேண்டிப்
பாடினார் சாம வேதம் பாடிய பாணி யாலே
ஆடினார் கெடில வேலி அதிகைவீ ரட்ட னாரே'

என்று பாடியுள்ளனர்.

இறுதியாக ஒரு பாடலை நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டி, இக்கட்டுரையினை முடிப்போமாக.

சுவாமி முப்புரங்களை அழிக்கப் புறப்பட்டனர். அதுபோது இடக்கையில் வில்லைப்பற்றி அதில் நாணை ஏற்றிப் பகைவர்கள் முன் நிறுத்தி, வலக்கையினால் அம்பை நாணில் பூட்டிப் பின் நோக்கித் தனது வலக்காது வரை இழுத்து வீரப்பொலிவுடன் நின்றனர். இவற்றுள் இடக்கை தேவியின் கை. வலக்கை இறைவன் கை. அதாவது இறைவன் இடப்பாகத்தில் இறைவியைக் கொண்டு திகழ்தலின் இவ்வாறு கருதப் பட்டது. ஆகவே, போரில் முன் நிற்பவள் தேவி என்பதும், பின் நிற்பவர் இறைவர் என்பதும் பெறப்படு கின்றன. அப்படியிருக்க, இறைவர்தாம் முப்புரங்களை அழித்தார் என்பது கூறமுடியுமா என்னும் கருத்தை உள்ளடக்கி நகைச்சுவை ததும்ப அப்பர் பெருமானார் பாடிய பாட்டு,

'கற்றார் பயில்கடல் நாகைக்கா
 ரோணத்தெம் கண்ணுதலே
விற்றாங் கியகரம் வேல்நெடுங்
 கண்ணி வியன்கரமேல்
நற்றாள் நெடுஞ்சிலை நாணை
 வலித்தகரம் நின்கரமேல்
செற்றார் புரம்செற்ற சேவகம்
 என்னைகொல் செப்புமினே'

என்பது.

ஆக, இதுவரை கூறியவற்றால். நமது அருள் நூல் களைத் தோத்திர நூலாக மட்டும் கருதாமல், சிறந்த இலக்கிய நூலாகவும் கருதி எல்லோரும் படிக்க வேண்டும் என்பது புலனாகின்றது அன்றோ?



Printed at Sri Bharathi Press, Choolai, Madras-7.